Acc. No. 10592.

ஏப்ரல் '94
ஸ்ரீபவ - சித்திரை

# அமுதசுரபி

எங்கள் தமிழ் மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே - பாரதியார்

மலர் : 46
இதழ் : 12








○ பதிப்பாளர் : ஏ.வி.எஸ்.ராஜா ○ கௌரவ இலக்கிய ஆலோசகர் : என்.வி. சுப்பிரமணியன் ஐ.ஆர்.டி.எஸ்., ○ ஆசிரியர் : கலைமாமணி விக்கிரமன் ○ இதழ் ஆப்செட் அமைப்பு : சிவகுமார் ○ தனி இதழ் விலை ரூ. 6/- ○ ஆண்டு சந்தா ரூ. 72/- ○ ஆயுள் சந்தா ரூ. 1000/- ○ சென்னைக் காட்சிகள் வண்ணப்படம் : யூ. ராஜகோபால்.



# ஜெயித்த கட்சி

கர்மயோகி

ஓர் இளைஞனை நோக்கி, "ஏன் இந்த அரசியல் கட்சியில் சேர்ந்திருக்கிறாய்? நான் உன்னை அந்தக் கட்சியில் சேருவாய் என எதிர் பார்த்தேன். இது சரியில்லாத கட்சியாயிற்றே! என்றால், "அந்தக் கட்சி ஜெயிக்காது, இது நிச்சயம் வெற்றி பெறும் கட்சி. அதனால்தான் இதில் சேர்ந்தேன்" என்றான். இளமையில் இலட்சியமும், வயதானபின் காரியத்தை நாடு வதும் இயல்பு. இளம் வயதில் காரியத்தை மட்டும் நாடும் மனப்பான்மையைப் பல இடங் களில் பார்க்கலாம். இப்படிப்பட்ட நோக்க முடையவர் அன்னையை ஏற்றுக்கொண்டு, தங்கள் காரியம் கூடிவர வேண்டும் என்று பிரார்த்தனை செய்தால், அநேகமாகப் பத் தில் ஒன்பது நிறைவேறும், சிலருக்குப் பத்தும் பலிக்கும்.

அன்னை விரும்புவது adventure, வெற்றியைக் கருதாது நல்லதை தைரியமாக மேற்கொள்ளும் மனப்பான்மையை அன்னை பெரிதும் பாராட்டு கிறார். வெற்றியை மட்டும் நாடும் மனப்பான் மையை அறவே புறக்கணித்து, நல்லதை மட்டும் தைரியமாக, இலட்சியமாகச் செய்ய முன் வருப வர், அன்னையை முழுவதும் ஏற்றுக் கொண் டால், அவருக்குப் பூரண வெற்றியை அன்னை தவறாது அளிக்கிறார்.

காரியம் மட்டும் கூடிவந்தால் போதும், அதற் காக எதையும் செய்யலாம், எப்படியாவது நடந்தால் சரி என்ற மனப்பான்மை சமூகத்தில் பரவலாக உள்ளது. அன்னை அவர்களை விலக்குவதில்லை. அவர்கள் பிரார்த்தனை யைப் பூர்த்தி செய்தாலும், அவர்கள் நோக் கத்தை அன்னை அறவே விலக்குகிறார்.

வெற்றியா, தோல்வியா என்ற கேள்வியை எழுப்பாமல், காரியம் நல்லதா, கெட்டதா; முயன்றால் கூடிவரும் சந்தர்ப்பம் உண்டா, இலட்சியமானதா, அறிவுக்குப் பொருத்த மானதா, என் வாழ்வு நிலைக்கு இதை மேற் கொள்வது சரியா என்ற கேள்விகளை மட்டும் கேட்டும், நல்லதானால் ஏற்றுக் கொள்ளும் மனப்பான்மையுமிருந்தால், அன்னை அவர்க ளுக்கு நூற்றுக்கு நூறு வெற்றியை அளிக் கிறார்.

ஜெயித்த கட்சி என் கட்சி என்ற மனப் பான்மையில்லாமல், ஜெயத்திற்காக முனையும் பக்தர் கட்சி ஜெயித்த கட்சி என்பது அன்பர்கள் அனுபவம்.

பேரம் என்றால் நமக்குச் சாதகமாகப் பேசுதல் என்று பொருள். வியாபாரத்தில் இலாபத்தைப் பங்கு போட வேண்டிய நேரத்தில் ஒரு பார்ட்னர் மற்றவருக்கு தான் சாதகமாகப் பேச வேண்டி ஐந்தில் ஒரு பங்கு கேட்பார். அடுத்தவர் பாதி கொடுப்பதே முறை என்றார். அதுவே பக்தர்கள் அனுபவம். 1500 ரூபாய்க்குக் குறைந்து வேலையை முடித்துக் கொள்ள மாட்டேன் என்ற நிலையிலுள்ளவர் புது முத லாளியிடம் வேலையை ஏற்றுக் கொள்ளும் நேரத்தில்,"என்ன சம்பளம்"என்றார். "உனக்கு வேண்டியதைக் கேள்" என்ற முதலாளி 3500 ரூபாய் கொடுக்க நினைத்தார். கேட்பவர் ரூ. 3000 வேண்டும் என்றார். உனக்கு வேண்டி யதைக் கேள் என்ற முதலாளியின் மன நிலையைப் பிரதிபலித்து நீங்கள் கொடுப்பதை வாங்கிக் கொள்கிறேன் என்றால் 3500 கிடைத் திருக்கும். கேட்டுப் பெறும் பொழுது அதிகம் வரும் என்றால் அது சிறு உண்மை. கேட்காமல் பெற்றால் அன்னை அளிப்பது கிடைக்கும் என்பது பெரிய உண்மை.

ஐந்தாம் வகுப்பு வரை படித்தவர் B.A. பட்டம் பெற முயல்வது, பரீட்சைக்கு இரண்டு மாத மிருக்கும்பொழுது புதியதாக இங்கிலீஷ் எழுதக்

# அது மட்டும் ஏன்?

என்னைக் கன்னியென்றாய்,
மலர் கொடுத்தாய்!
முழுமதி என்றாய்,
திலகமிட்டாய்!



காதலி என்றாய்,
கட்டி யணைத்தாய்!

உயிரென்றாய்
சுகம் தந்தாய்!

தாலி மட்டும் கட்ட-
மறுத்தாய்!

ஏன்?- என்றேன்;
'விதவை!' என்கிறாயே....!

**எம். சகுந்தலாதேவி.**

கற்றுக் கொள்ள சம்மதிப்பது, தன் நிலத்தின் பெறுமானத்தைவிட அதிக விலையுள்ள போர் வெல் (borewell) போட்டுப்பயிர் செய்ய முயல்வது, இந்தியாவுக்கு அஹிம்சையால் சுதந்தரம் பெற முயல்வது, ஆடிட்டர் தொழிலை 45ஆம் வயதில் விட்டுவிட்டுப் புதிய தொழில் கற்றுக் கொள்ள முனைவது, ஏழ்மை நிறைந்த மக்களை நம்பி எந்த ஈடும் இல்லாமல் பெரும் தொகையைக் கடனாகக் கொடுப்பது, சர்க்கார் உத்தியோகத்தை ராஜினாமா செய்து அன்னை சேவையை மேற்கொள்ள நினைப்பது, பரம்பரையான ஆசாரப் பழக்கங்களை விட்டு, அன்னையை ஏற்றுக்கொள்ள முன்வருவது, கல்லூரிப் பேராசிரியர் வேலையை ராஜினாமா செய்து, 50ஆம் வயதில் புதிய பயிற்சியை மேற்கொள்வது, 55ஆம் வயதில் பெரிய உத்தியோகத்தை விட்டு, புதிய தொழிலை ஆரம்பிக்கத் துணிவது ஆகியவை அன்னை பாராட்டும் நோக்கங்கள். அதுவே அன்னை வழி. அவர்களுக்கு அன்னை பூரண வெற்றியை உறுதி செய்கிறார். மேற்சொன்னவர்கள் வெற்றி பெற்றவர்கள்.

நாமறிந்த உலகில் இதுபோன்ற முயற்சியில் பத்தில் ஒருவர் ஜெயிப்பது வழக்கம். அன்னையின் உலகில் இதுபோன்ற முயற்சியுடையவர் அனைவருக்கும் அன்னை தவறாது வெற்றியை வழங்குகிறார்.

நம் கட்சியில் நியாயமிருந்தாலும், கோர்ட்டில் உள்ளதைச் சொன்னால் ஜெயிக்க முடியாது. கோர்ட் ஏற்றுக் கொள்வதைச் சொல்ல வேண்டும் என்பது வழக்கு. தான் விற்றுவிட்ட வீட்டை ரிஜிஸ்தர் செய்து கொடுக்கவில்லை, வாங்கியவர் நெருங்கிய நண்பர் என்பதால் வற்புறுத்திக் கேட்கவில்லை என்ற சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி அன்பர்மீது 'வீடு வாடகைக்குக்கொடுக்கப்பட்டது, காலி செய்' என்று கோர்ட்டில் கேஸ் போட்டார் அடாவடிக்காரர். நடந்ததை அன்பர் கோர்ட்டில் அப்படியே சொல்வது ஏமாளித்தனம் என்றதை மீறிச் சொல்லிய பொழுது, கோர்ட் அடாவடிக்காரன் கேஸை டிஸ்மிஸ் செய்தது. அதன் பிறகு அவன் ஏற்பாடு செய்த மத்தியஸ்தம் அவனுக்கு எதிராகப் பேசியது. வன்முறையைக் கையாளப் போன பொழுது அவன் மீதே திரும்பியது.

உள்ளதை உள்ளபடிப் பேசினால் அன்னையிடம் பூரண ஜெயமுண்டு. அன்னை கட்சி ஜெயித்த கட்சி. அதை உண்மையாகப் பின்பற்றினால் ஜெயம் தவிர வேறெதற்கும் வழியில்லை.

தான் ஆரம்பித்துப் பரிசாகக் கொடுத்த தொழிலிலிருந்து சரக்கைத் தனக்கே தர மறுப்பவரிடமும், வெறுப்பையும், எதிர்ப்பையும் காண்பிக்காமல், தன்னுடைய ஒரு கோடி ரூபாய் தொழிலைச் சிரமப்பட்டு, மன அடக்கத்துடன் நடத்திய அன்பரைத் தேடி, இதுவரை அவரால் நினைக்க முடியாத வாய்ப்புகள் உற்பத்தியாகி வாரத்திற்கு ஒரு கோடி சம்பாதிக்கும் சந்தர்ப்பம் பத்து தடவை தேடி வந்துள்ளது. தன்னுரிமையைப் பெருந்தன்மையாக விட்டுக் கொடுத்து, தன்னை ஒரு வாடிக்கைக்காரராக நடத்தும் மனப்பான்மை விசால மனப்பான்மை. அதையும் தனக்குச் சாதகமாக மற்றவர் பயன்படுத்தும்பொழுது பொறுமையாக இருப்பது தெய்விகக் குணம். அன்னை அதற்களித்த பரிசு பெரியது. அவர்களுக்கு வெற்றி மட்டும் உண்டு. அவர்கள் கட்சி என்றும் ஜெயித்த கட்சி. அதற்குத் தோல்வியே தெரியாது.

நம்பிக்கையுள்ளவர் அன்னையிடம் பெறும் வெற்றி பெரியது. பொறுமையுள்ளவர் பெறுவது அதைப் போன்ற சிறப்புடையது. வெற்றியைக் கருதாது, முயற்சியின் புனிதத்தை மட்டும் கருதுபவர் அன்னைக்குகந்தவர். அவர்களுக்குரியது வெற்றி, ஏனெனில் அவர்களே வெற்றி.

ஃ

# "தெய்விக ஞானம்"

மயிலை குருஜி சுந்தரராம் சுவாமிகள்



ஆண்டவன் ஜோதிமயமானவன். எங்கும், எதிலும் ஒளி வெள்ளமாக வியாபித்திருக்கிறான். அவனை அறியாதவர்களே இருட்டாக இருக்கிறார்கள். இருட்டுக்குள்ளே இருக்கிற மனிதர்கள், இறைவனை வழிபடுவதன் மூலம் வெளிச்சத்தை நெருங்குகிறார்கள். வெளிச்சம் எந்தத் திசையிலே இருக்கிறது என்று சுட்டிக் காட்டி வழிநடத்தக் குருமார்கள் இருக்கிறார்கள். அவர்களைப் புரிந்து கொண்டு, அவர்கள் காட்டும் நெறிவழி நடந்தால், ஆண்டவனாகிய ஒளிப் பிரவாகத்தில் ஐக்கியமாகலாம்.

இன்றைக்கு இந்த உலகத்திலே நடைபெறும் சம்பவங்களைப் பார்க்கும் பொழுது மனித நேயம் என்பது அரும்பொருள் காட்சியகத்தில் வைக்க வேண்டிய ஒரு பொருளாகிவிடுமோ என்று எண்ணத் தோன்றுகிறது.

மனிதன் தன் அறிவினால் தனக்குள்ளே கட்டிப் போட்டிருக்கும் மிருகங்கள், அந்தக் கட்டுகளை அவிழ்த்துக் கொண்டு வெளியே வந்து விடுகின்றன. வன்முறைகளில் ஈடுபட்டுத் தலைவிரித்தாடுகின்றன. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் இறைவனும் இருக்கிறான்; அகங்காரம் என்னும் அரக்கனும் இருக்கிறான். அரக்கனை அடக்கி வைப்பதற்கென்றே அறிவைக் கொடுத்திருக்கிறான் ஆண்டவன். அறிவு பலவீனப்படும்போது அரக்கன் வெளியே வந்து விடுகிறான். அதன் விளைவுதான் ஆர்ப்பாட்டங்களும், வன்முறைகளும். ஆன்மிகம் ஒன்றுதான் அறிவைப் பலசாலியாக ஆக்குகிறது. ஆன்மிகத்தைத் தழைக்கச் செய்வதன் மூலமே அரக்க குணங்களை வீழ்த்த முடியும். ஆன்மிகம் தழைப்பதற்கு தெய்விக ஞானம் வேண்டும். இந்த தெய்விக ஞானம் ஒவ்வொருவரும் பெறுவதற்குச் குருவின் அருள் வேண்டும்.

இந்த லோகத்திலே அக்காலத்தில் இருந்து இக்காலத்து வரையில் எத்தனையோ மகா தத்துவங்கள் நிறைந்த ஞானிகளும், யோகீஸ்வரர்களும், மகா சித்தர்களும் மானிட ஜென்மங்கள் எடுத்து இந்த ஸ்தூல திரேகம் மறைந்து சூட்சுமமாக இருந்து கொண்டே இருக்கிறார்கள். பார்க்கப் போனால் பற்பல ஆண்டுகளுக்கு முன்பு தெய்வங்களும்கூட அவதார தத்துவ ரீதியாகப் பிறப்பு எடுத்து மக்களுடன் மக்களாக வளர்ந்தோங்கி வளர்ந்து அளவற்ற வகையில் துன்பங்களுக்கு ஈடுபட்டுத் தனக்கும் லோகத்திலே ஒரே நீதிதானென்று எல்லோரும் புரிந்து கொள்ளும் வகையிலே வாழ்க்கையின் வேதாந்தத்தைச் சற்றேனும் தயக்கமின்றித் தெளிவு காட்டியுள்ளார்கள். அவர்களும் சாதாரண மனிதர்களைப் போல் இறந்துவிட்டார்கள். இதனால் நாம் அறிவது எந்த ஜென்மமாக இருந்தாலும் கர்மா சாரங்களுக்கு ஏற்றவாறு அவரவர் முடிவு பெற்றுத்தான் தீரவேண்டும் என்கிற தெய்விக நீதி. எது எப்படி இருந்தபோதிலும், நாம் இந்த ஜென்மத்திலே அந்த அரிய பெரிய சாதனைகளாக விளங்கக் கூடிய மிகமிகத் தத்துவார்த்தமுள்ள வேதாந்த சித்தாந்தப் பொருள் அம்சங்களைத் தெளிவுறப் புரிந்து கொண்டு நம்மால் முடிந்த மட்டில் அதனை நம் வாழ்க்கையில் கடைப்பிடித்தால் பிறர் நலம் பெறுவதுடன் நாமும் நலம் பெறலாம்.

மனசாட்சி என்பது எல்லா மனிதனிடமும் உள்ளது. இதைச் சிலர் மதிக்கிறார்கள்; பலர் மிதிக்கிறார்கள். இது யாருக்கும் தீய வழியைக் காட்டாது. ஆனால் இதை மதிக்காதவன் கெட்டு அழிவது நிச்சயம். ஒருவன் தன் மனசாட்சிக்கு விரோதமான முறையில் நடந்து கொள்ளாமல் எப்படிப்பட்டத் துன்பங்களிலும் நேர்மையாக நடந்து கொண்டால் அவனைத் தெய்வம் சத்தியமாகக் கைவிடாது. நாம் நம் மனத்திற்கு அடிமையாகக் கூடாது. அதை நமக்கு அடிமைப்படுத்திக் கொள்ள வேண்டும். அவரவர் மனத்திலுள்ள தீய எண்ணங்களை நீக்கி மனத்தையே கோயிலாக்கி, வழிபடும் தெய்வம் எதுவாக இருந்தாலும் சரி - தூய்மையான பக்தியோடும் அன்போடும் பிரார்த்திக்க வேண்டும். அந்த பக்தியிலும் சுயநலம் இருக்கக்கூடாது. நாம் பிறருக்காக வாழவேண்டும்; பிறரைத் துன்புறுத்தாது வாழ வேண்டும். மனசாட்சி என்கிற ஆயுதம் மிகவும் சக்தி வாய்ந்த ஆயுதம். மனதைக் கட்டுப்படுத்தி மனசாட்சிக்கு அடங்கி நடப்பவன் எல்லா விதத்திலும் மேன்மையடைந்து இருப்பான் என்பது தெய்விக சத்தியம்.

அரிதான மனிதப்பிறவி எடுத்த நாம் இப்பிறப்பில் 'நல்லதையே செய்ய வேண்டும், நல்லதையே எண்ண வேண்டும்'. "பிறர்வாழ நாம் வாழ" என்ற தத்துவத்தின் அடிப்படையில், எவர் எப்படிப் பட்டவராயினும், எச்சாதியினராயினும், எம் மதத்தைச் சார்ந்தவராயினும், அவர்பால் அன்பு கொண்டு சகோதர தத்துவத்தை நிலைநாட்ட முயல வேண்டும்.

உலகில் அகங்காரப்பேய் ஒழிந்து, அனைவரும் தெய்விக அமைதி கொண்ட ஞானத்துடனே அன்புள்ளத்துடனும், மனித நேயத்துடனும், ஒருவரையொருவர் பரஸ்பரம் நேசித்து வளம் பெற்று ஓங்கி வளர வேண்டும் என்று தெய்விக குரு கிருபா கடாக்ஷத்தைப் பிரார்த்திக்கிறேன்.

- ஓம் சாந்தி! ஓம் சாந்தி! ஓம் சாந்தி!



# மகளிர் மட்டும்

ராஜ்கமல் பிலிம்ஸ் இண்டர் நேஷனல் பத்தாவது படைப்பு 'மகளிர் மட்டும்'. கதை, தயாரிப்பு பத்மஸ்ரீ கமல்ஹாசனுடையது. இயக்கியிருப்பவர் சிங்கீதம் சீனிவாசராவ்.

'ஏன் சிரித்தோம்? எதற்காகச் சிரித்தோம்?' என்கிற கேள்விகளையெல்லாம் கேட்க வைக்காமல், படம் பார்க்கிறபோது சிரிக்கிறோம், நம்மை அறியாமல்.

நகைச்சுவை படம் முழுக்க இழையோடிப் படம் பார்த்தவர்களுக்குப் பரம திருப்தியைத் தந்துவிட - 'தியேட்டரில் டிக்கெட் விற்கும் வசூலை வைத்துதான் ஒரு படத்தின் வெற்றி - தோல்வியை நிர்ணயிக்கிறோம்' என்று ஆசிரியர் கலைமாமணி விக்கிரமன் அவர்களுடன் நடந்த ஒரு பேட்டியில் கமல்ஹாசன் சொன்னது, படம் ஒடுகிற தியேட்டர் முன் நிற்கும் கூட்டத்தைப் பார்க்கிறபோது 'மகளிர் மட்டும்' படத்தின் வெற்றி உண்மையாகி இருக்கிறது.

படம் பார்க்க இம்முறை மகளிரை மட்டும் அழைத்திருந்தோம். பார்த்தவர்கள் சொன்னதைத் தொகுத்திருக்கிறோம்.

## அனுராதா ரமணன்
(நாவலாசிரியர்)

ரொம்ப நாளைக்கு அப்புறம் வாய்விட்டுச் சிரிச்ச படம் 'மகளிர் மட்டும்'தான்.

நடிப்புன்னு வர்றப்ப - ரேவதி, ஊர்வசி, ரோகிணி, நாசர்னு எல்லாருமே பிரமாதம்தான்னாலும் டெட் பாடியா வர்ற நாகேஷ் - கையக் காலை வீசி, கண்ணை உருட்டி காமெடி பண்றதே கஷ்டம் - செத்த பொணமா வந்து, 'தொப் தொப்பு'னு அடி வாங்கி, ஐயோ - மனுஷர் பிய்ச்சு உதறிவிட்டார்.

சிரிக்க வச்சது மட்டுமில்லே. இந்தப் படம் ஆண்களை, இன்னும் பெண்களே அதிகமாக வேலை பார்க்கிற பல நிறுவனங்களைச் சிந்திக்கவும் வைக்கும்.

என்னவோ வேலைக்குப் போறாங்க... அலுங்காமல், குலுங்காமல் சம்பாதிக்கறாங்கன்னு நினைக்கிறவர்களுக்கு எல்லாம் சவுக்கடி கொடுக்கறாப்பல இருக்கு படம்.

ஒரு பெண் வீட்டை விட்டு வெளியே இறங்கினாலே, எத்தனை பேரோட பார்வை, எச்சில் அவ மேல படறதுங்கற வசனம் நிஜமாகவே ரொம்ப யதார்த்தம்.

பெண்ணை மதிக்கணும், மரியாதையா நடத்தணும் அவளோட அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்தால்தான் - அவ கிட்டேயிருந்து ஆக்கப்பூர்வமான செயல்களை எதிர்பார்க்க முடியும்னு அட்டகாசமாக எடுத்துச் சொல்லியிருக்காங்க, நன்றி!

## வித்யா சுப்ரமணியம்
(நாவலாசிரியர்)

அரைகுறை ஆடையில் பெண்கள், விரசமான இரட்டை அர்த்த


அநுராதா ரமணன்


வித்யா சுப்ரமணியம்

ஹரிணி ஸ்ரீதர்


வீணா, ப்ரியா


ராதா ரமேஷ்


லலிதா சுதாகர்


ஜெயஸ்ரீ ராமேஷ்


எம். சகுந்தலாதேவி

முள்ள மட்டமான நகைச்சுவை வசனங்கள், பள்ளி அல்லது கல்லூரி இளசுகளின் உடல் ரீதியான காதல் காட்சிகள், சுளுக்கு எடுத்துக் கொள்வது போன்ற கை கால் உதறும் நடனக் (?) காட்சிகள், கற்பழிப்பு, வன்முறைக் காட்சிகள் - இவைதான் இன்றைய வெற்றிப் படங்களின் பார்முலாக்களாம்.

இந்த பார்முலாக்களை துணிச்சலோடு உடைத்தெறிந்துவிட்டு இன்றைய மகளிரின் பிரச்னையை சுவாரசியமாக, ஆரோக்கியமான முறையில் நகைச்சுவைக் கலந்து 'மகளிர் மட்டும்' அல்லாமல் அனைவருமே ரசிக்கத்தக்க வகையில் தயாரித்திருக்கும் கமல் ஹாசன், தான் ஒரு வித்தியாசமான நடிகர் மட்டுமல்ல; வித்தியாசமான தயாரிப்பாளரும்கூட என்று நிரூபித்திருக்கிறார்.

நாசருக்கு 'ஜொள்ளு திலகம்' என்று பட்டமளிக்கலாம். படத்தை இயக்கி இருக்கும் சிங்கீதம் சீனிவாச ராவ் அவர்களுக்கு ஸ்பெஷல் பாராட்டுகளைத் தெரிவிக்கிறேன்.

**ஹரிணி ஸ்ரீதர்**

(சிறு சேமிப்புத் துறை இயக்குநரின் மனைவி)

மகளிர் மட்டும்! பேருக்குத் தகுந்த மாதிரி ஒரே பெண்கள் சாம்ராஜ்யம்தான். அதில் வரும் மூன்று பிரதான பாத்திரங்களையும் (ஊர்வசி, ரேவதி, ரோகிணி) அறிமுகப்படுத்தும் காட்சியிலேயே நமக்கு இது ஒரு வித்தியாசமான படம் என்று தெரிந்து விடுகிறது. மூன்று நாயகிகளும் பாத்திரத்தில் ஒன்றி விட்டார்கள்.

தியேட்டரில் படம் முழுக்க ஒரே சிரிப்பு அலைதான். கிரேஸி மோகன் அவருக்கே உரித்தான பாணியில் சிரிப்பு வெடிகளைத் தருகிறார்.

நாசர் ரொம்ப நன்றாகச் செய்திருக்கிறார். ஒரு பெண்ணிடம் வழிந்து அவமானப்பட்ட உடனேயே, அடுத்த பெண்ணிடம் அவர் வழியத் தயாராவது சுவையாக இருக்கிறது. 10 நிமிடங்களில் கமல் கலகலக்கிறார். அறிமுக ஒளிப்பதிவாளர் திருநாவுக்கரசின் ஒளிப்பதிவு நன்றாக இருக்கிறது.

கதாநாயகிகள் நாசரைப் படுத்தும் பாடு கொஞ்சம் மிகைப் படுத்தப்பட்டு தெரிகிறது. மொத்தத்தில் வெல்டன்!

**வீணா - ப்ரியா**

(நேச்சர் கேர் புரொடக்ஸ் லிமிடெட்)

மகளிர் மட்டும் நகைச்சுவை மிகுந்த படம் மட்டுமல்ல; மகளிரின் இன்றைய சோகச் சூழலை விளக்கி அதற்கொரு நிவாரணத்தையும் பாடமாகச் சொல்கிற படம்!

குறளைப் போன்று ஈற்றடிக் கவிதையாக அமைந்த தெளிவான கதை அமைப்பு. இன்றைக்கு அலுவலகங்களில் வேலை பார்க்கும் நடுத்தர வகுப்புப் பெண்களின் பரிதாப நிலையைத் தெள்ளத் தெளிவாகக் காட்டும் காலக் கண்ணாடி.

மாமூலான கதையம்சமாக இல்லாமல் மகளிர் மேம்பாட்டுக்கான புரட்சிக் கொடியை ஏந்திய மூன்று பெண்களைத் தாய் குலம் கண்டிப்பாகப் பாராட்டும். நாசரின் நடிப்பில் புது மெருகு ஏறிக்கொண்டே போகிறது என்பதற்கு இப்படம் சிறந்த உதாரணம்.

பெரியவர்கள் மட்டுமல்ல; குழந்தைகளும் கண்டுகளிக்கக் கூடிய வகையில் இருக்கிறது மகளிர் மட்டும்.

**ராதா ரமேஷ்**

(மௌலீஸ் அட்வர்டைசிங்)

ஒரு வித்தியாசமான சினிமா. கதாநாயகன் - கதாநாயகி இல்லாத படம். நைன் டூ பைவ் என்ற ஆங்கிலப் படத்தில் உள்ள கருத்தை எடுத்து நம்முடைய தமிழ்ப் படங்களுக்கு இணையாக எல்லோரும் பார்க்கும்படி செய்து உள்ளார்கள். ஆனால் ஒவ்வொருவரும் தங்களுடைய பாத்திரங்களை நல்லபடியாகச் செய்து உள்ளார்கள்.

ஆண்கள், பெண்களை எப்படி இந்த சொஸைட்டியில், அதுவும் இந்த நூற்றாண்டில் அவமானப் படுத்துகிறார்கள் என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

பெண்கள் எல்லோரிடத்திலும் தைரியம் உள்ளது. மறைந்துள்ள தைரியத்தை எப்படி வெளிப் படுத்த முடியும் என்பதைப் படம் நன்றாக விளக்கியுள்ளது.

பெண்கள் எல்லோரும் தங்கள் உரிமையை அன்று முதல் இன்று வரை கேட்டுத்தான் பெற்றுள்ளார்கள். இந்தப் படத்தில் சில வசனங்கள் சற்று அதீதமாக இருந்தாலும் அதைச் சொல்லுவதிலாவது ஆண்கள், பெண்களுக்குத் தரவேண்டிய மதிப்பைத் தர வேண்டும் என்பதற்காக சொல்லப்பட்டதாகவே தோன்றுகிறது.

படத்தின் விறுவிறுப்பு சற்றுக் கூடக் குறையாமல் அதற்குள் படம் முடிந்து விட்டதா என்ற திருப்தியுடன் வந்தோம்.

**லலிதா சுதாகர்**
(தலைவர், தமிழ்நாடு ஆரிய வைசிய மகளிர் சபா)

**ஜெயஸ்ரீ ராஜேஷ்**
(ஜி.ஆர். தங்கமாளிகை)

மகளிர் மட்டும் படம் மகளிர் மட்டும் பார்க்க வேண்டிய படமல்ல; வேலைக்குச் செல்லும் ஒவ்வொரு பெண்ணும் கணவனுடன் சேர்ந்து பார்க்க வேண்டிய படம். வேலைக்குச் செல்லும் பெண்கள் தினமும் சந்திக்கும் பிரச்னைகளை மிக நாசூக்காகச் சொல்லி இருக்கிறார், சிங்கீதம் சீனிவாச ராவ்.

கணவனுக்கு வேலை இல்லாத காரணத்தால் சபல புத்தி மேனேஜரை எதிர்க்கவும் முடியாமல் ராஜினாமாவும் செய்ய முடியாமல் திண்டாடும் பெண்கள் சிரித்துக் கொண்டே அம்மாதிரி பிரச்னைகளை எப்படி துணிவோடும், தைரியமாகவும் சமாளிப்பது என்பது அழகாகச் சொல்லப்பட்டுள்ளது.

பெண்கள் துணி துவைப்பதற்கும், சமையல் செய்வதற்கும் என்ற காலம் போய், பெண்கள் நினைத்தால் எதுவும் முடியாதது இல்லை என்ற கருத்து வலுவாகச் சொல்லப்பட்டுள்ளது.

வியாபார ரீதியாக வெற்றி பெற வேண்டும் என்ற காரணத்தால் சில சினிமாத்தனமான காட்சிகள் இடம் பெற்று இருந்தாலும் மகளிர் மட்டும் பெண்களுக்கான ஒரு நல்ல ப(ா)டம்!

**எம். சகுந்தலா தேவி (கவிஞர்)**

ராஜ்கமல் இன்டர்நேஷனலின் அற்புதப் படைப்பு 'மகளிர் மட்டும்'. ஆடை தைக்கும் கம்பெனியின் மேனேஜர் நாசரின்... மன்னிக்கவும். மூக்கனின் நடிப்பு பிரமாதம். பாப்பம்மாள் (ரோகிணி), ஜானகி (ஊர்வசி), சத்யா (ரேவதி) இவர்களின் நடிப்பு நிறைவாக உள்ளது. இவர்களில் ஊர்வசியின் வெகுளித்தனமான பேச்சும், முக பாவமும் மிக அருமை. வேலை செய்யும் பெண்களுக்கு உடன் வேலை செய்யும் ஆணால் ஏற்படும் பிரச்னைகளைத் தெளிவாகப் புலப்படுத்தியதுடன் பணி செய்யும் இடத்தில் குழந்தைகள் காப்பகத்தின் அவசியத்தை உணர்த்தி அதை ஏற்படுத்துவதும் பாராட்டத்தக்கது. சவத்தை (நாகேஷ்) இரு பெண்கள் மருத்துவ மனையில் இருந்து கடத்துவதும், ஒரு ஆணை (நாசரை) மூன்று பெண்கள் சேர்ந்து கடத்திச் சென்று மிரட்டுவதும் சற்று மிகையான காட்சிகள். மொத்தத்தில் மகளிர் மட்டும் "நகைச்சுவை ஸ்பெஷல்".

தொகுப்பு : நாகராஜகுமார்





சேர்மன்
பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா

இராஜபாளையத்தில் பெருமை பெற்றிருந்த ஒரு விவசாயக் குடும்பத்தில் பிறந்த பெருமகனார் ஒருவர், சுற்றுச் சூழலைச் சற்றே எண்ணிப் பார்த்தார்.

விவசாயத்தைத் தவிர வேறு தொழில் அறியாத மக்கள் வாழும் பகுதி. வான்மழையை நம்பித் தான் வேளாண்மை செய்தாக

# பெருங்குணப் பண்பினர்
# பி.ஏ.சி. இராமசாமி ராஜா

குன்றக்குடி
பெரியபெருமாள்

[தமிழகத்தின் புகழார்ந்த தொழில் அதிபராய்த் திகழ்ந்த பி.ஏ.சி. இராமசாமி ராஜா, இராஜ பாளையம் பகுதியைத் தொழில் துறையால் செழுமையுறச் செய்த பெருமகனார் தொண்டாற்றிய மாண்மையால் மேன்மைபெற வைத்த பெருந்தகை. நாட்டின் பொருளாதார மேம்பாட்டிற்கு அடிகோலிய அப் பெரியாரின் நூற்றாண்டைப் போற்றும் வகை யில் ஏற்கனவே 'அமுதசுரபி' தீபாவளி மலரில் 1992 ஆம் ஆண்டி லேயே இடம் பெற்ற அரிய கட்டுரையில், உரிய சில செய்தி களை இணைத்து இங்கே வெளி யிட்டு மகிழ்கிறோம். - ஆர்.]

ஆடையை வரிந்து கட்டிக் கொண்டு, அருள்பாலிக்க ஓடிவரு மாம் தெய்வம்! யாருக்கு?

'குடி செய்வல் என்னும் ஒருவர்க்கு!'

ஆம், குடிமக்களை மேன்மைப் படுத்தும் செயலைக் குறிக் கோளாகக் கொண்ட ஒருவரின், செய்யும் காரியங்கள் அனைத் திற்கும் தெய்வத் திருவருள் தானே வந்து அமையும் என்கிறார் திரு வள்ளுவர்.

"குடிசெய்வல் என்னும்
ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்".

திருவள்ளுவரின் இந்தத் திரு வாக்கை மெய்ப்பிக்கும் உருவாக் கங்களே - 'ராம்கோ' நிறுவனங் களின் தொழில் ஆக்கங்கள்! நிலை பெற்றோங்கும் வளர்முகப் பெருக் கங்கள்!

வேண்டும். வானம் பொழிய வில்லையெனில் மக்களின் வாழ்வு நலியத் தொடங்கிவிடும். வருடந்



இயக்குநர்
பி.ஆர். வெங்கட்ராம ராஜா



இராஜபாளையம் ஆலை

தோறும் வானின் கருணை அந்தப் பகுதிக்கு வழக்கமாகக் கிடைப்பது இல்லை. எனவே அடிக்கடி வறட்சியின் நிழலில், வறுமையின் பிடியில் மக்கள் வாழ்ந்தாக வேண்டிய நிர்ப்பந்த நிலை நிலைத்த தன்மையாய் அந்தப் பகுதியில் நின்று கொண்டிருந்தது. மக்கள் உழைத்துப் பிழைக்க மனம் கொண்டவர்கள்தான்; எனினும் உழைப்பதற்குக் 'களம்' வேண்டுமே?

இத்தகைய சுற்றுச் சூழல் அந்தப் பெருமகனாரின் இரக்கம் மிகுந்த இதயத்துள் கருணை ஊற்றைப் பெருக்கெடுக்கச் செய்தது.

களத்தை உருவாக்க வேண்டும். மக்களின் கவலையை நீக்க வேண்டும். வெறும் நிலத்தை மட்டும் நம்பி வாழும் வேதனையைப் போக்கியாக வேண்டும். வேறு தொழிலுக்கு மக்களின் உழைப்புச் சக்தியைப் பயன்படுத்தவும் வேண்டும்... எனவே என்ன செய்ய வேண்டும்?

சிந்தித்தார் அந்தப் பெருமகனார். செயலில் இறங்க மனம் கொண்டார். எனினும் திட்டமும், திருவருளும் இன்றித் தீவிரம் காட்டக் கூடாதெனத் தீர்மானித்தார்.

ஏனெனில் அந்தப் பெருமகனார் கடவுள் நம்பிக்கை கொண்ட பக்திமான்! அன்றாடம், பறக்கும் கருடனைத் தரிசித்துப் பரந்தாமனின் கருணையை நினைந்து உருகும் இயல்புகொண்ட இறையன்பர் அவர்! எனவே ஆழ்ந்து, ஆய்ந்து, அனுபவச் செறிவுடன் ஒரு முடிவுக்கு வர ஆவல் கொண்டார்.

"பக்தி உடையார் காரியத்தில்
பதறார்! மிகுந்த பொறுமையுடன்
வித்துமுளைக்கும்தன்மைபோல்
மெல்லச் செய்து பயனடைவார்"

எனும் மகாகவி பாரதியின் வைர வரிகளுக்குத் தமது வாழ்வையே வடிவப்படுத்திக் காட்டிய பெருமகனார் அல்லவா அந்தப் பெருந்தகை?

வறட்சிப் பகுதியே ஆயினும், வானம் பார்த்த பூமியே ஆயினும் வருடந்தோறும் பருத்தியை விளைவித்து, இந்திய நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கும் அனுப்புக் கொண்டிருந்த இராமநாதபுரம் மாவட்டத்து இராஜபாளையம் பகுதியின் இயல்பை ஒரு நாள் நினைத்துப் பார்த்தார் அப்பெருமகனார். அவர் நெஞ்சத்துள் ஒரு கருத்து பிறந்தது.

"ஏன், பருத்தியை மூலப் பொருளாகக் கொண்ட ஒரு நூற்பாலையை உருவாக்கினால் என்ன?"

இந்தக் கருத்து தம் மனத்தில் உதயமாகப் பரந்தாமனின் திருவருளே காரணமெனக் கருதவும் செய்தார் அப்பெருமகனார்!

நூற்பாலைத் துறையில் நுட்பமும் திட்பமும் பெற்றுத் திகழ்ந்து இங்கிலாந்துக்குச் சென்று, அதன் நுணுக்கத்தை அறிய ஆவல் கொண்டார். எனவே தமது நாற்பத்தோராவது வயதில் அப்பெருமகனார், இதயத்துள் ஒரு கோட்பாட்டுடன் இங்கிலாந்துக்குப் பயணப்பட்டார்.

இங்கிலாந்துக்குச் சென்ற அப்பெருமகனார் - 'பி.ஏ.சி.ஆர்' என மக்களால் பெரிதும் அன்பாக அழைக்கப் பெற்ற, பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜா ஆவார்.



'ராம்கோ' சிமின்ட் ஆலை ராமசாமி ராஜாநகர்



சுதர்சனம் ஆலையில் - நூற்கும் இயந்திரங்கள்

1935 ஆம் ஆண்டு இங்கிலாந்து சென்று திரும்பிய பெருந்தகை இராமசாமி ராஜா, இராஜபாளையத்தில் ஒரு நூற்பாலையை உருவாக்கம் செய்யத் திட்டமிட்டார். உறவினர்களையும், உள்ளார்ந்த நண்பர்களையும் ஆலை உருவாக்கப் பணியில் ஆர்வம் கொள்ளச் செய்து, நிறுவனத்திலும் பங்குப் பணி ஆற்றிடுமாறு, 'பப்ளிக் லிமிடெட் கம்பெனி'யாக நிறுவன அமைப்பை வடிவமைத்து, 24.12.1936 இல் தமது கனவையும், கனிவையும் நனவாக்கி மகிழ்ந்தார். பிறந்த நகரின் பெயர், விளக்கம் பெற்றுப் பெரும் புகழுடைய வேண்டுமெனும் பேரார்வத்தில், பெருந்தகை பி.ஏ.சி.ஆர். நூற்பாலைக்கு "இராஜபாளையம். மில்ஸ் லிமிடெட்" எனப் பெயர் சூட்டிப் பேரானந்தம் கொண்டார்.

நம்பிக்கையற்றுச் சோம்பிக் கிடந்த தம் பகுதி குடிமக்களுக்கு உழைக்கக் களமும், ஊதியம் பெறத் தொழிலும் அளிக்கக் கொடுத்து வைத்த பேற்றினை நினைந்து நினைந்து நெகிழ்ந்தார் பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜா. இத்தகைய பேற்றினை அருளிய இறைவனது பெருங்கருணையை எண்ணி, உருகினார்; உருகிப் போற்றினார்.

## இராஜபாளையம் நூற்பாலை

விவசாயத்தைத் தவிர வேறு தொழில் அறியாத பகுதியில் நூற்பாலைக்கு மூலதனம் சேர்க்கும் முயற்சி சற்றுக் கடினமாகத்தானே இருந்திருக்க முடியும்! என்றாலும் பெருந்தகை இராமசாமி ராஜாவின் வாக்கும், நோக்கும் வளமான எதிர்காலத்தை உருவாக்கும் என்ற நம்பிக்கையிலும், பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் சகோதரரும், விடுதலைப் போராட்ட வீரரும், மக்களிடையே மரியாதைக்குரியவராக விளங்கியவருமாகிய பி.எஸ். குமாரசாமி ராஜாவின் செல்வாக்கிலும் 562 பங்குதாரர்களைக் கொண்ட ஏறத்தாழ ஐந்து லட்ச ரூபாய் மூலதனம் திரட்டப்பட்டது. 1938 ஆம் ஆண்டின் உதய காலத்தில் ஆலைக்கு வேண்டிய இயந்திரங்கள் அனைத்தும் வரத் தொடங்கின. 12,300 கதிர்கள் நிறுவப்பட்ட இராஜபாளையம் நூற்பாலையின் உற்பத்தியை, கோயம்புத்தூர் தொழில் அதிபர், பி.எஸ்.ஜி. ரெங்கசாமி நாயுடு, தமது கைராசிக் கரங்களால் 1938 மே மாதத்தில் தொடங்கி வைத்தார். அன்றைய மாநிலத் தொழில், தொழிலாளர் நல அமைச்சராக வீற்றிருந்த வி.வி.கிரி முறையாக ஆலையை 5.9.1938 இல் தொடங்கி வைத்து வாழ்த்தினார்.

'ராம்கோ' நிறுவனங்களின் வளர்முகப் பெருக்கங்களுக்கு மூலமாகவும் முதலாகவும் திகழ்கின்ற இராஜபாளையம் நூற்பாலை வரலாற்றுச் சிறப்புமிக்க லாபத்தை ஈட்டியிருப்பதோடு, பணியாற்றும் தொழிலாளர்களின் தொடர்ந்த இணக்கத்தையும், பங்கு முதலீடு செய்துள்ள பொதுமக்களின் நன்னம்பிக்கையையும் பெற்று விளங்குகிறது. இத்தகைய ஈட்டலும், இணக்கமும், நம்பிக்கையும் ராம்கோ நிறுவனங்களுக்கு ஏறத்தாழ 200 கோடி பெறுமானமுள்ள சொத்தை, ஆராயிரத்திற்கும் மேற்பட்ட தொழிலாளர்களை, பல்லாயிரம் பங்குதாரர்களை வழங்கியிருப்பதோடு, பதினைந்து வகையான ஆலைகளைத் தமிழகத்தில் மட்டுமின்றி, ஆந்திர, கர்நாடக, மத்திய மாநிலங்களில் நிறுவி, மக்களின் வாழ்விற்கும், நாட்டின் வளர்ச்சிக்கும் மகத்தான பணியாற்றும் மாபெரும் வாய்ப்பை அளித்துள்ளன!

பரம்பொருளின் பரிபூரணமான பெருங்கருணையையும், திருவருளையும் பெற்றிருந்த பெருந்தகை பி.ஏ.சி.ஆர். உருவாக்கிய முதல் நிறுவனத்தில் அருளாளர்களும் முதலீடு செய்துள்ளனர். ஆம், சிருங்கேரி பீடாதிபதிகள், தருமபுரம் ஆதீனம் ஆகிய ஞானச்

செல்வர்களும் இந் நிறுவனத்தில் பங்குதாரர்களாக உள்ள அரிய செய்தியை அறிகிறபோது, ஆச்சரியத்தால் நம் புருவங்கள் உயர்கின்றன!

## ராமராஜு சர்ஜிகல் காட்டன் மில்ஸ்

பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் முதல் மாப்பிள்ளை என்.கே. ராமராஜு தொடங்கிய சர்ஜிகல் காட்டன் ஆலையை, தொடங்கியவர் மறைந்ததால், 1942 இல் ஏற்று நடத்த வேண்டிய நிலை ஏற்பட்டது.

தி ராமராஜு சர்ஜிகல் காட்டன் மில்லில் பஞ்சைச் சுத்தம் செய்து, சில மருந்துப் பொருள்களைச் சேர்த்து, நீராவியின் உதவியால் தூய்மையாக்கி, மருத்துவத் துறைக்குப் பயன்படும் வகையில் பஞ்சை உருவாக்குகின்றனர். அத்துடன் காயங்களுக்குக் கட்டுப் போடும் துணிகளும் உற்பத்தி செய்யப் பெறுகின்றன. இராஜபாளையத்தில் 'ஜெயராம் மில்ஸ் லிமிடெட்' 1944 ஆம் ஆண்டு நூற்பாலையாகத் தொடங்கப் பெற்று, பின்னர் நெசவாலையாக மாற்றம் பெற்றது. ஜெயராம் மில்ஸ் 'சங்கு மார்க்' உற்பத்தித் துணிகள், தென்னிந்தியா முழுவதும் மக்களால் விரும்பி வாங்கப் பெறுகின்றன. 1958 ஆம் ஆண்டில் சுதர்சனம் நூற்பாலையை நிறுவினார் பி.ஏ.சி.ஆர்.

## கௌரி மெட்டல் ஹவுஸ்

1952 ஆம் ஆண்டு ஜப்பானுக்குச் சென்று வந்த பெருந்தகை பி.ஏ.சி.ஆர். ஒரு புது வகையான தொழிலை இராஜபாளையத்தில் தொடங்கினார். 'திருகாணிகள்' எனச் சொல்லப்படுகின்ற ஸ்குரு ஆணிகள், கௌரி மெட்டல் ஹவுஸில் தயாரிக்கத் திட்டமிட்டு, ஒரு புதிய நிறுவனத்தை உருவாக்கினார்.

கௌரி மெட்டல் நிறுவனத்தைப் போல, இராஜபாளையத்தில் பல ஆணித் தயாரிப்பு நிறுவனங்கள் 'கிடுகிடு'வென உருவாகின. ஆனால் அவையனைத்தும் கொஞ்ச நாள்களில் 'மடமட'வெனச் சரிந்து போயின! விற்பனையைப் பெரிதாக்கி, தரத்தைக் குறைவாக்கினால் எந்த நிறுவனமும் நீடு நிலைக்க முடியாதென்பதற்கு அவை எடுத்துக் காட்டுகள் ஆயின எனக் கூறப்படுகிறது.

வாழ்ந்த இல்லத்துக்கு 'ராம மந்திரம்' எனப் பெயர் சூட்டிப் பேரருள் பெற்றிருந்த பெருந்தகை பி.ஏ.சி.ஆர். தாம் வடிவமைத்த நிறுவனங்கள் அனைத்திற்கும் தரம் 'தாரக மந்திரம்' என்பதை நிலைநாட்டிப் பெருமை பெற்றார்!

மூன்றரை லட்ச ரூபாய் முதலீட்டில் தொடங்கப் பெற்ற இந்த நிறுவனம், இன்று பல லட்ச ரூபாய் மதிப்பீட்டில், ஆண்டு தோறும் வளர்முகமாகி, தழைத்துப் பல்வேறு நிறுவனங்களாகக் கிளைத்து, நூற்றுக்கணக்கான தொழிலாளிகளின் வேடந்தாங்கலாய் விளங்கி வருகிறது!

## மெட்ராஸ் சிமிண்ட்ஸ்

'ராம்கோ'வின் வரலாற்றில் 1957 ஆம் ஆண்டை மணிமுடி சூட்டிக் கொண்ட மாபெரும் காலகட்டம் என வர்ணித்து மகிழலாம். ராம்கோவின் நிறுவனங்கள் அனைத்தும் சீரிய நிர்வாகப் பொறுப்புடன், சிறப்பாக வளர்ந்து வருவதையும், ஆண்டுதோறும் பங்குதாரர்களுக்கு அளித்து வரும் கணிசமான டிவிடெண்ட் தொகையையும் எண்ணிப் பார்த்த மக்கள், குறிப்பாக மற்ற ராம்கோ நிறுவனங்களின் பங்குதாரர், சிமிண்ட் தொழிலகத்திற்குத் தேவைப்பட்ட 50 லட்ச ரூபாய் பங்குத் தொகையை, 'நான் முந்தி, நீ முந்தி' என நம்பிக்கையோடு வழங்கினர்.

சிருங்கேரி பீடாதிபதிகளும், தருமபுரம் ஆதின கர்த்தரும் நிறுவனத்தின் மூலதனத்தில் கணிசமாகப் பங்கேற்று, முயற்சிக்கு ஆருளாசி வழங்கியது அரிய நன்நிமித்தமாக அமைந்தது. தமிழக அரசு தனியார் துறையில் தொடங்கிய நிறுவனத்திற்கு முதன் முதலாகப் பங்குத் தொகையாக 10 லட்சம் வழங்கியது! இந்தியத் தொழிலியல் நிதி நிறுவனத்தில் இருந்து நெடுங்காலக் கடன் தொகை பெற்று, ஒன்றேகால் கோடி முதலீட்டில் மிகுந்த பொலிவோடும், புகழோடும் சிமிண்ட் ஆலையை விருதுநகருக்கு அருகேயுள்ள 'துலுக்கப்பட்டி' எனச் சொல்லப்பட்ட ராமசாமி ராஜா நகரில் நிறுவினார் பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.



அருப்புக்கோட்டை, சாத்தூர் பகுதியில் சிமிண்ட் தொழிலுக்கு வேண்டிய மூலப் பொருளான சுண்ணாம்புக்கல் வெகுவாகப் புதைந்து கிடப்பதைக் கருதிப் பார்த்து, அந்தப் பகுதிக்கு அருகாமையில் அமைக்கப் பெற்ற மெட்ராஸ் சிமிண்ட் நிறுவனம், நாளொன்றுக்கு 200 டன் உற்பத்தியை நோக்கமாகக் கொண்டு 1961 இல் உற்பத்தியைத் தொடங்கியது. அன்றைய தமிழக முதல்வர் காமராஜ் தொடங்கி வைக்க, தொழில் அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் தலைமை வகிக்க, தொடக்க விழா சிறப்பாக நிகழ்ந்தது.

சிமிண்ட் நிறுவனத்தை உருவாக்க நிறுவனருக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டியவர் முன்னாள் தமிழக முதல்வரும், நிறுவனரின் சகோதரருமாகிய பி.எஸ். குமாரசுவாமி ராஜா எனும் செய்தி குறிப்பிடத்தக்கது.

சிமிண்ட் நிறுவனம் வளர்முக வரலாற்றைத் தொடங்கி ஓராண்டுக் காலத்தில் அதாவது 1962 ஆம் ஆண்டு பெருந்தகை பி.ஏ.சி.ஆர். தாம் இமைப்பொழுதும் நீங்காது வழிபட்டு வந்த பரந்தாமனின் திருப்பாதங்களை அடைந்து, அமரர் ஆனார்.

'ராம்கோ' நிறுவனர் அமரர் பி.ஏ.சி.இராமசாமி ராஜா நிர்வகித்து வந்த அனைத்துத் தொழிலகங்களின் நிர்வாகப் பெரும் பொறுப்பை அப்பெருமகனாரின் ஒரே புதல்வர் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா ஏற்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அப்போது பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜாவுக்கு வயது இருபத்தேழுதான்! எனினும், பெருந்தகை பி.ஏ.சி.ஆர். தம்மைப் போலவே தெய்வ நம்பிக்கையை மனதிலும், திறமான செயலூக்கத்தை அறிவிலும், தெளிவான நடைமுறைப் பண்பாட்டை உணர்விலும் தமது புதல்வருக்குத் திட்டமிட்டுப் பயிற்சி அளித்து வைத்திருந்த பான்மையால், இளமையான வயதிலேயே வலிமையான நிறுவனங்களின் நிர்வாகத்தை மிக எளிமையாக நிர்வகிக்கும் ஆற்றல் பெற்றிருந்தார். 'பி.ஆர்.ஆர்.' என அன்பாகக் குறிப்பிடப் பெறும் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா!

மனிதனின் முதல் தேவையான உணவை உற்பத்தி செய்யும் வேளாண்மைக் குடும்பத்தில் இராஜபாளையம் பி.ஏ. சின்னைய ராஜா - சிட்டம்மாள் இல்லறப் பயனாய் 24.4.1894 இல் பிறந்த அமரர் பி.ஏ.சி.ஆர். மனிதனின் இரண்டாவது தேவையான உடையை உற்பத்தி செய்வதற்கு ஆதாரமான ஆலைகளை ஏற்படுத்தி, மனிதனின் மூன்றாவது தேவையான இல்லங்களை உருவாக்க அடிப்படையான சிமிண்ட் உற்பத்திக்கும் வழி வகை காட்டி, வாழ்வாங்கு வாழ்ந்து அமரர் ஆனார். அப் பெருந்தகை எண்ணியவை அனைத்தும் இனிமை ஆயின! எடுத்த காரியங்கள் அனைத்தும் பெருமை ஆயின! ஏனெனில் அப்பெருமகனார் குடிமக்கள் மேன்மையைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தார். எனவே தெய்வத்தின் திருவருள் எளிமையாக வந்தடைந்தது! திரும்பிய பக்கமெல்லாம் உதவியும், உழைப்பும், உயர்ந்த செயலூக்கத்திற்கு ஆதாரமான மக்களின் நிறைந்த பேரன்பும் தேடியும் வந்தன! ஓடியும் வந்தன! வரலாற்றில் வாழ்வாங்கு வாழ்ந்து, வணங்கத்தக்க தெய்வம் ஆனார்!

தமது தநதையார் உருவாக்கித் தந்த சிமிண்ட் நிறுவனத்தைத் தரத்தாலும், உற்பத்தித் திறத்தாலும் இந்தியாவின் தென் மாநிலங்களில் பிரபலப்படுத்தி, விற்பனையில் சரித்திரம் படைத்தார் ராம்கோ சேர்மன் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா. சிமிண்ட் தயாரிப்பில் சுற்றுவட்டார மக்களுக்கு எவ்விதமான தீமையும் நேர்ந்துவிடக் கூடாதென்ற நன்நோக்கில், மிக விலையுயர்ந்த 'எலக்ட்ரோ ஸ்டேடிக் பிரெஸிபிடேடர்' எனும் கருவி ஆலையின் சூளைப் பகுதியில் பொருத்தப் பட்டது. இதனால் தொழிற்சாலை இயங்கும்போது கரும்புகையை இங்கே காண முடியாது! சுற்றுச் சூழல் கெட்டுப் போவதில்லை. சேர்மன் பி.ஆர். ஆரின் கவனிப்பும், கண்காணிப்பும் மெட்ராஸ் சிமிண்ட் நிறுனத்தை, நாளொரு வளர்ச்சியில் பொழுதொரு முயற்சியில் ராம்கோவின் பேராற்றில் வாய்ந்த பெருமைக்குரிய பிரபல நிறுவனமாகப் புகழ் மணக்கச் செய்துள்ளன!

மூலப் பொருளான சுண்ணாம்புக்கல் கணிசமான அளவில் கிடைப்பதால் ஆந்திர மாநிலத்தின் கிருஷ்ணா மாவட்டத்தைச் சார்ந்த ஜெயந்திபுரத்தில் அதி நவீனத் தொழில்நுட்ப உத்திகள் புகுத்தப் பெற்ற புதிய சிமிண்ட் ஆலை, மெட்ராஸ் சிமிண்ட் லிமிடெட் நிறுவனம் கொண்டாடிய வெள்ளிவிழா ஆண்டில் - 1986 டிசம்பரில் ராம்கோவின் மற்றுமொரு தொழிலகமாகி உற்பத்தியைத் தொடங்கியது.

சேர்மன் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜாவின் புதல்வரும், பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் பேரருமாகிய பி.ஆர். வெங்கட்ராம ராஜா ஜெயந்திபுரம் ஆலைத் திட்டம் வேகமாக மலர்ச்சி பெறத் தீவிரமாகப் பங்கெடுத்துப் பணியாற்றினார். மிகுந்த நவீனமான தொழில் நுட்பங்களை ஜெயந்திபுரம் ஆலையில் புகுத்தி இருப்பதன் மூலம், நாட்டின் தொழில் முன்னேற்றத்தில், ஒரு நவீன யுகம் மலர, 'ராம்கோ' தன் பங்குப்பணியை ஆற்றியிருப்பதாகவே கருதலாம்.

## சதர்ன் ஆஸ்பெஸ்டாஸ்

போர்ட்லண்ட் சிமிண்டுடன் கல்நாரைச் சேர்த்து உருவாக்கும் ஆஸ்பெஸ்டாஸ் மத்திய கிழக்கு நாடுகள், துபாய், அபுதாபி, குவைத், சௌதி அரேபியா, பஹ்ரெயின், ஏடன், டான்ஸானியா ஆகிய நாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. இந்தியாவின் தென் மாநிலங்கள் சதர்ன் ஆஸ்பெஸ்டாஸ் உற்பத்தித் தயாரிப்புகளை விரும்பி வாங்குகின்றன.

1965 ஆம் ஆண்டு அரக்கோணத்தில் தொடங்கப் பெற்ற சதர்ன் ஆஸ்பெஸ்டாஸ் நிறுவனம், பெருந்தகை பி.ஏ.சி.ஆர். வாழ்ந்த காலத்திலேயே திட்டமிடப்பட்ட தெனினும், அவரது மறைவுக்குப் பின் அப்பெருமகனாரின் போதனைகளையும், சாதனைகளையும் நினைவில் கொண்டு அவரது புதல்வர் ராம்கோ சேர்மன் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா நிறுவனத்தைத் தொடங்கி

னார். ஆஸ்பெஸ்டாஸ் ஷீட்டுகள் உற்பத்திப் பொருள்களின் தயாரிப்பு கணிசமான குறியீட்டுடன் அமைக்கப்பெற்ற இந்தத் தொழிலகம் 1967 இல் உற்பத்தியைத் தொடங்கி, மூன்றே ஆண்டுகளில் பங்குதாரர்களுக்கு டிவிடெண்ட் வழங்கக் கூடிய வல்லமையைப் பெற்றது.

கர்நாடக மாநிலத்தில் கரூர் என்னும் இடத்தில் 1974 ஆம் ஆண்டிலும், மத்தியப் பிரதேச மாநிலத்தில் மக்ஸியில் 1983 ஆம் ஆண்டிலும் இருபெரும் ஆஸ்பெஸ்டாஸ் நிறுவனங்கள் உருவாக்கப் பெற்றன. 5 மீட்டர் நீளமும் 1000 மில்லி மீட்டர் வாட்டமும் உள்ள ஆஸ்பெஸ்டாஸ் சிமிண்ட் குழாய்களை, இந்தியாவில் முதன் முதலாக மக்ஸியில் தயாரித்து, ராம்கோ தொழில் நிறுவனம் தனிப்பெருமை பெற்றது. ஆஸ்பெஸ்டாஸ் குழாய்கள் உற்பத்தி நிறுவனம் மக்ஸியில் 1987 இல் உருவாக்கம் பெற்றது.

## ஸ்பின்னர்ஸ் & ஸ்பின்டெக்ஸ்ட்

இரண்டு நூற்பாலைகள். இவை போல் இந்திய நாட்டின் தென் மாநிலங்களில் எவையும் இல்லவே இல்லை! இங்கே - அதிசயமான கட்டுப்பாட்டுடன், அற்புதமான தரத்துடன், அபூர்வமான இயந்திர சாதனங்களைக் கொண்டு நூல் உற்பத்தி ஆகின்றது! நூலென்றால் நிட்டிங் நெசவுகளுக்குப் பயன்படும் கோம்ப்டு (COMBED) நூல்! உலகச் சந்தைக்கு ஏற்ற நூல்! உற்பத்தியாகும் அனைத்தையுமே (100%) பத்து ஆண்டுகளுக்குக் கட்டாயமாக வெளிநாட்டுக்குத்தான் ஏற்றுமதி செய்தாக வேண்டும். உள்நாட்டில் விற்பனை செய்யக் கூடாது. இத்தகைய சிக்கலான விதிமுறைகளை ஏற்றுக் கொள்வதற்காகச் சில சலுகைகளை அரசாங்கம் வழங்குகிறது. துறைமுக வரிகள் ஏற்றுமதிக்கோ, இறக்குமதிக்கோ வசூலிப்பதில்லை. வருமான வரி கிடையாது.

இத்தகைய சலுகைகள் பலவற்றை அரசாங்கம் அளிக்க முன் வரினும், இத்துறையில் இறங்கிடப் பல தொழில் அதிபர்கள் அச்சம் கொண்டிருந்தபோது, ராம்கோ சேர்மன் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா, தமது தந்தையார் அளித்த சீரிய போதனைகளையும், செயலூக்கத்தையும் மனதில் கொண்டு, துணிந்து இத் தொழில் நிறுவனங்களை இராஜபாளையத்தில் 1990 ஆம் ஆண்டு நிறுவி, ஏறத்தாழ பத்தே மாதங்களில் பல கோடிகளுக்கு உற்பத்தியான உயர்தர நூலை, ஜப்பான் நாட்டுக்கு அனுப்பி வைத்து, தொழில் வரலாற்றில் தொழத் தக்க பாராட்டுதலைப் பெற்றுள்ளார்! இதனைச் 'சரித்திரச் சாதனை' எனத் தொழில் அதிபர்கள் மதிப்பிட்டு மகிழ்ந்துள்ளனர். இல்லையா பின்னே?

'ராம்கோ'வின் வளர்முக வணிகத்தில் உலகளாவிய பெருமையை ஈட்டித் தந்துள்ள இந்த இரண்டு ஆலைகளும், சேர்மன் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜாவின் துணிச்சலையும், தொழிலாற்றலையும் எடுத்தியம்பும் சாதனைச் சின்னங்களாக ஒளிருகின்றன!

## புகழ்மிக்கப் பெருந்தகை

நிறுவனர் பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜா, பொது நன்மைகளுக்காகத் தமது அரிய பொழுதுகளை அர்ப்பணித்தவர். மக்களுக்குத் தொண்டாற்றுகிற வாய்ப்பை எப்போதும் மகிழ்ச்சியாக ஏற்கும் இயல்பு கொண்டவர் அப் பெருமகனார். இராஜபாளையம் பஞ்சாயத்துத் தலைவராகவும், முதல் நகரவை சேர்மனாகவும் வீற்றிருந்த காலங்களில், நகருக்கும், நகர மக்களுக்கும் ஆற்றியுள்ள அரிய சேவைகள் ஏராளம். நகரும், தாம் வாழும் பகுதியும், நாடும், நலமும் வளமும் பெற்றோங்க நாளும் தொண்டாற்றிய பெருந்தகை அவர். பல்வேறு நிறுவனங்களைத் தொழிலாக மட்டும் உருவாக்காமல், சமுதாயப் பணியாகவே எண்ணி நிறுவினார். அப் பெருந்தகையின் நோக்கம் ஆக்கம் பெற்று, இராஜபாளையம் பகுதி தொழில் துறையில் மிகு செழுமை பெற்றுள்ளது. அப் பெருமகனார் தொடங்கி வைத்த நிறுவனங்கள் ஒரு நாளும் முடங்கிக் கிடந்ததில்லை! கதவடைப்பும் நிகழ்ந்ததில்லை! வேலை நிறுத்தப்பட்டதுமில்லை! நிற்கப்பட்டதுமில்லை! தொழிலாளர்களுக்குத் தோழமை உணர்வுடன் பரிவு காட்டும் பாங்கு, பெருந்தகை பி.ஏ.சி. ஆரின் உணர்வோடு ஒட்டிக் கிடந்த பெருங்குணம்! எனவே தமது நிறுவனங்களில் பணியாற்றும் தொழிலாளர்களுக்குப் பல்வேறு நலன்களைத் திட்டமிட்டு நடைமுறைப்படுத்தினார். நிறுவனங்களின் வளர்ச்சியில் மட்டுமின்றி, பணியாற்றும் தொழிலாளியின் வாழ்வைச் செம்மைப்படுத்தும் சீரிய முயற்சியிலும் 'ராம்கோ' புகழ் மிக்க நிறுவனமாகப் போற்றப் பெறுகின்றது.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர் தொடங்கிய தொழிற்சாலைகளால் இராஜபாளையம் நகர் வேகமாக வளரத் தொடங்கியது. மக்கள் தொகைக்கு ஈடுகொடுக்கும் அளவு கல்வி நிறுவனங்களை நகரம் பெற்றிருக்கவில்லை. ஒரே ஒரு மாவட்டக் கழக உயர்நிலைப் பள்ளி மட்டும் இராஜபாளையத்தில் இருந்து வந்தது.

சமூக உணர்வும், பொது நன்மைகளில் நாட்டமும் கொண்டிருந்த பி.ஏ.சி.ஆர். தமது நகருக்கும், நகரைச் சார்ந்த பகுதிக்கும் கல்வியறிவில் ஊட்டமளிப்பது உயர்ந்த அறமாக அமையுமெனக் கருதினார். அன்றையத் தேவையை மட்டும் நிறைவு செய்யாது, என்னென்றைக்கும் பயன் அளிக்கும் நிலைத்த அறமாக அது அமைய வேண்டுமெனச் சிந்தித்து, அரியதொரு பணிக்குத் தமது செல்வம் ஆதாரமாக அமையும் வகையில், 1950 இல் 'பி.ஏ.சி. ராமசாமி ராஜா கல்வி தர்மஸ்தாபன அறக்கட்டளை'யை உருவாக்கினார். அறக்கட்டளையைச் சமய, சமூக வேறுபாடின்றி அனைத்து மக்களுக்கும் பயனளிக்கும் வகையில், பொது அமைப்பாகவும், பொதுமைப் பூங்காவாகவும் மிளிரச் செய்து, அதன் மலர்ச்சியும் மணமும் அனைவரையும் சென்று சேர வேண்டுமெனக் கருதிய செயற்கரிய செயல் நினைக்கத் தக்கது; நெஞ்சாரப் போற்றத் தக்கது.

பி.ஏ.சி. சின்னையா ராஜா ஞாபகார்த்த மேனிலைப் பள்ளி, டி.ஏ.கே.எம். ராமம்மாள் தொடக்கப் பள்ளி, பி.ஏ.சி.ஆர்.

சேதுராமம்மாள் தொடக்கப் பள்ளி, ஸ்ரீராம் தொடக்கப் பள்ளி, ஆகிய கல்வி நிறுவனங்கள், பி.ஏ.சி.ஆர். வாழ்ந்த போதும், பின்னர் பி.ஆர்.ஆர். தொடங்கிய பி.ஏ.சி.ஆர். பாலிடெக்னிக், சின்மயா வித்யாலயா ஜூனியர் பள்ளி, பி.ஏ.சி.ஆர். அம்மணி அம்மாள் பெண்கள் மேனிலைப் பள்ளி, ராம்கோ தொழிற்கல்வி பயிற்சிக் கூடம் ஆகிய அனைத்தும், அறக்கட்டளையால் ஆக்கத் திருப் பணிகளாக உருவாக்கம் பெற்றுள்ளன.

பற்பல மருத்துவ வசதிகள் கொண்ட பிரம்மாண்டமான பி.ஏ. சி.ஆர். மருத்துவமனை, பெரு மக்கள் அனைவருக்கும் உதவுமாறு. பி.ஏ.சி.ஆர்.சேதுராமம்மாள் திருமண மண்டபம் ஆகிய பொதுப் பயனளிக்கும் இரு அமைப்புகளும் அறக்கட்டளையால் தோற்றம் பெற்றுள்ளன. கல்வி வளர்ச்சிக்கான அறக்கட்டளை ஆண்டுதோறும் பல்லாயிரம் ரூபாய்களைப் பரிசாக வழங்கி வருகிறது.

ஓர் அதிசயச் செய்தி : ராம்கோ நிறுவன ஆலையில் பணியாற்றி ஓய்வுபெறும் தொழிலாளிக்கும், அவர்தம் குடும்பத்தாருக்கும் பத்து ஆண்டுகள் வரை ஓய்வூதியம் வழங்கப்பட்டு வருகின்றது! இந்திய நாட்டிலேயே இங்கேதான் தொழிலாளி 'பென்ஷன்' பெற்று வருகின்றார்!

அறுபத்தெட்டு ஆண்டுகள் வாழ்வாங்கு வாழ்ந்த அமரர் பி.ஏ.சி.ஆரின் திருவுருவச் சிலையை, தொழிலாளர்கள் மிகுந்த நன்றியுடனும் தகுந்த வாஞ்சையுடனும் நிதி திரட்டி, இராஜபாளையம் நகரில் அப் பெருமகனார் வாழ்ந்திருந்த ராம மந்திரத்திற்கு அருகே 1971 ஆம் ஆண்டு அமைத்து, அகம் நெகிழத் தொழுது வழிபட்டனர்!

கம்பீரமும், கருணையும், கனிவும் மிக்க அந்தத் திருவுருவச் சிலையின் திருமுகத்தைச் சற்றே உற்று நோக்கினால், இராஜ பாளையம் பகுதியின் வளர்ச்சியை எண்ணிப் பெருமிதம் கொள்வது போல் தோன்றும்!

# மனம் விட்டுப் பேசுவோம்

எதையுமே வித்தியாசமாக செய்வதில் 'அமுரசுரபி' ஒரு தனி தன்மை வாய்ந்தது. பின்னே பாருங்களேன், அட்டையில் வண்ண நிழற் படமாக மைசூர் அரண்மனை வாசலைப் புது கோணத்தில் படம்பிடித்துக் காண்பித்துப் பிரமிக்க வைத்து இருக்கின்றதே!

**திருமதி சாந்தி சுவாமிநாதன்,**
**சென்னை 600 039.**

கர்மயோகியின் அன்னைக் கட்டுரையில் 'நித்திரத்துவம்' வேண்டி தவம் செய்து நித்திரத்துவம் கேட்ட கும்பகர்ணனுக்கு நித்திரை கிடைத்தது. 'நிரந்தரத்துவம்' என்று இருக்க வேண்டும். வாசகர்கள் கூர்மையான கண்கள் உடையவர்களா என்று பரிசோதிக்க இவ்வாறு தவறாக அச்சிட்டு விட்டீர்களோ என்று நினைக்கத் தோன்றுகிறது!

**திருமதி இந்திரா ஆராவமுதன்,**
**ஸ்ரீரங்கம் 620 006.**

பள்ளி நாள்களிலே நண்பராக இருந்து ஆன்மிகத்தில் அடியெடுத்து வைத்தபோது உடன் இருந்து பெரியவராக உயர்ந்த போது பிரமித்து அவரோடு ஒன்றிப் போனவன் நான். பெரியவர் இராமமூர்த்தி அவர்களின் 'ஆண்டவனை அடைய ஐந்து வழிகள்' இன்றைய யதார்த்த நிலையோடு ஒப்பிட்டுக் காட்டி உய்யும் வழியைத் தெளிவாக விளக்கியது.

**புலவர் கருமலைத் தமிழாழன்,**
**ஒசூர் 635 109.**

வியாழனும் வால் நட்சத்திரங்களும் பற்றிய புஷ்பா தங்கதுரையின் விளக்கம் எங்களுக்கு பல சந்தேகங்களைத் தீர்த்து வைத்தது. பாராட்டுகள்.

**அ. செபாஸ்டின், களியல் 629 101.**

பச்சையப்ப வள்ளலின் வள்ளன்மையை நினைவு கூர்ந்த 'ரகமி' அவர்களின் கட்டுரை பல செய்திகளைப் புதிதாக எங்களுக்குச் சொன்னது. நன்றி.

**தென்னிலவன் ஜெகதீசன்,**
**கருங்காலி கிராமம்.**

'அமுதசுரபி' தனது 46 ஆவது வயதைப் பூர்த்திச் செய்து கொண்டு 47 ஆவது வயதில் காலடி எடுத்து வைக்கப் போகும் இனிய தருணத்தில் மலர் - 46, இதழ் - 12 புத்தாண்டு சிறப்பிதழாக மலரப் போவது நாங்கள் செய்த பாக்கியம். 'சுப்ரமணிய சுவாமி' பட விமர்சனத்தை, படம் பார்த்த சுவாமி - மாமிகளைக் கேட்டு எழுதியிருந்தது வித்தியாசமாக இருந்தது.

**திருமதி நாராயண ராவ்,**
**வியாசர் நகர்.**

கவிஞர் காமராசன் எழுதிய 'இருளின் முகங்கள்' கவிதை மிக அருமை. அக்கவிதையை நான் காதலித்தேன்.

**பி. விஜயகுமார்,**
**கோயமுத்தூர் 641 018.**

நிர்வாகம், வியாபாரம் மற்றும் போர்க்களத்தில் வீரம் என்று வாழ்க்கை நிலைகளை மேலாளும் மனோதிடத்தைக் கொடுக்கும் 'இடுக்கண் வருங்கால் நகுக' குறள் வரியை வைத்தே அற்புதமாக படம் பிடித்துக் காட்டி விட்டார் டாக்டர் கி. வேங்கட சுப்பிரமணியம்.

**அய்யாறு எஸ். வாசுதேவன்,**
**சென்னை 500 014.**

முதன் முதலாக மார்ச் 94 இதழ் படித்தேன். அய்யோ இது வரை படிக்காமல் விட்டு விட்டோமே என நெஞ்சு நிறைய வருத்தம். படிக்கப் படிக்க அறிவைப் பட்டைத் தீட்டும் அமுதசுரபி. தூசு படிந்த ஆர்வம்கூட புழுதியடித்துப் பறக்கும். அப்படி ஓர் ஈர்ப்பு. பரிசு பெற்ற சிறுகதைகள் நான்கும் அருமை.

**எஸ். வைதேகி,**
**கள்ளக்குறிச்சி 621 705.**

# நாணயம்



நேர்மை, நாணயம், உழைப்பு செழிக்கவும்
உங்கள் பொருளாதாரம் கொழிக்கவும்
வழிகாட்டும் பகுதி.

# பட்ஜெட்டுகளும் நாமும்

## எஸ். இராஜரத்தினம்

ஆண்டுதோறும் மார்ச் மாதம் மத்திய அரசும் மாநில அரசும் பட்ஜெட் (நிதிநிலை அறிக்கை) மூலம் நடப்பு ஆண்டின் தங்கள் வரவு செலவுக் கணக்குகளையும் வரும் ஆண்டின் திட்டத்தையும் அறிவிக்கின்றன. பட்ஜெட் என்றால் புதிய வரிகள் ஒருபுறம். சிறுசிறு வரிச்சலுகைகள் மறுபுறம். குறைந்த வருவாய் நிறைந்த செலவுகள். என்றும் குறையாத பற்றாக்குறை. நடப்பு ஆண்டின் குறைகளுக்கு சென்ற அரசின் மீது குற்றச்சாட்டு. வரும் ஆண்டின் அரசின் பல்வேறு புதிய திட்டங்களினால் விளையப்போகும் நன்மைகளைப் பற்றிய எதிர்பார்ப்புகள். ஆண்டுதோறும் நிகழும் பட்ஜெட் விளையாட்டிற்கு இவ்வருடமும் விதிவிலக்கல்ல.

மத்திய அரசு புதிய வரிகளை சில வாரங்களுக்கு முன் அறிவித்து பட்ஜெட்டில் வரி ஏற்றம் இல்லை என்று அறிவித்தது. மறைமுக வரிகளில் இறக்குமதி வரிகளும் நேர்முக வரிகளில் கொடுக்கப்பட்ட ஒரு சிறு சலுகைகளும் உற்பத்தி வரி மாறுதல்களினின்றும் பெரிய நன்மை ஏதும் ஏற்படப்போவதில்லை. மாநில அரசு அவைகளில் பலவற்றை விற்பனை வரி உயர்வினால் சரி செய்திருக்கிறது. தொலைபேசிக் கட்டணத்தின் மேல் விதிக்கப்பட்ட வரி, ஊழிய ஊதிய வரி (சர்வீஸ் டாக்ஸ்) மற்ற வரிகளும் பணவீக்கத்தை விளைவிக்கும். அழகு சாதனங்களின் விலை வரிச்சலுகையினால் சிறிதளவேனும் குறைந்திருப்பது மாநில அரசின் சாதனை! வாகன வரி உயர்வு, மின் கட்டண உயர்வினால் விலைவாசி மேலும் ஏறும்.

இவ்விரு அரசுகளுமே பற்றாக்குறை பட்ஜெட்டின் மூலம் பணவீக்கத்திற்கு வழி வகுத்திருக்கின்றன. அரசு ஊழியர்களும், வங்கி முதலிய தொழிற்சங்க அமைப்புகளுக்கு உட்பட்ட தொழிலாளர்களுக்கு விலைவாசி ஏற்றத்தினால் ஏற்படப்போகும் பளுவை அதிகப்படி கிராக்கிப்படிகள் மூலம் நேர் செய்ய முடியும். மீதமுள்ள மத்திய தர மக்கள் மேலும் கீழ்தள்ளப்படுவர். வெளிநாட்டு முதல் மூலம் வேலை வாய்ப்பும் உற்பத்திப் பெருக்கமும் வரும் என்ற நம்பிக்கையை இடையறாது பெருக்கி வருகிறது நமது மத்திய அரசு. மாநில அரசுகூட தொழிற்கூடங்கள் பல வரும் வாய்ப்பு இருப்பதையும் அதற்கு அரசு தரப்போகும் உதவிகளைப் பற்றியும் தன் பட்ஜெட்டில் கூறி அந்த நம்பிக்கையை வளர்க்கிறது.

ஆயினும் பெரிய கம்பெனிகளுக்கு மத்திய அரசு கணிசமான அளவில் வரிக்குறைப்பு செய்திருக்கிறது. மாநில அரசும் தோட்ட முதலாளிகளுக்கு விவசாய வருமானவரி விதிப்பு முறைகளின் மாறுதல்களினால் நல்ல அளவில் வரிச்சலுகையை அளித்துள்ளன. இவைகள் பெரும் வணிகர்களுக்கும் பெரும் தொழில் அதிபர்களுக்கும் ஒரு வரப் பிரசாதம்.

ஆயினும் உயர் கல்வி உயர் மருத்துவ உதவி ஆகியவற்றின் மீது புதிய வரிகள் விதிப்பதற்கு மாநில அரசு தனது திட்டத்தை அறிவித்திருக்கிறது. நவதானியங்கள், ஆடைகள், மண்ணெண்ணெய் விளக்குகள், அடுப்புகள் முதலிய பலவற்றின் மீது வரி விலக்கு நீக்கப்பட்டிருக்கிறது.

தமிழ்நாடு அரசின் கவனம் இப்போது கல்வியின்பால் திரும்பியிருக்கிறது. கல்வித்தரம் உயர்வதற்கோ அல்லது குறைந்து வரும் எழுதப்படிக்கத் தெரியாத மக்கள் தொகை கூட்டுவதற்கோ என்று நினைக்க வேண்டாம். உயர் மருத்துவ உதவி அன்றி உயர் கல்வி மீது வரிவிதிக்கத் திட்டம் உண்டு. உடனடியாக பாடப் புத்தகங்கள் உள்ளிட்ட எல்லாப் புத்தகங்கள், எழுதுகோல், மை, மாணவர்களின் மற்ற உபகரணங்கள் ஆகியவை மீது வரி ஏற்கனவே உள்ள வரி விலக்கை நீக்கி நூற்றுக்கு மூன்று சதவீதம் வரி விதிப்பை இந்த பட்ஜெட்டில் நமது மாநில அரசு அறிவிக்கிறது. முன்னொரு தடவை கொண்டுவரப்பட்ட புத்தகவரியை தமிழ்நாட்டில் சி. சுப்ரமணியம் அவர்கள் நிதி அமைச்சராக இருந்தபோது நீக்கினார். மாண்புமிகு அமைச்சர் திரு. நாவலர் நெடுஞ்செழியன் அவர்களுக்குப் புத்தகங்களின் மீது என்ன கோபமோ! நல்ல வேளையாக நமது அரசியல் சட்டத்தில் பத்திரிகைகளின்மீது வரி விதிக்கும் அதிகாரம் அரசிற்குத் தரப்படவில்லை. இதற்கு அரசியல் திட்டம் வகுத்த நமது பெருந்தலைவர்களுக்குள்ள தொலை நோக்கிற்கே நாம் நன்றி செலுத்த வேண்டும். பத்திரிகை சுதந்திரம் இதனால் பறிபோகாமல் பாதுகாக்கப்படுகிறது. இவைகளின் மீதுகூட உற்பத்தி வரி, அவைகள் வெளியிடும் விளம்பர வரிகள் மூலம் ஒரு சில நேரங்களில் அரசுகள் பத்திரிகைகள் மீதுள்ள கோபத்தைக் காட்ட முயன்றாலும் இந்த வரிகள் பின்னர் நீக்கப்பட்டன.

மத்திய – மாநில அரசுகள் தங்கள் பட்ஜெட்டுகள் மூலம் ஜெட் வேகத்தில் கூடிவரும் தங்கள் செலவினங்களைக் குறைக்க எந்த முயற்சியும் எடுக்கவில்லை. வேலை வாய்ப்பை அதிகரிக்க எந்த உடனடித் திட்டமும் இல்லை. எளிய மக்களுக்கு உள்ள



# உஜாலா

ஸ்ரீலங்கா, சிங்கப்பூர், மலே
சியா மற்றும் அரபு நாடுகளில் வெற்றிநடை போட்டு வரும் 'உஜாலா' சொட்டு நீலம் தென் னிந்தியாவில் அதிக உத்வேகத் துடன் செயல்படத் திட்டமிட் டுள்ளது.

இவ்வாண்டு மே மாதத்தில் இருந்து பாண்டிச்சேரி தொழிற் சாலை இயங்கத் தொடங்கும். இந்தியா முழுவதுமாக சுமார் 25,000க்கும் மேற்பட்ட விற்பனை யாளர்கள் உஜாலாவின் வெற் றிக்குப் பெரிதும் உறுதுணையாக இருக்கின்றனர். ஜோதி லேப ரெட்டரீஸின் புதிய தயாரிப்பு களான சலவை சோப்பு, ஆயுர் வேத குளியல் சோப்பு ஆகியவை விரைவில் வெளிவரும் என்று அதன் நிர்வாக இயக்குநர் திரு எம்.பி. ராமசந்திரன் தெரிவித் தார்.

20.3.94 அன்று சென்னை நியூ உட்லண்ட்ஸ் ஒட்டலில் நடை பெற்ற உஜாலா பரிசளிப்பு விழா வின்போது சிறப்பு விருந்தினர் திரு. எஸ். ரஞ்சித் சிங் ஐ.பி.எஸ். (டி.ஐ.ஜி. தமிழ்நாடு காவல்துறை) அவர்கள் குத்துவிளக்கு ஏற்றி தலைமை வகித்தார்.

படத்தில் இடமிருந்து வலமாக மறைதிரு தந்தை வின்சென்ட் - சின்னதுரை, ஜோதி லேபாரட் டரீஸ் உரிமையாளர் திரு. எம்.பி. ராமசந்திரன், மண்டல மேலாளர் திரு. பி.எஸ். சுபாஷ்சந்திரன், சென்னை, செங்கற்பட்டு மாவட்ட விநியோகஸ்தர் திரு. எம்.கே. தாமஸ்.

## இனி எங்கும் கோககோலா

மத்திய அரசின் தாராளமய மாக்கும் பொருளாதார கொள் கைப்படி அந்நிய மூலதன முத லீடுகள் வந்து குவிய அனுமதிக் கப்பட்டிருக்கின்றன. அது மட்டு மல்ல; பன்னாட்டு நிறுவனங்களும் தாராளமாக அனுமதிக்கப்பட் டுள்ளன.

இந்த வகையில் ஆடம்பரமாக வரவேற்கப்பட்டதுதான் அமெ ரிக்க கோககோலா.

அமெரிக்க குளிர்பானம் கோக கோலாவும் இந்தியாவில் உள்ள பிரபல பார்லே கம்பெனியும் கூட்டு முயற்சியில் இறங்கும் என்ற தகவல் தவறாகலாம்.

பார்லே கம்பெனி ஊழியர் அசோசியேஷன் புகாரில், "பார்லே குளிர்பான கம்னெியை அமெரிக்க ராட்சத கம்பெனியான கோக கோலா வாங்கி விட்டது. இதற் கான எல்லா ஏற்பாடுகளும் முடிந்து விட்டன.

"பார்லே கம்பெனியை விற்று பத்திரங்கள் முடிந்த பின்னும், அதற்கான வருவாய்க்கான வரு மான வரியை பார்லே சேர்மன் செலுத்தவில்லை. மாறாக ஷேர் கள், ஃபிக்சட் டெபாசிட் ஆகிய வற்றில் முதலீடு செய்திருக் கிறார்.

"கோக்-பார்லே கூட்டு முயற்சி யில் ரூ. 64 கோடி செலவில் பாட்டில் தயாரிக்கும் தொழிற் சாலை துவங்குவதாக அவர் அறி வித்ததும் உருப்பெறவில்லை" என் கிறது கம்பெனி ஊழியர்களின் அறிக்கை.

ஆக - கோககோலாவின் ஏக போக ஊடுருவல் இந்தியாவில் பரவுமானால் இனி எங்கும் கோககோலா மயம்தான்!

அடிப்படைத் தேவைகளை, அவர் களுக்கு விலை வீக்கத்தில் இருந்து காப்பாற்ற ஒருவிதத் திட்டமும் இல்லை. நடுத்தர மக்கள் வீக் கத்தினால் பின் தள்ளப்படுவர். ில தொழில்களும், சிறு வியா பாரிகளும் வரிப் பளுவினாலும் பன்னாட்டு கூட்டுறவுடன் இயங்கும் பெருந்தொழில்களின் போட்டி யினாலும் பெரிதும் பாதிக்கக் கூடிய நிலையில் உள்ளனர்.

ஆயினும் கம்பெனிகளுக்கும் பெருந்தொழில்களுக்கும் தரப் பட்ட உற்பத்திவரி, இறக்குமதி வரிகளில் வரிக்குறைப்பினால் தொழில் வளம் பெருக வாய்ப்பு உண்டு என்பதே நமது அரசு களின் நம்பிக்கை. ஆனால் அதற் காக அரசின் சார்பில் அது செய்யக்கூடிய பலதரப்பட்ட வசதிகளைச் செய்வதில் அது எப் போதும் போல் மெத்தனமாகவே இருந்து வருகிறது. இந்தப் பட் ஜெட்டுகளின் மூலம் அரசின் சிந்தனையிலோ அல்லது செயல் பாட்டிலோ பெரிதாக எந்தவித மாற்றமும் ஏற்பட்டதாகத் தெரிய வில்லை.

திருக்குறள் என்னும் பொக்கிஷம் தமிழன் உலகுக்கு அளித்த மாபெரும் பரிசு. இதில் இல்லாதவை உலகில் இல்லாதவைதான். எனவேதான் அன்றே சொன்னார்கள்: "இதன் பால் எல்லாப் பொருளும் உள" என்று. மனிதனின் இயல்புகளைப் பல கோணங்களில் ஆய்ந்து அவனை முன்னேற்றப் பாதையில் ஏற்றும் ஒரு மாபெரும் பணியை வள்ளுவப் பெருந்தகை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே செய்துள்ளார்.

சென்ற மாதம், கவலைகள் வரும்போது துவளாமல் இருக்கும் வழிபற்றி வள்ளுவர் கூறியதைப் பார்த்தோம். "துன்பமா சிரி" என்றார் வள்ளுவர்.

சிரித்தால் மட்டும் போதுமா? நாமென்ன திரிபுரம் எரித்த சிவனா, ஒரு சிரிப்பினால் பகைவரைச் சாம்பலாக்க?

வள்ளுவர் கூறுகின்றார்,

"தம்பி, நீ சிவனாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் சீவன் அற்றவனாக இருக்கக்கூடாது.

"உனக்கு மலேரியா வந்தால் அந்த மலேரியாவுக்கே மலேரியா வரும்படி பண்ணவேண்டும். உனக்குக் "காலரா" வந்தால் அந்தக் காலராவுக்கே காலராவை வரவழைக்க வேண்டும்." "இது எப்படி முடியும்? பொய்யா மொழியாரே?" என்று நாம் கேட்டால் அதற்கும் உடன் பதில் தருவார் திருவள்ளுவ நாயனார்.

இன்று பல நிர்வாகங்கள் நிலை குலைந்து போவதன் காரணமென்ன? துன்பம் வருகிறது. இடுக்கண் வருகிறது. இடுக்கண் வராதவர் யார்? உலகில் யாருமில்லை. அரசன் முதல் ஆண்டி வரை, தோட்டி முதல் தொண்டமான் வரை இடுக்கண் பால் படுவர்.

இராமபிரான் இடுக்கட்பட்டுக் கானகம் போகவில்லையா! நளமகாராசன் சமையல்காரன் ஆகவில்லையா! பாரதப் பெருங்கதையே பாண்டவர் பட்ட அல்லல் பற்றித் தானே?

எனவே, யாவருக்கும் இடுக்கண் வரும். அது வந்துவிட்டால் பாரதி பாணியில் அதை "மோதி மிதிப்பது" எப்படி என்று தெரிந்து கொள்ள வேண்டுமே? வள்ளுவப் பேராசான் என்ன சொல்லுகிறான் பார்ப்போமா?

"அடுக்கி வரினும் அழிவிலானுற்ற
இடுக்கண் இடுக்கட்படும்"

(குறள் 625)

இடைவிடாது, பட்ட காலிலே படும் என்றபடி மேல்மேலும் துன்பங்கள் வந்தபோதிலும் சிறிதும் மனங்கலங்காதிருப்பவன் அடைந்த அந்த துன்பமே துன்பப் படும். என்ன அற்புதமான சொல்லாக்கம் பாருங்கள்.

இடுக்கண் இடுக்கட்படும் - நான் முன்பு கூறியதே போல் நமக்கு வந்த மலேரியாவுக்கு மலேரியா வரும்.

இன்று ஒரு வங்கி இருக்கிறது. அது இடுக்கட்படுகிறது. உடனே அதில் பணம் போட்டோரெல்லாம் ஓடிவந்து "எங்கள் பணம் எங்கே, கொடுத்து விடுங்கள்" என்று பதறினால் (RUN ON THE BANK) வங்கி சரிந்து விழுந்து விடும். அதே நேரத்தில் வங்கியின் நிர்வாகிகள் சற்றும் மனங் கலங்காது தைரியமாகப் பணி யாற்றினால் நிச்சயம் அவர்கள் வெற்றி காண்பார்கள்.

ஒரு கம்பெனியில் பல தொழில் செய்கிறார்கள். திடீ ரென்று அவர்களது கப்பல் ஒன்று கவிழ்ந்து விடுகிறது. கன்னத்தில் கைவைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டால் கப்பல் நிமிர்ந்து விடுமா? அதற்குப் பதில் எதிலும் கலங் காது காரியமாற்றினால் வெற்றி என்கிறார் வள்ளுவர்.

அது மட்டுமல்ல - ஒரு துன்பம் வந்தால் கலங்கக் கூடாது என்று மட்டும் வள்ளுவர் கூறவில்லை. "அடுக்கி வரினும்" - ஒரு கொ[ள்ளை]தாக ஒன்றன்பின் ஒன்றாக தொடர்ந்து இடைவிடாமல் துன்ப[ம்] வந்தாலும் நீங்கள், அழிவிலானா[க]

## "இடுக்கண் இடுக்கட்படு[ம்]"



இருநதால், இத துன்பங்கள் துன்[ப]மடைந்து அழியும். துன்பங்களை[ச்] சாட நீங்கள் அசைவிலானாக, அ[ழிவி]லானாக இருக்க வேண்டும்.

டாக்டர்
கி. வேங்கடசுப்பிரமணியம்

# வெற்றியை நோக்கி வசந்த் அன் கோ



வசந்த் அண்ட் கோ உரிமை யாளர் திரு ஹெச். "வசந்த் குமார் தனது வெற்றிக்குத்தனது கடின உழைப்பும், திட்டமிட்டுச் செயல் படும் பழக்கமும், நவீன விளம்பர உத்திகளும், மேலும் தான் முதலில் விஜிபி நிறுவனத்தில் பெற்ற அடிப்படை அனுபவமும் தான்" என நினைவு கூருகிறார். 1978 இல் வசந்த் அண்ட் கோ முதலில் தியாகராய நகரில் ஆரம்பிக்கப்பட்டது. மக்களிடையே எலக்ட்ரானிக் பொருட்களின் மேல் வளர்ந்து வந்த மோகமும் வசந்த் அன் கோ வளர்ச்சியில் பெரும் பங்கு வகிக்கிறது. 1983 இல் இருந்து 85 வரையிலான கால கட்டத்தில் சாலிடெர், பிபிஎல் கம்பெனிகளின் பொருட்களுக்கு மலர்ஷிப் பெற்று நேர்முகமாகப் பெரிய நிறுவனங்களில் பணிபுரிப வர்களுக்கு மொத்த அளவில் விற்பனை செய்து வந்தார். இன்ஸ்டிட்டியூஷனல் சேல்ஸ் (Institutional Sales) என்னும் வகையில் ஆயிரக்கணக்கான கலர் டிவிகளை அசோக் லேலண்ட், சிம்சன், பெஸ்ட் அண்ட் கிராம்டன், டன்லப், எம்.ஆர்.எஃப் என்ற பல நிறுவனங்களுக்கு விற்பனை செய்து டி.வி விற்பனையில் முன் னணியில் இருந்தார். ஒரு முறை சாலிடெர் நிறுவனம் இந்திய அளவில் விற்பனையில் முதன்மை யாளர் எனத் தேர்ந்தெடுத்து 'ஸ்டாண்டர்டு 2000' கார் வழங்கி கௌரவித்தார்கள்.

தற்போது வசந்த் மிக்ஸ் ஃபாஸ்ட் என்னும் மூன்று ஜாடி உள்ள மிக்ஸி தயாரிப்பில் இறங்கி யுள்ளனர். வசந்த்அண்ட்கோவின் 20 கிளைகளின் மூலம் தற்போது மிக்ஸி விற்பனை நடைபெறுகிறது. மக்களின் பேராதரவுடன் மற்ற எல்லா கடைகளிலும் விற்பனை செய்யும் வகையில் விற்பனை பெருகும் என எதிர்பார்க்கிறார். தற்போது மாதத்திற்கு 2000 மிக்ஸி தயாராகிறது. கூடிய விரைவில் 5000மாக உற்பத்தியைப் பெருக்கி விரிவுபடுத்தும் திட்டங்கள் உள்ளன. மின்விசிறி, அறை கல் (Grinder) மோட்டார், ஸ்டெபிலைசர் போன்றவைகளும் இவர்களது சென்னை கோவை தொழிற்சாலை களில் தயாரிக்கப்படுகின்றன.

வசந்த் அண்ட் கோ ஓரிரண்டு மாதங்களில் பொது மக்களுக்கு 'வசந்த் டிமாண்ட் பாண்ட்' என்ற பத்திரத்தை வெளியிட இருக் கிறது. குறைந்த பட்ச முதலீடாக ரூபாய் 5000/-க்கு வருடம் 21% சதவீத வட்டி அளிக்கப்படும். சாதாரண மக்களும் மாதாமாதம் தங்கள் கையிருப்பைக் குறைந்த பட்சம் ரூபாய் 50/- செலுத்தி ஆண்டிற்கு 10 சதவீத வட்டி பெறலாம்.

1992 - 93 இல் 26 கோடிக்கு விற்பனை செய்துள்ள வசந்த் அண்ட் கோ 1993 - 94 இல் ரூபாய் 40 கோடி இலக்கை எட்டும் என்றும், 1994-95 இல் சுமார் ரூபாய் 60 கோடியும் 1995-96 இல் சுமார் ரூபாய் 100 கோடி இலக்கை எட்ட வும் திரு வசந்த் குமார் திட்டங்கள் வைத்துள்ளார். —டி.ஆர்.ஜி.

# அம்பு

டாக்டர். கோவி மணிசேகரன்

வெண்ணிப் பறந்தலையே விம்மி வந்தது.

மனித நாகரிகத்துக்கு யுத்தம் தேவைதானா!

கரிகாலச் சோழ மாமன்னருக்கும் சேரமான் பெருஞ்சேரலாதருக்கும் ஏற்பட்ட பகைமையை இந்த வெண்ணியிலா வாள் கொண்டு எழுதிப் பார்க்க வேண்டும்?

வெண்ணியைச் சொந்த ஊராகக் கொண்ட காவியச் செல்வி வெண்ணிக்குயத்தி ஓடுகிறாள். மிடரியில் மண் தெரிக்க ஓடுகிறாள்.

குமரிக்குச் சென்றிருந்தவள் காலையில்தான் ஊர் திரும்பினாள். போரில் கரிகாலச் சோழ மாமன்னர் வெற்றி கண்டு வாகை சூடிப் பூம்புகார் நோக்கிப் புறப்பட்டதும், சேரமான் பெருஞ்சேரலாதர் புறமுதுகில் புண்பட்டு, மானம் தாங்காது உண்ணா நோன்பு இருப்பதும் அவளது செவிகளில் அம்புகளாய்ப் பாய்ந்தன.

கவரியன்ன சேரமானைக் காண வேண்டுமே என்று ஓடுகிறாள்.

வடதிசை நோக்கி மாவீரன் சேரமான் பெருஞ்சேரலாதர், கீற்று வேய்ந்த சின்னஞ்சிறு குடிலின் சுவரில் சாய்ந்து, கண்மூடி, வதங்கிக் காணப்படுகிறார். வெண்ணிப் போரில் மாண்டவர் போக மீண்டவர்களைத் தலைநகர் நோக்கி அனுப்பிவிட்டான். தானைத் தலைவன் தித்தன், சில போர் வீரர்களும் தித்தனும் மட்டுமே காவல் நின்றனர். சேரமான் துணைக்கு, பெரும்புலவர் கழாத்தலையார் வருகை புரிந்திருந்தார். கொஞ்சம் மனவாறுதல். எனினும் பிரியப்போகிற உயிர் பிரியப் போவதுதானே?

ஓடோடி வந்த வெண்ணிக்குயத்தி, அந்தச் சிறு குடிலின் வாசலில் நின்று மூச்சிரைக்கக் கவனிக்கிறாள். அவள்தான் தமிழ்க் காவிய மகள் வெண்ணிக்குயத்தி என்பதை ஊர்மக்கள் மூலம் கேள்விப்பட்ட பெரும்புலவர் கழாத்தலையார், தமிழுக்கு மரியாதை தரவேண்டி எழுந்து கொண்டார். "வா, தமிழ்மகளே!"

தமிழ் மகளா?

பெருஞ்சேரலாதன் சற்றேக் கண்திறந்து கவனிக்கிறார். "யார் புலவர் பெருமானே?"

"வெண்ணியைச் சார்ந்த தமிழ்க்காவிய மகள்; வெண்ணிக் குயத்தி!"

"வெண்ணிக்குயத்தி! நான் போருக்குப் புறப்படுகிறபோது கேள்விப்பட்டேன், குயவர் குடியில் பிறந்து குங்குமத் தமிழில் பாடலியற்றும் குயத்தியா! மகளே! வணங்குகிறேன்; வணங்குகிறேன். இந்தப் போரில் வெற்றி கண்டதும் முதலாவதாக உன் வீட்டுக்கு வரவே திட்டமிட்டேன்; இதோ தோல்வியால் அவதியுறுகிறேன்!"

சேரமான் கரம்கூப்பி வணங்குகிறான். நாக்குழறியது.

அருகில் சென்ற வெண்ணிக் குயத்தி, "சேரமானே! என்னால் ஆகவேண்டியது ஏதேனும் இருப்பின் சொல்லுங்கள். காத்திருக்கிறேன்!"

ஆகவேண்டியது...? சேரமான் பெருஞ்சேரலாதன் கண்களைத் துடைத்துக் கொண்டு கவனிக்கிறார். ஆகவேண்டியது...?

அவருள் ஓர் எண்ணம். யாரிடம் சொல்வேன் என்றெண்ணியிருக்கையில் இப்படி ஓர் அசரீரியா?

"என்ன மன்னா இப்படிக் கவனிக்கிறீர்கள்?"

"ஆகவேண்டியது ஒன்றுண்டு. ஆனால் அது உங்களால் இயலாத செயல் என்பதால் எண்ணி நெஞ்சு இவ்விதம் ஏக்கமுடன் நோக்குகிறது".

"சொல்லுங்கள். முடியுமானால் முயலுகிறேன்".

"தமிழ்மகளே! இதோ கழாத்தலையார்; அதோ எனது மாவீரச் சேனாதிபதி. இருந்தும் நான் இந்த எண்ணத்தை வெளிப்படுத்தவில்லை. காரணம் நிச்சயமாக இவர்களால் முடியாது. நீங்களாக என் மனம் அறிந்து கேட்டதால் சொல்கிறேன். கரிகாலச் சோழர் மாவீரர்; நேரில் கண்டு மலைத்துப் போனவன் நான். வில்லெறிவதில் நான் தான் என்று அகம்பாவத்துடன் இருந்தேன். கரிகாலர் அந்த ராமபிரான்தான். அவர் விட்ட அம்பு தான் மார்பில் நுழைந்து எனது முதுகில் வெளிப்பட்டு நின்று அவமானத்தை ஏற்படுத்தி இருக்கிறது. இந்த அம்பைக் கரிகாலரே வந்து பிடுங்கி எடுக்க வேண்டும். அவரது மடியில் எனது உயிர் பிரியவேண்டும். ராமனின் அம்பு பட்டு ராவணன் இறந்த பெருமை எனக்கும் உரியதாக வேண்டும்".

ஆ! இவரன்றோ மாமன்னர்!

வெண்ணிக்குயத்தி வியந்தே போனாள். எனினும் இது கரு முகிலைப் பிடித்து, மின்னல் கொண்டு காப்பியம் எழுத முயலும் முயற்சி. முயன்றுதான் பார்ப்போமே!

"வில்லவப் பெரும, எனக்கு ஒரு ரதம் தேவை. வேகமாக ஒட்டவல்ல சாரதி தேவை".

"ஏன்?"

"பூம்புகார் நோக்கிப் புறப்படுகிறேன்".

சேரமான் செயலிழந்து கவனிக்கிறார்.

"முடியுமா?"

"தமிழ் வெல்லும்".

வில்லவர்க்கோன் தலையசைக்க விரைந்தது ரதம்.

புலவர்கள் நாவில் புகழ்பரப்பிய பூம்புகார் தலைநகரம், கோலாகலமாக வெற்றி விழாவினைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறது.

வேகமாகச் செல்லும் ரதத்தில் வெண்ணிக்குயத்தி அமர்ந்திருப்பதைக் கவனிக்கிறார்கள். ஒகோ! மாமன்னர் கரிகாலச் சோழரை வாழ்த்த வேண்டிச் செல்லுகிறார் போலும் என்று விவரமறிந்தோர் பேசிக்கொண்டனர்.

அரண்மனை அத்தாணி மண்டபத்தில் சோழமாமன்னர் கரிகால் பெருவளத்தார், வெண்ணிக்குயத்தியை விழுமிய நோக்குடன் வரவேற்றார். புலியின் வெற்றிப் பாய்ச்சல் அவரது கண்களில் பெருமிதமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

விழா இனிது முடிந்ததும் புலவர்கள், பூந்தமிழுக்குச் சாந்து வைத்துப் புலமையை வெளிப்படுத்துகிறார்கள். வெண்ணிக் குயத்தி மட்டும் வெறுமனே உட்கார்ந்து வேடிக்கை பார்க்கிறாளே! இவள் வேந்தனைப் பாட வரவில்லையா? வெற்றிவிழாவை மட்டுமே கண்டு களிப்பதற்காக வந்திருக்கிறாளா?

இவ்விதமாகச் சிலர் எண்ணிப் பார்க்கவும் செய்தனர். இந்த எண்ணம் இறுதியில் சோழ மாமன்னர் கரிகாலச் சோழருக்கும் ஏற்படத்தான் செய்தது. வெண்ணிக் குயத்தியார் பாடவில்லையே! மண்பிடித்துப் பானை செய்யும் குலம், பண்பிடித்துப் பாடல் செய்த பெருமை இல்லாமல் போய்விட்டதே!, மெல்லக் கேட்வும் செய்தார்.

"வெண்ணியாரே! உங்கள் தமிழ்க்குரல் ஒலிக்க வேண்டாமா?"

அவையில் அமைதி, யாருக்கு ஆலவட்டம் வீசுகிறது! வெண்ணியாருக்கா? குயத்தியாருக்கா?

"உங்களைத்தான் வெண்ணியாரே!"

இப்போது குயத்தி ஓர் இறுமாப்புடன் எழுந்தாள். "யாரைச் கேட்கிறீர்கள் சோழமன்னா?"

"உங்களைத்தான் வெண்ணியாரே!"

"என் பெயர் வெண்ணிக் குயத்தி".

"உங்கள் பெயர் வேறு; அதனை நீங்கள் பயன்படுத்த மறுத்த செய்தியும் தெரியும்! ஆயினும் குலப்பெயரிட்டு அழைக்க..."



இடைமறித்தாள் வெண்ணிக் குயத்தி. "மன்னா! குயவர் குலத்தில் தமிழ் குந்தி மகிழக் கூடாதா என்ன? தாழ்த்தப்பட்டவள் தமிழை உயர்த்தியதனால்தானே, இன்று தார்வேந்தன் அவையில் இடம் கிடைத்தது? எனவே நான் குயத்தி என்று சொல்லிக் கொள்வதில் பெருமை கொள்கிறேன். எனவே, குயத்தி என்றே அழைக்கலாம்".

நயத்தகு அத்தாணி மண்டபம், குயவர்மகளை வியத்தகு நோக்கில் விழைந்தது.

"உங்கள் பரந்த மனத்தைப் பாராட்டுகிறேன் வெண்ணிக் குயத்தியாரே! இந்த வேந்தனை உங்கள் தமிழ் திருமுழுக்குச் செய்யக்கூடாதா?"

"செய்கிறேன்; செய்யத்தானே வந்தேன். எனது நோக்கமும் அது தானே?" என்று கூறிய வெண்ணிக் குயத்தியார், அவையை ஒரு கணம் உற்று நோக்கினாள். பெரும் பெரும் புலவர் பெருமக்கள் பீடங்களை அலங்கரித்திருந்தனர்.

அந்நாளைய ஒரு குடை நிழல் கொண்ட ஓங்குபுகழ் பாங்கு தமிழில், பாடலானாள் வெண்ணிக் குயத்தி.

**களியியல் யானைக் கரிகால் வளவ**

**சென்றமர்க் கடந்தநின் ஆற்றல் தோன்ற**

**வென்றோய்...**

அதற்குமேல் வெண்ணிக் குயத்தி பாட்வதை நிறுத்தி, கரிகால் வளவரைக் கண்ணிமைக்காமல் கவனிக்கிறாள்.

"என்ன குயத்தியாரே! வன்றோய்... பாடல் முடிந்தாகத் தெரியவில்லையே!"... கரிகலன், மேலும் பாட்டைச் செவிமடுக்கத் துடித்தார்.

"சோழமன்னா! படலை முடிக்கிறேன்; முடிக்குமுன ஒரு வேண்டுதல்!"



"என்ன குயத்தியாரே! பரிசில் தானே? நான் கொடுத்து நீங்கள் பெறவேண்டாம்; நீங்கள் கேட்க நான் தருவேன். கரிகாலன் புலவர்களின் பரிபாலன்!"

"அறிவேன், பொன்னிநாட, அறிவேன். நான் கேட்க வந்த பரிசில் ஓர் அம்பு!"

"அம்பா?"

"ஆம், நீங்கள் சேரமான் பெருஞ்சேரலாதன் மார்பில் தைக்க விட்ட அம்பு! அந்த வீர அம்பு எனக்குத் தேவை!"

"அது போர்க்களத்தில் பிடுங்கி எறியப்பட்டிருக்குமே!"

"இல்லை; இன்னமும் அது பெருஞ்சேரலாதன் மார்பில் இருக்கிறது. அது சேரமானின் முதுகில் நுழைந்துவிட்டதால், அந்தப் புறப்புண் தாங்காது வெண்ணியில் - நான் பிறந்த மண்ணில், வடக்கிருந்து உண்ணா நோன்பு கொண்டு உயிர் துறக்க முடிவு செய்து விட்டது கொடுமையிலும் கொடுமை என்றாலும், மானத்துக்கு அது ஒரு மரியாதை! அந்த அம்பினை நீங்கள் வந்து அகற்றி எனக்குப் பரிசாகத் தருவீர்களா!"

கழலில் வியப்பு தொடங்கி, தலையில் அதிர்ச்சி வெடித்தது. இப்படி ஒரு பரிசா?

"என்ன மன்னா யோசனை?"

"நான் விட்ட அம்பை நானே பறிக்கமாட்டேன். இது என் வீரத்துக்குக் களங்கம்".

"ஆனால் சேரமானின் மானத்துக்குச் செம்மை நிறைந்த கௌரவம் தருமல்லவா?"

"இந்த வெற்றிவிழாவுக்கு அர்த்தமில்லாமல் போய்விடும்".

"ஆனால் தமிழுக்கே உரிய மானம் அர்த்தம் நிறைந்ததாக உலகம் போற்றுமே!"

"சேரமானின் இந்த முடிவும் - வடக்கிருந்து உயிர் துறக்கும் முடிவும் அர்த்தம் நிறைந்தது தான்; உலகு போற்றக் கூடியது தான்".

"சேரமானின் முடிவு இது வல்ல! அவரது உயிர் மாவீரராகிய உங்கள் மடியில் பிரிய வேண்டுமாம். ஏனெனில் அவரது மரணம் ஒரு மாவீரரால் ஏற்பட்டது பெருமைக்குரியதாம். தம்மை ராவணனாக்கி, உங்களை ராமபிரானாக்கிக் கூறியதை நானே கேட்டேன்".

"என் மடியில் சேரமான் உயிர் பிரியவேண்டும்! வேடிக்கையான வேண்டுதல். பிறகு கரிகாலன் சரித்திரம் காலடிக்குச் சென்றுவிடும்!"

"அப்படியா? வேடிக்கையான மறுமொழி! வேண்டாம்; நான் கேட்ட அம்புப் பரிசைத் தரலாமே!"

"அதுவும் முடிகிற செயலல்ல! நீங்கள் சேரமானுக்குப் புகழ் சேர்க்க வந்திருக்கிறீர்கள்".

"இல்லை; நான் பிறந்த வெண்ணியில் சேரமான் உயிர் விடுவது..."

"உங்கள் தமிழுக்கு அவமானம் என்கிறீர்களா?"

"இல்லை; எனக்கு அவமானம்".





இதர் அலி போன்றவர்களின் படையெடுப்பைத் தடுக்க முத்தியாலுப் பேட்டையும் பெத்த நாயகன் பேட்டையும் ஒன்று சேர்ந்த புதிய கறுப்பர் நகரத்தில் மதில் சுவர் ஒன்று எழுப்பப்பட்டது. அது இன்றைய 'ஜார்ஜ் டவுனு'க்கு வடக்கிலும் மேற்கிலும் மூன்றரை மைல் அளவுள்ளதாக இருந்தது. இதுவே ஒற்றை வாடை (Wall Tax Road) என அழைக்கப்படுவதாகும்.

அன்று இம் மதில்சுவர் 17 காவல் அரண்களை (Bastions)க் கொண்டதாகவும், ஏறக்குறைய 300 கெஜத் திற்குப் பீரங்கி அமைந்த இடைவெளிகள் (Curtains) உள்ளதாகவும், வெளியில் சரிவுமேடுகள் (Glacis) பொருந்தியதாகவும் அமைக்கப் பட்டது. வடக்கு மதில் சுவர் தொண்டையர் பேட்டைக்கருகில் வளைந்திருந்தது. வடக்கு ஆற்றை ஒட்டி மேற்கு மதில் சுவர் நேராகச் சென்றது. வடக்கிலும் மேற்கிலும் இருந்த பீரங்கிக் களங்களிலிருந்து (Rampart) குண்டுகள் வீசப்படுவதற்காக வெளியில் 600 கெஜ நீளமுள்ள அகல்வெளிகள் (Explanades) விடப்பட்டிருந்தன. அவ்வகல்வெளியின் மேற்பாகத்தின் தென்பகுதியே 19ஆம் நூற்றாண்டின் மத்தியில் மக்கள் பூங்காவாக (People's Park) மாற்றப்பட்டது.

இன்னும் இம்மதில் சுவரில் பல வாயில்கள் இருந்தன. இதில் தம்பு செட்டித் தெருவின் வடக்கு முனையில் இருந்த புல்லி வாயிலும் (Pully Gate), மணியக்காரச் சத்திரத்திற்கு அருகில் விளங்கிய திருவொற்றியூர் வாயிலும், தங்கசாலைத் தெருவின் வடகோடியில் காணப்பட்ட எண்ணூர் வாயிலும், யானைகவுனி வாயிலும் மிக முக்கியமானவை.

இம்மதில் சுவரின் காவல் அரணுக்கு வடமேற்குக் கோணத்தில் கடன்காரக் குற்றவாளிகளுக்கான சிறைச்சாலையும் (Debtor's Prison) மற்றொரு காவல் அரணுக்கு வடக்கு மதிலில் கொடுங் குற்றவாளிகளுக்கான (Criminal Jail) சிறைச்சாலையும் அக் காலத்தில் கட்டப்பட்டிருந்தன. அழிக்கப்பட்ட வடக்கு மதிலுக்கு அடுத்தாற் போலுள்ள வீதியில் இவற்றின் பழைய சின்னங்களை இன்றும் நாம் காணலாம். பழைய சிறைத் தெரு (Old Jail St.) என்ற பெயரில் ஒரு தெரு இராயபுர ஸ்டான்லி ஆஸ்பத்திரிக்கு அருகில் இப்போது உள்ளது. ஃ

---

"அதற்காக நான் அவமானம் ஏற்க முடியாது".

"இது மனிதப் பண்பினை உயர்த்தவில்லையா?"

"மனிதப் பண்பை உயர்த்தலாம்; மன்னர் பண்பை உயர்த்தாது. நீங்கள் பாடலை முடிக்கா விட்டாலும் நான் கவலைப்படேன்!"

குமுங்கிப் போனாள் குங்குமத் தமிழ்மகள்.

"மன்னா! உங்களுக்குக் கவலையில்லாமல் போகலாம். பாடலைப் பாதியில் நிறுத்திய பாவம் என்னை வந்து சேரக் கூடாதல்லவா?"

அவள் பாடி முடித்தாள்.

**வென்றோய், நின்னிலும் நல்லன் அன்றே**
**புறப்புண் நாணி வடக்கிருந் தோனே!**

பாடலின் முடிவைக் கேட்டுப் பதறி எழுந்தார் பூம்புகார் புகழ்ச் சோழ கரிகால் வளவன்.

"குயத்தியாரே! என்னை அவமதித்து விட்டீர்கள்".

"இல்லை!"

"அது எப்படி?"

"இல்லை; இல்லை; இதுவே இதன் பொருள்! நான் செல்கிறேன்!"

வெண்ணிக்குயத்தியும் விருட்டென்றெழுந்து வேதனைச் சுமையாய் விறுவிறுவென்று வெளியேறினாள்.

வில்லின் வீங்குபுகழ் வேந்தன், சொல்லின் செல்வியாம் சுந்தரக் குயத்திக்காக எதிர் பார்த்து, நமனிடம் காலதாமதம் வேண்டி உயிருக்காக மன்றாடிக் கொண்டிருந்தார்.

அதோ... ரதம் வேகமாக வருகிறது. வெண்ணிக்குயத்தி வந்துவிட்டாள். அவள் மட்டுமே வருகிறாளே! சோழ மன்னர் வர வில்லையா?

சேரமான் உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கிறது என்கிற செய்தி, வரும் வழியிலேயே வெண்ணிக்குயத்தியின் செவிகளில் வேதனையைப் பாய்ச்சிவிட்டது.

ஓடோடி வருகிறாள்.

உயிர்த் தடுமாற்றத்துடன் கரங்களைத் தூக்க முடியாது, கண்களைச் சுழலவிட்டு வணக்கம் போடுகிறார், சேரமான் பெருஞ் சேரலாதன்.

'கோ'வென்று கதறியழுதாளே யொழிய, நடந்தது என்னவென்று சொல்ல வெண்ணிக்குயத்தியின் நாவெழவில்லை.

ரத சாரதியாக மாறு வேடத்தில் சென்ற மாவீரத் தளபதி தித்தன், நடந்ததை நடந்தவாறு நாவில் ஓவியம் தீட்டிக் காண்பித்தான்.

"ஆ! இதுதான் எனது வெற்றி! கரிகாலனினும் நான் நல்லவன் என்று கன்னித் தமிழ் பறை சாற்றியதுதான் வெற்றி! நான் சாகா வரம் பெற்றுவிட்டேன்! நான் சாகா...."

பெருஞ்சேரலாதனின் பெருமை சால் தலை சாய்ந்துவிட்டது.

வெண்ணிப் பறந்தலை அவருக்கு வீர நடுகல் இட்டு, விழா நடத்தியது.

சோழன் கண்ட வெற்றி விழா அதன் முன் சோர்ந்து விட்ட தாகவே எண்ணினாள் சுந்தரத் தமிழரசி வெண்ணிக்குயத்தியார்.

அந்த அம்பு...

அவளது இல்லத்தில் கொலு வீற்றது. ஃ

# அசலுக்கு ஒரு போலி

புஷ்பா தங்கதுரை

மணி ஒன்பதுக்கு டெலிபோன் அடித்தது.

துப்பறியும் இன்ஸ்பெக்டர் சிங் தமது கையை நீட்டி எடுத்தார்.

— ஹலோ சிங்தானே! என்றது குரல்.

— எஸ், பிளீஸ்!

— நான் கந்தசாமி எம்.எல்.ஏ. பேசறேன். என் பிள்ளை வசந்த குமாரை யாரோ கடத்திட்டுப் போயிட்டாங்க! அவசரமா நீங்க வரணும்!

சிங் போனைக் கீழே வைத்தார்.

அடுத்த ஐந்தாவது நிமிடம் ஜீப்புடன் பறந்தார்.

கந்தசாமி விரைவாக விவரங்களைக் கொடுத்தார். இடையே மட்டும் சோகமாக விம்மல் வந்தது.

மெடிகல் கல்லூரியிலிருந்து வரும் வழியில் வசந்தகுமாரை இரண்டு முரடர்கள் பயமுறுத்தி ஒரு காரில் தூக்கிப் போட்டுப் பறந்து விட்டார்கள்.

இப்போது ஐந்து லட்ச ரூபாய் கேட்கிறார்கள். வசந்தகுமாரை விடுதலை செய்வதாகக் கூறினார்கள். இதுதான் முழு விவரம்!

சிங் ஏதாவது உதவி செய்ய முடியுமா!

யோசித்தார்.

பழைய எம்.எல்.ஏ. கந்தசாமி கை சுத்தம். உழைத்துச் சம்பாதித்தவர். தொழில் நிபுணர்.

நிச்சயம் இந்த நல்ல மனிதரை யாரோ ஏமாற்றப் பார்க்கிறார்கள்.

இதை விடக்கூடாது என்று நினைத்தார்.

— சரி! சார்! நீங்க என்ன சொன்னீங்க? என்றார் சிங்.

— பணம் தர்றதாகச் சொல்லியாச்சு!

— ஏன் அப்படிச் சொன்னீங்க?

— ஐயோ, சிங், என் பிள்ளையைக் கொன்னுட்டாங்கன்னா என்ன செய்வேன்! எனக்கு இருக்கிறது ஒரே ஒரு பிள்ளை! என்று கசிந்தார் கந்தசாமி.

— போலீசுக்குத் தெரிவிக்கலையா!

— உங்களுக்குச் சொல்லி அனுப்பினேனே! இதுதான் என் முதல் அறிவிப்பு!

— சார்! தவறு பண்றீங்களே! இப்போது பணம் கொடுக்க ஒத்துக்கிட்டப் பிறகு என்னை ஏன் கூப்பிடறீங்க?

— பணம் கொடுத்திடறேன்! ஆனால் எனக்குப் பிள்ளை கிடைக்கும்படி செய்யணும்.

— அதுக்காகத்தான் என்னைக் கூப்பிட்டீங்களா!

— அது மட்டுமில்லை! இந்தப் பரிவர்த்தனை சரியாக நடக்கும்படி நீங்க ஆலோசனை சொல்லணும். பிசகு ஏதாவது நேர்ந்து என் பிள்ளை போயிடக் கூடாது.

சிங்குக்குக் கொஞ்சம் கோபம் வந்தது. போலீஸ் இலாகாவில் பெயர் பெற்ற சி.ஐ.டி. அவர். பணயம் என்று வந்தால் முழுசும் போலீசை நம்ப வேண்டும் என்று சொல்கிறவர். கடத்தல்காரங்களுக்கு இணங்குவது அவருக்குப் பிடிக்காது!

எனினும் இப்போது என்ன செய்ய?

கந்தசாமியை இதற்காகக் குற்றம் சாட்டிப் பிரயோசனம் இல்லை.

பணத்தைக் கொடுக்கும் போது ஏதாவது உக்தி செய்து கடத்தல்காரர்களைப் பிடிக்க வேண்டும். முடியுமா?

— சரி! பணத்தை எப்படிக் கொடுத்துவிடப் போறீங்க! என்றார் சிங்.

— அதைப் பற்றித்தான் இன்னும் கொஞ்சம் நேரத்திலே போன் வரப்போகுது.

— பணம் தயாரா!

— தயார்! அதோ பெரிய பையிலே கட்டி வச்சிருக்கு பாருங்க!

சிங் யோசித்தார்.

நகரத்துக்குள் பணத்தைக் கொண்டுவரச் சொன்னால் இந்தக் கடத்தல்காரர்களைப் பிடித்து விடலாம்! நகரத்துக்கு வெளியே கொண்டு வரச் சொன்னால்தான் கடினம்.

நகரத்துக்கு வெளியே போவதற்கு மொத்தம் எட்டு வழிகள் உண்டு.

தமது வொயர்லெஸ்ஸை எடுத்து 'எமர்ஜென்ஸி' அறிவித்து எட்டு வழிகளையும் கண்காணிக்கச் சொன்னார்.

பிறகு அவரும் போனுக்குக் காத்திருந்தார்.

இரண்டாவது நிமிடம் போன் வந்தது.

கந்தசாமி பதற்றத்துடன் எடுத்தார்! பேசினார்.

ஆங். ஆங் என்று அவர் சொல்லிக்கொண்டே வர, சிங் அவரை கவலையுடன் கவனித்தார்.

போன் முடிந்ததும், — சார். பத்திரிகை நிருபர் பட்டாபிகிட்டே பணத்தைக் கொடுக்கச் சொல் றாங்க! வெளியிலே விஷயம் தெரியக்கூடாதுன்னு சொல்றாங்க.

சிங் யோசித்தார். இது என்ன இது? பத்திரிகை நிருபரிடம் கொடுக்கச் சொல்கிறார்களே. என்ன தைரியம்?

— சரி வசந்தகுமாரை எப்போ விடுதலை செய்யறாங்க?

— பணம் கொடுத்த உடனே விடுதலை செய்யறேன்னு சொல் றாங்க!

— அதெப்படி நம்பறது! பணம் பட்டாபிகிட்டே போனா அவர் என்ன செய்வாரு!

— அவர் உடனே வசந்த குமாரை விடுதலை செய்யும்படி போன் செய்வாராம்.

— யாருக்கு?

— அதைச் சொல்வாங்களா! பட்டாபிக்கு அது தெரியும்னு சொல்றாங்க.

சிங் யோசித்தார்.

பட்டாபி என்ற நிருபரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறார். சில சாகசப் பேட்டிகளைத் துணிச்சலோடு செய்வார். தலை மறைவாகப் போன பல பேரைச் சாமர்த்தியமாகப் பேட்டி கண்டு பத்திரிகை உலகத்தை ஸ்தம்பிக்க வைத்தவர்.

மோசமானவர்கள், தவிர்க்கப் பட வேண்டியவர்கள் என்று பொதுவாகக் கருதப்படுகிறவர் களோடு பட்டாபிக்குத் தொடர்பு அதிகம்.

அவர்களைப் பேட்டி கண்டு அவர்களது மனநிலைகளை விவ ரித்தே, ஒருவித பெயர் பெற்று விட்டார்.

பட்டாபியைப் பார்க்க வேண் டும் என்று சிங் நினைத்ததுண்டு. இதுவரை சந்தர்ப்பம் வரவில்லை.

— என்ன யோசிக்கிறீங்க சிங்?

— இதிலே ஏமாற்றம் ஆயிடக் கூடாது! என்றார் சிங்.

— எப்படிச் சொல்றீங்க?

— நீங்க பணத்தைக் கொடுத் திட்டு அவங்க உங்க பிள்ளையை விடுதலை செய்யாட்டி...

— அதைப் பற்றித்தான் உங்க கிட்டே நானும் கேட்டுக்கலாம்னு நினைக்கிறேன்.

நல்ல இக்கட்டான நிலையில் சிங்கிடம் உதவி கேட்கிறார்.

சிங் யோசித்தார்.

— பட்டாபி எங்கே இருப்பார் தெரியுமா?

— கோமளா அபார்ட்மெண்ட் ரெண்டாவது மாடி ப்ளாட்!

— ஓ! அவர்கிட்டே போன் இருக்கா?

— இருக்கு! அது மூலமாகத்தான் பணம் வந்ததை அவங்களுக்கு அவர் அறிவிப்பார்னு நினைக் கிறேன்.

— அப்போ...

திடீரென்று வார்த்தையை நிறுத்தி சிங் யோசித்து, அடுத்து தமது வொயர்லெஸ்ஸை உருவி னார்.

— ஹலோ லிங்க்! என்று தமது உதவி இன்ஸ்பெக்டரை அழைத் தார்.

— நிருபர் பட்டாபியோட போன்! உடனே அதை 'செக்' பண்ணனும்! நேரே டெலிபோன் எக்ஸ்சேஞ்சோடு தொடர்பு கொள் ளுங்க. ஒரு நிமிஷம் தாமதிக் காதீங்க. பட்டாபிக்கு வரும் போன்காலும் சரி, அவர் பண்ற போன் காலும் சரி, நம்பரைக் கண்டுபிடிக்கச் சொல்லுவாங்க.

கந்தசாமி திடுக்கிட்டு, — சிங் சார்! ஏதாவது ஏடாகூடம் ஆயிடப் போகுது! என்றார்.

— அப்படி ஏதும் செய்ய மாட்டேன்! பயப்படாதீங்க! இப் போது இந்தப் பணத்தை நான் தான் பட்டாபிகிட்டே கொண்டு போகப் போறேன் என்றார் சிங்.

— நீங்களா?

— ஆமாம்! வேஷம் மாத்திப் பேன்! யாரும் அடையாளம் கண்டு பிடிக்க முடியாது.

கந்தசாமி தயங்கினார்.

— சார் நீங்க செய்யறது...

— மிஸ்டர் கந்தசாமி! இதிலே எனக்குச் சந்தேகம் இருக்கு. பணத்தை வாங்கிட்டு நாம்ப ஏமாந்திடக் கூடாது! அதனாலே தான் நானே போறேன்.

நாலு மணிக்குப்போன் வந்ததும் சிங் பணத்தோடு புறப்பட்டார்.

**கோ**மளா அபார்ட்மெண்ட் ஸிலே எல்லாம் இரண்டு அறை குடியிருப்புகள்தான்.

இரண்டாம் மாடியில் 'பட்டாபி' என்ற போர்ட் இருந்தது.

மணியை அடிக்க, "கம்மின்" குரல்.

உள்ளே போனார்.

இரண்டாவது அறை பளிச்சாக இருந்தது. முதல் அறை வெளிச்ச மாகவும் காலியாகவும் இருந்தது.

கீழே கம்பளம் போன்று ஒரு விரிப்பு! அதன் மேலே ஓர் இரும்பு மேஜை நின்றது! அதன் மேலே டைப்மிஷின் திறந்த மேனியில்...

— வாங்க! என்று மெல்லிய தான குரல்.

பட்டாபிக்குத் தலை நரைத்து நாற்பதில் இருந்தார்! தடிக் கண்ணாடி, நெற்றியில் வியர்வை, கவலை! மும்முரமாக எழுதிக் கொண்டிருந்ததில் தடை ஏற் பட்டதில் சிறிது அதிருப்தி. அழுக்காக ஒரு வேட்டி கட்டி யிருந்தார்! கொடியில் இரண்டு பாண்ட் தொங்கியது.

'என் பெயர் கார்மேகம்! கந்தசாமி அனுப்பிச்சார்' என்றார் சிங்!

— ஓ! உட்காருங்க! பணம் கொண்டு வந்திருக்கீங்களா?

— நீங்கதானே பட்டாபி?

— ஆமாம்! சந்தேகம்னா பிரஸ் ரிப்போர்ட்டர்னு அடையாள கார்டைக் காட்டட்டுமா?

பையிலிருந்து கார்டை இழுத் தார்.

— வேண்டாங்க! வேண்டாங்க! என்றார் கார்மேகம். (சிங்)

— இதோ பையிலே இருக்கு எண்ணிக்குங்க என்று பையைக் கொடுத்தார். அதைத் திறந்து பார்த்தார் பட்டாபி.

சிங் பார்வை அப்போது மேஜை மீது பேப்பரில் விழுந்தது.

— சரி! என்று பட்டாபி பையை மூடினார்.

— எண்ணிக்குங்க.

உள்ளே கைவிட்டுக் கட்டுகளை வெளியே எடுத்தார் பட்டாபி. 100 ரூபாய் கட்டுகள்.

ஐம்பதையும் எண்ணினார்.

— இப்போ வசந்தகுமாரை விடு தலை பண்ணுவாங்களா?

— ஆமாம்! பண்ணிடுவாங்க! அது வரைக்கும் பணப்பை உங்க கிட்டேயே இருக்கட்டும்.

— பையன் நேரே வீட்டுக்குப் போயிடுவான் இல்லே.

— போயிடுவான்.

— வீட்டிலேர்ந்து கந்தசாமி எக்கு போன் பண்றேன்னு சான்னாரு!

— ரைட்டுங்க! அவர் போன் சய்த அப்புறம் நீங்க பணத்தைக் காடுத்தால் போதும் என்றார் ட்டாபி.

கார்மேகம் பேசவில்லை.

சிறிது நேர மௌனம்.

பட்டாபி எழுத முனைந்தார். யோசிப்பதும் எழுதுவதுமாக இருந் தார்.

கார்மேகம் குறுக்கிட்டார். — ஏன் சார்! பணம் வந்தாச்சுன்னா அவங்களுக்குத் தெரிவிக்க வேண் டாமா?என்றார்

— இதோ ஒரு நிமிஷம் என்றார் பட்டாபி.

சன்னல் அருகில் போனார்! மேல் சன்னல்கள் இரண்டும் கண்ணாடி போட்டிருந்தன.

அதில் இடது கதவை ஆறு முறை மூடித் திறந்தார். அடுத்து வலது சன்னலையும் அப்படியே செய்தார்.

— இதுதான் சிக்னல்! பையன் இப்போ ரிலீஸ் ஆயிடுவான்! என் றார்.

அட யமகாதகங்களா? சிக்ன லுக்காகப் போன் பண்ணுவாங் கன்னு எதிர்பார்த்து டெலிபோன் எக்ஸ்சேஞ்சிலே ஏற்பாடு பண்ணி யிருந்தோமே! இது மாதிரி சன் னலை ஆட்டி சிக்னல் கொடுப் பான்னு நினைக்கலையே என்று நினைத்தார் சிங்.

ப்ளாட் மூன்றாவது மாடியில் இருந்ததால் நல்ல உயரம்! சுற்றி வர வெகுதூரத்துக்குக் கட்டடங் கள். குட்டையாகத்தான் இருந்தன. எனவே யாராவது தூரத்தில் இருந்தே இந்த சன்னல் சிக் னலைக் கண்டு பிடித்திருக்க முடியும்.

ஒரு எதிர்பார்ப்பு வீணாகி விட்டது. அடுத்தது என்ன? யோசித்தார் சிங்.

அவர் கண்கள் மெதுவாகத் தரையைப் பார்த்தன.

பட்டாபி தீவிரமாக இருந்தார்! அவர் வேட்டிக்கு வெளியே அவர் பாதங்கள் ஆடிக்கொண்டிருந் தன. பாதங்கள் முன்னால் அவர் செருப்பு கழன்று கிடந்தது. பார்வை அந்தச் செருப்பின் மீது ஓடியது.

செருப்புக்குச் சற்று அப்பால் சுவரோரமாக ஏதோ கறுப்பாகத் தெரிந்தது! கூர்ந்து பார்த்ததும் பூட்ஸ்! அதைச் சுற்றி அது என்ன? கசிந்து வருகிறதே!

அவர் யோசிக்க...

டெலிபோன் அடித்தது.

பட்டாபி எடுத்து - ஹலோ! என்றார். பிறகு - இது உங்க ளுக்கு! என்று... கார்மேகத்திடம் கொடுத்தார்.

— யாரு கார்மேகமா?

— ஆமாம்!

— நான்தான் கந்தசாமி பேச றேன். ரொம்ப நன்றி! பையன் வீட்டுக்கு வந்துட்டான்.

— வந்தாச்சா?

— வந்தாச்சு. கண்ணாலே பார்த்தாச்சே! நீங்க பணத்தைக் கொடுத்துடலாம்.

— சரிங்க.

பட்டாபி ரிசீவரை வாங்கக் கைநீட்டினார்! ஆனால் கார்மேகம் என்ற சிங் உடனே எழுந்தார்!



## "'அமுத சுரபி'யில் மணமகன் – மணமகள் தேவை. விளம்பரங்கள் வரவேற்கிறோம்.

ஆயிரக்கணக்கான வாசகர்களின் விருப்பத்திற்கிணங்க 'அமுதசுரபி'யில் 'மணமகன் மணமகள் தேவை' பகுதி தொடங்கவிருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

எமது ஒரு பத்தி அளவில், அச்சில் 5 வரிகளுக்குள் அடங்குவதாக அனுப்பி வைக்க வேண்டும். 5 வரிகளுக்கு ரூ. 60/- கட்டணம் செலுத்த வேண்டும். அதிகபட்சம் 25 வார்த்தைகளுக்குள் அடங்குவதாக இருக்க வேண்டும். (விளம்பரதாரர்கள் தங்கள் முகவரியைத் தனியே எழுத வேண்டும். முகவரிகள் எமது அலுவலகத்தில் பாதுகாப்பாக வைக்கப்படும்)

ஒவ்வொரு விளம்பரத்திற்கும் அமுதசுரபி வரிசை எண் கொடுக்கப்படும். தொடர்பு கொள்பவர்களின் விவரம் விளம்பரதாரர்களுக்கு சேரச் சேர உடன் அனுப்பி வைக்கப்படும்.

விளம்பர வாசகத்தை அனுப்பும் போதே ரூ. 60/-க்கு மணி ஆர்டர் அல்லது டிராஃப்ட் 'ஸ்ரீராம் டிரஸ்ட்' என்ற பெயருக்கு அனுப்ப வேண்டும். (காசோலைகள் ஏற்கப்படமாட்டாது)

அனுப்ப வேண்டிய முகவரி :-

ஸ்ரீராம் டிரஸ்ட், அமுதசுரபி,
(மணமக்கள் தேவை பகுதி),
145, லிங்கச் செட்டி தெரு,
சென்னை - 600 001.

உங்கள் இல்லத்தில் மண நிகழ்ச்சி விரைவில் இனிதே நிறைவேற வாழ்த்துவதுடன், உங்களிடமிருந்து விளம்பரங்களை வரவேற்கிறோம்.

ரிசீவரால் பட்டாபியை ஒரு போடு நெற்றியில் போட்டார்.

சுருண்டு சாய்ந்தார் அவர்.

விழும்போது சிங்கைப் பிடிக்கப் பார்த்தார். சிங் விலகினார். அவர் கீழே விழுந்ததும் படீர் என்று காலால் ஓர் அடி! அவர் கண் இருண்டது.

அடுத்த கணம் தாவி அந்த கப்போர்ட் கதவுகளின் கொக்கிகளைக் கழற்றி இழுத்தார்.

உள்ளே மூலையில் கையும் காலும் கட்டப்பட்ட ஒரு நாற்பது வயது நபர் இடுக்கி உட்கார்ந்திருந்தார். அவர் வாய் கம் டேப்பால் ஒட்டப்பட்டிருந்தது.

– நீங்கதானே நிஜப் பட்டாபி! என்று கத்தினார் சிங், அந்த ஆளை நோக்கி. கட்டப்பட்டிருந்த அந்த ஆள் தலையை மட்டும் ஆட்டினார்.

– சிறுநீர் கழித்து எனக்கு சிக்னல் கொடுத்ததற்கு நன்றி! அபார யோசனை! நீங்க பிரமாத ரிப்போர்ட்டர்! என்று சொல்லி சிங் அவரது வாய் டேப்புகளைப் பிடுங்கி விட்டார். கை, கால்களை அவிழ்த்து விட்டார்.

தடுமாறி எழுந்த நிஜ பட்டாபி, – சார்! நல்லவேளை கண்டுபிடிச்சீங்க!

நான் இதற்காக சிறுநீர் கழித்ததும் சரியாகப் போச்சு! இவன் அந்தக் கடத்தல்காரனின் ஆளு! என் உதவியை நாடி வந்தவங்க! என்னை இந்த மாதிரி ஏமாத்திடபுள் க்ராஸ் பண்ணிவிட்டாங்க! அயோக்கியனுங்க. வாங்க! பாத்ரூமுக்கு...

– அங்கே உங்க டைப்பிஸ்ட் இருக்காங்களா? என்றார் கார்மேகம்.

– ஆமாம்! உங்களுக்கு எப்படித் தெரியும்?

– வரும்போதே முதல் அறையைப் பார்த்தேன். மெஷின் திறந்து கிடந்திச்சு! நாற்காலி இல்லை! விரிப்பு கீழே ஏதோ புடைச்சுக்கிட்டுத் தெரிஞ்சுது! ஒருவேளை டைப்பிஸ்ட் செருப்பாக இருக்குமோன்னு யோசிச்சேன். உள்ளே வந்தபோது பாண்ட் பார்த்தேன். அது பெரிய சைஸ்! அந்த போலி பட்டாபி ஒல்லியா இருக்கான்! அவனுக்கு அது சரிவராதுன்னு ஊகம் செஞ்சேன்.

இப்படி இந்த மூணும் சந்தேகம் கொடுக்கும்போதுதான், நீங்க கப்போர்ட்டிலிருந்து 'ஒண்ணுக்கு' அடிச்சிருக்கீங்க.

இது அபார உத்தி! நாங்களும் இப்படி செய்யறது உண்டு.

சிறுநீரைப் பார்த்ததும் என் சந்தேகத்தை நூறு சதவீதம் உறுதியாக்கிடுச்சு!

அந்த ஆசாமி ஒரு போலின்னு நினைச்சேன், என்றார் சிங்.

இருவரும் பாத்ரூமைத் திறந்து உள்ளே போனார்கள். தரையில் டைப்பிஸ்ட் கலா கையும், காலும் கட்டப்பட்டுக் கிடந்தாள். வாயில் டேப்!

விருட்டென்று போய் அவளை விடுவித்தார்கள்.

திரும்பி அறைக்குள் வர, சிங் அந்தப் போலி மெல்ல முனகுவதைப் பார்த்தார். 'இவனை வச்சு அந்தக் கடத்தல் கோஷ்டி முழுவதையும் பிடிக்கலாம்!' என்று போலியின் கைகளைக் கட்டி ஆரம்பித்தார் அவர். ஃ

# நெஞ்சுவலி

## அரசு மணிமேகலை



ராமுவுக்கு அந்த இடத்தில் நிற்கவே பிடிக்கவில்லை. அம்மா செத்துப் போய்விட்டாள் என்கிற உண்மை சுரீர் என்ன உறைத்தது. அதற்கும் ஒதும் அவள் முகமெல்லாம் அடி! தடவி, நெற்றியில் அ பெரிய குங்குமப் பொட்டுவி அந்த மூக்கில் பஞ்சு திணின் கொக்கி விரல்களைத் கட்டித்தார். இதென்ன கோரம

அம்மா அலையில் கையும் ட்ட ஒரு நாற்பது பான்; நெற்றியிஇடுக்கி உட்கார்ந் பொட்டு - பெஅவர் வாய் கம் பொட்டுதான். டப்பட்டிருந்தது. ஒரு தீற்றலாய்னே நிஜப் பட்டாபி! கொள்வான். ஏார் சிங், அந்த சின்ன தீற்ற கட்டப்பட்டிருந்த வகிட்டில் பளி. தலையை மட்டும் செந்நிறக் குங்கு

இருபத்தெட்டு வுக்கு அந்த விகழித்து எனக்கு அப்பா ஓடிப் த்ததற்கு நன்றி! சும்மா ஓடியிருக்க! நீங்க பிரமாத மனம் வெறுத்து, து சொல்லி சிங் இமயமலைப் பக்க. டேப்புகளைப் லாம். கை, கால்களை ர்.

இவர் அப்படி எல்லாம் ஓடாமல், ஒரு பெண்ணையும், அவள் குழந்தையையும் இழுத்துக் கொண்டு ஓடிவிட்டார். தெற்கே, திருநெல்வேலிப் பக்கம் இருக்கிறார் என்று ஒரு பேச்சு.

அம்மா அதிர்ந்து போனாள். அவளுக்கு ஊரார் ஒருவர் பின் ஒருவராக உள்ளே வந்து, "என்ன கோமதி?" என்று அவளைத் துக்கம் என்பதே பெரும் மானக் கேடாக டபுள்கது. அவள் பெண்மைக்குப் அயோக்யடி இல்லையா? தலை குமுக்கு... கார்ந்தவள்தான்!

— அங்கேய்த் தன்னைச் சுதா இருக்காங்களாடு அவள் நிமிர்வ மேகம். இரண்டு வாரங்

— ஆமாம்! உங இரண்டு படித் தெரியும்? கட்டிச் கை... ஓ!

— வரும்போதே முத தலை யைப் பார்த்தேன். மடிந்து திறந்து கிடந்திச்சு! ந இல்லை! விரிப்பு கீழே புடைச்சுக்கிட்டுத் தெரிசய்ய ஒருவேளை டைப்பிஸ்ட் லெக் பாக இருக்குமோன்னு யோடு சேன். உள்ளே வந்தபோ பாண்ட் பார்த்தேன். அது பெக் சைஸ்! அந்த போலி பட்டத் ஒல்லியா இருக்கான்! அவனு ர.

இரவில் நெஞ்சுவலி, நெஞ்சுவலி என்று துடித்தாள்; திணறினாள்; அவஸ்தைப்பட்டாள்.

ராமுவுக்குப் பயமாக இருக்கும். ரகசியமாகத் தம்பி மூர்த்தியிடம் கேட்பான்.

"மூர்த்தி, அம்மாவும் செத்துப் போயிடுமா?"

"சீச்சீ! அம்மாவுக்கு உடம்பு சரியில்லைடா! ரொம்ப வேலை செய்யுது இல்லே... அதான்! அதாலே முடியலே".

பெரியவன் போல மூர்த்தி விளக்கம் கொடுப்பான்.

"அப்போ, நான் இனிமே அம்மா கூடப் போயி, கூடமாட எல்லா வேலையும் செய்யப் போறேன். நீ படிக்கப் போ மூர்த்தி. நான் இனிமே ஸ்கூல் போகமாட்டேன். நிச்சயமா அம்மா கூடத்தான் போகப் போறேன்! பாவம் அம்மா!"

ராமு முடிவு கட்டினான்.

அடுத்த நாள் காலையில் கோமதி கிளம்பும்போது, ராமு குளித்துவிட்டு, வெடவெட என்று மழையில் நனைந்த கோழிக் குஞ்சாய் நின்றிருந்தான்.

"அம்மா! நீ தனியா வேலை செய்ய வேண்டாம். அதனாலே தான் உன் உடம்புக்கு முடியலை. இன்னிலேந்து பாரு. உனக்கு நெஞ்சுவலியே வராது..."

அம்மா முதலில் திகைத்தாள்; பிறகு சிரித்தாள்.

"அட பையா... நான் பயந்தே போயிட்டேன். இத பாருடா. நீ நல்லாப் படிச்சி, நல்ல வேலைக்குப் போகணும். அதுக்காகத்தானே அம்மா இப்படி அவஸ்தைப்படறேன்? என்னடா பிரமாதம்? அந்த ஆளு போனா என்ன? எனக்கு ரெண்டு கை இல்லே. என் பசங்களை நான் உருவாக்கிக் காட்டிடுவேன். நீயும், மூர்த்தியும் ஒரு வேலைக்குப் போயி, கை நிறையவே சம்பாதிக்க ஆரம்பிச்சிட்டா, அம்மா ஏன் வேலைக்குப் போகப் போறேன்? சொல்லு. அம்மாவை உள்ளங்கையிலே வெச்சி, தாங்கு தாங்குன்னு தாங்க மாட்டீங்களா?"

ராமுவின் நெற்றியில் ஒரு முத்தம் பதித்துவிட்டு, கோமதி வேலைக்குக் கிளம்பினாள்.

அம்மா சொன்னதில் முதல் பகுதி நிறைவேறியது. ஆமாம். மூர்த்திக்கும், ராமுவுக்கும் நல்ல வேலைகள் கிடைத்தன. ஆனால்,



அம்மாவைத் தாங்குவது... அதுவும் உள்ளங்கையில் வைத்துத் தாங்குவது. -

ம்கூம்... அவர்களுக்கு வேலை கிடைத்த மறுமாதமே கல்யாணம் நடந்துவிட்ட பிறகு, அம்மாவைத் தாங்குவதாவது!

"அம்மா... அம்மா..."

முகத்தில் அறைந்து கொண்டு அழுதான் ராமு. எப்பேர்ப்பட்ட முட்டாள்தனம் செய்துவிட்டான்? அவனும் தானாகட்டும், பெரியவன் மூர்த்தியும் தானாகட்டும் - கொஞ்சமாவது பொறுப்போடு நடந்து கொண்டார்களா?

பெண்டாட்டி மோகத்தில் அம்மாவின் மரியாதை கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்தல்லவா போயிற்று? ம்! அம்மா! நீ என்ன நினைத்துக்கொண்டாயோ?

வாழ்க்கையின் ஜீவனே அம்மா தான் என்ற நிலை மாறி, வெறும் சுமை அம்மா என்கிற எண்ணம் எப்படி வளர்ந்தது? அதனால் தானே, மூர்த்திக்கும், ராமுவுக்கும் நடுவில் பல நேரம் பலப்பரீட்சைகள் நடந்தன.

"ஏம்மா! மூர்த்தியும் உன் வயத்துலே பிறந்த புள்ளை தானே? அவன் ஜோடியா, சினிமா, நாடகம்னு நிம்மதியா இருக்கணும். நான்தான் ஏமாந்தவனா? உன்னை வெச்சுக்கிற பொறுப்பு எனக்கு மட்டும்தானா? என்னம்மா நியாயம் இது?"

கோமதி கண்கலங்க மகனைப் பார்த்தபடி பரிதாபமாக நின்றிருப்பாள். அழுவது கிடையாது. ஒரு சொட்டுத் தண்ணீர் அவள் கண்களில் வராது.

மூர்த்தி வீட்டுக்குப் போனால், அவனும் இதே போலத்தான் பேசுவான். வாலிபத்தில் தாய்ப் பாசம் எப்படி மாறிப்போகிறது என்கிற புதிர் அம்மாவுக்குப் புரியவே இல்லை.

இந்தப் பத்து வருஷங்களாக இதே துன்பம்தானே? ஒரு நாளாவது அம்மா நிம்மதியாய், மகிழ்ச்சியாய் எந்த மகன் வீட்டிலாவது சாப்பிட்டிருப்பாளா?

ராமு முதன் முறையாக மனைவியை வெறுப்போடுப் பார்த்தான். அவள் கதறிக் கதறி அழுது கொண்டிருந்தாள். அந்த நடிப்பு எரிச்சல் மூட்டுவதாக இருந்தது. அதற்கும் மேலாக, மூர்த்தியின் மனைவி அம்மாவின் தலைமாட்டில் உட்கார்ந்து, 'ஹோ'வென்று அழுது இன்னொரு சாகச நாடகத்தை அரங்கேற்றிக் கொண்டிருந்தாள்.

## சென்னை-அன்று

சென்னை நகர் 1639 இல் நிர்மாணிக்கப்பட்டது. பிரான்சிஸ்டே என்ற ஆங்கிலேயர் சந்திரகிரி ராஜாவிடமிருந்து அனுமதி பெற்று 1640 இல் புனித ஜார்ஜ் கோட்டையைக் கட்டினார். இதற்கு வடக்கே கறுப்பர் நகரம் என்றழைக்கப்பட்ட ஜார்ஜ் டவுன் உருவானது.

1688 இல் சென்னை மாநகராட்சி உருவாக்கப்பட்டது. இதற்கென 2 ஆம் ஜார்ஜ் அரசர் ஓர் அனுமதி உத்தரவை வெளியிட்டார்.

1702 இல் இந்நகரம் ஔரங்கசீப்பின் தளபதி தாவூத்கான் என்பவராலும் 1741 இல் மராத்தியர்களாலும் முற்றுகையிடப்பட்டது. இவ்விரு முயற்சிகளும் தோல்வியில் முடிவடைந்தன.

1746, 1758, 1772 ஆம் ஆண்டுகளில் இந்நகரம் பிரெஞ்சுக்காரர்களின் கட்டுப்பாட்டிற்குள் வந்தது. அதற்குப் பின் நாடு சுதந்திரமடையும் வரை சென்னை ஆங்கிலேயர்களின் கீழேயே இருந்தது.

ஊரில் இருந்து நல்லசாமித் தேவர் வந்தார். அவர் சில நொடிகள் அம்மாவையே பார்த்தபடி நின்றிருந்தார்...

"ம்ம்... அவ பொழுதும் முடிஞ்சிப் போச்சி..."

ராமுவும், மூர்த்தியும் வாசலுக்கு அவர் பின்னாலேயே போனார்கள். ஓர் ஓரமாக நகர்ந்தார்.

"நான் பல தடவை சொல்லிப் பார்த்தேன் உங்கம்மாகிட்டே! ஏன் இப்படிப் பெரியவன் வீடு, சின்னவன் வீடுன்னு அல்லாட்றே? அட! அந்த நாள்லேதான் பாடாப் பட்டே - அந்தப் பாவி ஓடிப் போயி... இப்ப ஏன்மா இப்படிக் கஷ்டப் படறே? அப்படின்னு..."

ராமுவும், மூர்த்தியும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். தங்கள் பவிசு ஊருக்கே தெரிந்திருக்கிறதே... -

"ஒங்கம்மா என்ன சொன்னா தெரியுமா? ரெண்டு புள்ளைங்களைத் தனியா நின்னு வளத்து ஆளாக்கிட்டேன். எவ்வளவு அவஸ்தைன்னு உங்களுக்குப் புரிஞ்சிருக்கும்! இப்போ என் ஒரு வயித்துக்கு என்னாலே யார் வீட்டுலேயாவது வேலை பார்த்துக்க முடியாதா என்ன? ஊர் என்ன பேசும்? அட! புருஷனும் சரியில்லே, புள்ளைங்களும் சரியில்லேன்னுதானே! அந்தப் பேரு என் புள்ளைங்களுக்கு வேணாம்னு தான் பல்லைக் கடிச்சிக்கிட்டு ரெண்டு பேர் வீட்டுலேயும் மாறி மாறி இருக்கிறேன்"னா... என்னப்பா நீங்க இப்படிப் பண்ணிட்டீங்க? இனிமே என்ன அழுதாலும், அவளை நல்லபடியா வெச்சி, ஒரு வாய் கஞ்சி ஊத்தற பாக்கியம், திரும்பவும் கெடைக்குமா என்ன? நான் எத்தனையோ தடவை நாசுக்காச் சொன்னேனில்லே?"

"அம்மா! நீ வேலைக்குப் போறப்போ நானும் கூட வரேன். கூட மாட வேலை செய்யப் போறேன். அப்பத்தான் உனக்கு நெஞ்சுவலி வராது..."

சிறுவன் ராமு கெஞ்சினான்.

காட்சி மாறியது.

வாலிபன் ராமு வார்த்தைகளால் தாயைத் துன்புறுத்தினான்.

"அம்மா! அம்மா..."

கதறத் தொடங்கினான் ராமு. காலத்திற்கும், எந்த மருந்துக்கும் அடங்காத, மன வேதனை என்கிற நெஞ்சுவலியை அவன் உள்ளம் உணரத் தொடங்கிற்று.

"அம்மா! அம்மா!"

அம்மாவை இழந்துவிட்ட வேதனையின் முழுத் தகிப்பும் இப்போதுதான் வந்து அவன்மீது கவிந்து கொண்டது... அம்மா! அம்மா!

# ஒரு சின்ன வீடு பெரிய வீடு ஆகிறது!

**ஜோதிர்லதா கிரிஜா**

மருமகள் ஓர் அலுவலகத்தில் வேலை செய்பவளாக இருந்து மாதா மாதம் கைநிறையக் காசைக் கொண்டு வந்து கொடுப்பவளாக இருக்க வேண்டும் என்ற ஆசையெல்லாம் மங்களத்தம்மாளுக்குக் கிடையாது. சம்பாதிக்கிற மருமகளிர் உள்ள வீடுகளில் மாமியார்களுக்குப் போதுமான ஒய்வு கிடைப்பதில்லை என்பது அவள் கண்டறிந்த உண்மையாக இருந்தது. மாமியார்கள் கைகளில் சிக்கி, மருமகள்கள் துன்புறுவதாய்த்தான் உலகம் முழுக்கப் பேச்சு அடிபடுகிறது. ஆனால் மருமகளால் தொல்லைப்படும் மாமியார்களும் நிறையப் பேர் இருக்கவே செய்கிறார்கள் என்பது மங்களத்தம்மாளின் அசைக்க முடியாத முடிவு ஆகும்.

'ஆபீசுக்குப் போனாலும் சமையலை முழுவதுமாக நீதான் செய்ய வேண்டும்' என்று விதி வகுக்கும் மாமியார்கள் பெரிய எண்ணிக்கையில் இருக்கவேச் செய்தாலும், அப்படிப்பட்ட மாமியார்களுக்குக் கடுக்காய் கொடுத்துவிட்டுப் பெரிய அளவில் வீட்டு வேலைகளை அவர்களின் வயோதிகத் தோள்களில் ஏற்றி வைக்கும் பல மருமகள்களைப் பார்த்த வெறுப்பில்தான் மங்களத்தம்மாள் தன் மருமகள் வேலை பார்க்காதவளாக இருத்தலே நன்று என்று தீர்மானித்திருந்தாள். 'இஞ்சி லாபம் மஞ்சளிலே' என்ற கதையாய் மருமகள் கொண்டுவரும் காசுக்கு ஆசைப்பட்டுப் பெரிய அளவிலான வேறு வகை இழப்புகளுக்குத் தன்னை உட்படுத்திக்கொள்ள அவள் விரும்பவில்லை.

'ஆனால், மங்களத்தம்மாளின் கொடுப்பினைச் சரியாக இராமையால், ஓர் அலுவலகத்தில் வேலை செய்யாத மருமகளாக இருந்த போதிலும், மருமகள் கவிதா வீட்டு வேலைகளில் கழப்பாளித்தனம் காட்டுபவளாக இருந்தாள். அடிக்கடி அவள் சோர்ந்து சோர்ந்து படுத்தது உண்மையான சுகவீனத்தாலா, இல்லாவிட்டால் பாசாங்கா என்பதை மங்களத்தம்மாளால் துல்லியமாய்க் கண்டுபிடிக்க முடியவில்லை.

'நீங்கள்தான் முக்கிய வேலைக்காரி. நான் உங்களுக்கு எடுபிடி ஆளாகத்தான் கூட மாட ஒத்தாசை செய்வேன்' என்று அவள் சொல்லாமல் சொன்னாள். மாமியார் ஏவினாலொழிய அசைய மறுக்கும் குட்டிச் சாத்தான் மாதிரி அவள் நடந்து கொண்டது மங்களத்தம்மாளுக்கு எரிச்சலூட்டியது.

வேலைக்காரி திடீரென்று மட்டம் போட்டுவிடும் நாள்களில் வீட்டைப் பெருக்கும் வேலையைச் செய்ய மருமகள் கவிதா ஆணித்தரமாகவே மறுத்தாள். குறிப்பாக வீடு பெருக்கும்போது கிளம்பும் புழுதி தனக்கு ஒத்துக்கொள்வதில்லை என்றும் அதனால் தன்னால் துடைப்பத்தால் பெருக்க இயலாது என்றும் திட்டவட்டமாக அறிவித்தாள். வயதான மங்களம்தான் தொப்பையைச் சரித்துக் கொண்டு மூச்சு வாங்கப் பெருக்க வேண்டியதாயிற்று. நெற்றி வேர்வை தரையில் ஒழுக, வயதான தம் மனைவி தரையைப் பெருக்கியதைப் பார்க்க நேர்ந்த போதெல்லாம் மாமனார் சுந்தரேசன் மிகுந்த ஆத்திரத்துக்கு ஆளானார். ஆனால் வாயைத் திறந்து ஒன்றும் சொல்ல முடியவில்லை. மகன் எதையுமேக் கண்டு கொள்வதில்லை என்பது அவரது ஆத்திரத்தை அதிகமாக்கிற்று. அதுமட்டுமில்லாமல், நாளாக நாளாக மருமகள் வீட்டு வேலைகளில் கொண்ட பங்கின் அளவு குறைந்து கொண்டே போயிற்று.

அவர்கள் வீடு மிகவும் சிறியது. ஒரு சமையலறை, சின்னதாக ஒரு கூடம். ஒரு சுமாரான அறை. அந்த ஒரே அறைதான் மகனுக்கும் மருமகளுக்கும் தனியறையாகப் பயன்பட்டுக்கொண்டு இருந்தது. கூடத்தில் ஒரு மூலையில் தன் பழைய புத்தக அலமாரியுடன் சுந்தரேசன் சாய்வு நாற்காலியில் தம் பொழுதைக் கழித்து வந்தார். மகனுக்குத் திருமணம் ஆவதற்கு முன்னால் அந்த ஒரே அறையைத் தந்தையும் மகனுமாய்ப் பங்கு போட்டுக் கொண்டிருந்தார்கள். இப்போது அது முடியாது போயிற்று. கூடத்து மூலையில் காற்றோட்டமே இல்லாததால் பெரிய உடம்புக்காரரான சுந்தரேசன் வியர்வையில் குளிக்க வேண்டியதாயிற்று. ஆனால் அவருக்கு வேறு வழி இல்லாது போயிற்று. ஆயினும் அதை ஒரு தொந்தரவாக அந்தத் தந்தையுள்ளம் நினைக்கவே இல்லை.

நாள்கள் செல்லச் செல்ல, மருமகளின் அட்டகாசங்கள் அதிகரித்தன. வேலைகளில் பெரும்பாலானவற்றை மாமியாரின் தலையில் சுமத்தி விட்டு அவள் நிறைய அளவில் ஒய்வெடுத்துக் கொள்ளத் தொடங்கினாள். தங்களுக்கு இருப்பது ஒரே மகன் என்பதால், இருவரும் கூடியவரையில் பொறுமையாக இருப்பது என்று பேசி வைத்திருந்தார்கள். தங்கள் மனக்குறைகளைக் கூடிய வரை அவன் செவிகளுக்கு எட்ட விடுவதில்லை என்று தீர்மானித்திருந்தார்கள். தன் கண்ணுக்கு எதிரிலேயே மனைவி தப்பு செய்தபோது அதைக் கண்டுகொள்ளாதிருந்த மகனை அவரால் மன்னிக்க முடியவில்லை. வயோதிகத் தாய் குனிந்து நிமிர்ந்து பெருக்கி மெழுவதையும் மனைவி தடித்தாண்வத்தனமாய் நின்று தலைவாரிக்

கொண்டு கண்ணாடியில் அழகு பார்த்துக் கொண்டிருப்பதையும் ஒரு நல்ல மகனால் எவ்வாறு கண்டுகொள்ளாமல் இருக்க முடியும் என்ற கேள்வி அவரை வதைக்கலாயிற்று. இது அதிக நாள்களுக்கு வளரக்கூடாது என்பதில் அவர் பிடிவாதம் காட்டிவிடுவது என்று முடிவு செய்து அம் முடிவைத் தன் மனைவியிடம் சொன்னபோது, "வேணாங்க. நமக்கு இருக்கிறது ஒரே பிள்ளை. அவனுக்கு நம்ம மேல மனத் தாங்கல் வரக் கூடாதுங்க. குடும்ப அமைதி போயிடும்" என்று கண்கலங்கினாள், அவள்.

கடைசியில் மங்களத்தம்மாளே பொறுமை இழக்கும் கட்டம் வந்தது.

ஒரு நாள் சாப்பாட்டு நேரத்தின் போது, "அப்பா, மாடியில் ஒரு ரூம் கட்டினா என்னப்பா? நாங்க அந்த மாடி ரூமை உபயோகப் படுத்திப்போம். நீங்க என்னோட அறையை வச்சுக்கலாம்" என்று மகன் மணிகண்டன் பேச்சைத் தொடங்கினான்.

"செய்யலாம். நல்ல ஐடியா தான்".

"எனக்குத் தெரிஞ்ச ஒரு பில்டிங் கண்ட்ராக்டர் இருக்காம்ப்பா. கொஞ்சம் நாணயமானவன். நாளைக்கே அவனைப் பார்த்து ஏற்பாடு பண்ணட்டுமா? பிளான் அப்ரூவலெல்லாம் அவனே வாங்கிக் குடுத்துடுவான். நமக்கு எந்த அலைச்சலும் இருக்காது".

"செய்யேன்".

"இப்போதைக்கு ஒரு பெரிய ரூமாகக் கட்டிடலாம். அப்புறம் கொஞ்ச நாள் கழிச்சு இன்னும் பெரிய வீடாகக் கட்டிடலாம். மாடிக்கே நாமெல்லாம் போய் இருந்துக்கிட்டு, கீழ வாடகைக்கு விட்டுடலாம்ப்பா."

"உங்க ஆபீஸ்ல உனக்குக் கடன் கிடைக்குமில்ல?" என்று அவர் வினவியதும் வாயருகே கொண்டு போன கவளத்தை நிறுத்தியபடி மணிகண்டன் கண்கள் விரிய அவரை நோக்கினான்.

"நீங்கதாம்ப்பா ஒத்தாசை செய்யணும். நீங்க ரிடையர் ஆனப்ப வந்த பணத்துலேருந்து எடுத்துக் குடுங்கப்பா..."

மருமகளும் மகனும் அறியாத முறையில் 'ஒத்துக்காதீங்க' என்று மங்களத்தம்மாள் அவருக்குக் கண் சாடைக் காட்டினாள். அவரும் ஒத்துக்கொள்வதாக இல்லைதான். கை கால்கள் திடமாக இருக்கும் போதே தங்களை மரியாதையாக நடத்தாத மருமகளும், அதைக் கவனிக்காமல் - அல்லது கவனியாதவன் போல் இருக்கும் மகனும் கையிருப்பையெல்லாம் செலவு செய்து வெறுங்கையோடு நின்றால் தங்களை நாளைக்குக் கடுகளவும் மதிக்க மாட்டார்கள் என்பதை அவரும் புரிந்துகொண்டே இருந்தாராதலின், "இத பாரு மணி, எங்கிட்டப் பணம் இருக்குறது உண்மை. ஆனா அதை நான் சமயம் போதுன்னா இருக்கட்டும்னு வச்சிருக்குறேன். நாளைக்கே யாருக்கோ ஏதோ பெரிய நோயா - அட, சுண்ணாம்பு புன்னா வாய் வெந்துடாது - வந்திச்சுன்னு வச்சுக்க. பணம் தேவையா இருக்குமில்லை? அதனாலே கையிருப்பை யெல்லாம் வீட்டுல போட்டுட்டு வெறும் பயலா இருக்கக் கூடாது. தவிர, நாங்க உன் கல்யாணத்துக்கு வரதட்சணை, அது இதுன்னெல்லாம் கேக்கல்லே. ஒரு குறிக்கோளுக்காக எதுவுமே வேணாம்னு சொல்லிட்டம். அப்படி ஏதாச்சும் வாங்கி முடிஞ்சிருந்தாலும் இப்ப அதை உங்கையில் குடுத்திருவேன்..." என்றார்.

"வரதட்சணை வாங்காததைச் சொல்லிச் சொல்லிக் காட்டலைன்னா உங்க ரெண்டு பேருக்கும் தூக்கம் வராதே" என்று கவிதா இடைவெட்டவும், அவருக்குத் தூக்கிப்போட்டது.

அவர் வாயிழந்து உட்கார்ந்திருக்க, மகனும் வாய் மூடி இருந்தான். மங்களத்தம்மாளுக்குத் தான் தாங்கவில்லை.

"என்னத்தைச் சொல்லிச் சொல்லிக் காட்டறாங்க இங்க? கல்யாணம்னு ஆகி மருமகளை வீட்டுக்குக் கூட்டிக்கிட்டு வந்தா, எம்புட்டு வரதட்சணை வாங்கினீங்கன்னு நாலு பேரு கேக்கத்தான் செய்வாங்க. அப்படிக் கேக்குறவங்ககிட்டயெல்லாம் வாங்காத ஒண்ணை வரங்கினதா நாங்க சொல்ல முடியுமா? நாங்களாகவா வீடு வீடாப் போய் வரதட்சணை வாங்கலே, வரதட்சணை வாங்கலேன்னு தமுக்கு அடிச்சோம்".

"சரி, சரி. விடு. அது என்னமோத் தெரியாத்தனமாப் பேசுது... அப்பா, மணி. நீதான் உன் ஆபீஸ்ல கடன் வாங்கணும்..."

மருமகள் தம் மகனைப் பார்த்துக் கண்சாடைக் காட்டியதை சுந்தரேசன் கவனித்துவிட்டார். அவருக்குச் சிரிப்பு வந்தது. தத்தம் கணவனைக் காப்பாற்றுவதில் இரண்டு பெண்களும் ஒரே மாதிரியாகச் செயல்பட்டதைப் பார்த்துத்தான்.

"சரிப்பா. விடுங்க. ஏதோ ஆசைப்பட்டுக் கேட்டேன். நீங்க ஒண்ணும் எனக்காகத் தியாகம் செய்ய வேணாம்..."

சுந்தரேசனுக்கு எரிச்சல் வந்தது. "உன் பேர்ல ஒரு எப்.டி. போட்டிருக்கேனில்லை? அது இன்னும் மூணு மாசத்துல முடிஞ்சிறும். பன்னிரண்டாயிரம் கைக்குக் கிடைக்கும். ஒரு டைம் டெபாசிட் அக்கவுன்ட் வேற கட்டிவர்றேனில்லை? அது இன்னும் மூணே மாசத்துல முடிஞ்சிறும். அதுல ஒரு பத்தாயிரத்துக்கு மேல கிடைக்கும். உங்க ஆபீசுல ஒரு பத்தாயிரம் நிச்சயமா உனக்குக் கிடைக்கும். எல்லாத்தையும் போட்டு ஒரு ரூம் கட்டிக்கயேன்..."

"அதான் தேவையில்லைன்னுட்டேனில்லப்பா? இத்தோட அந்தப் பேச்சை விட்டுடுங்க. நான் ஒரு மடையன்..."

சுந்தரேசன் அதிர்ந்து போனார். 'எப்படியும் அந்த வீடு இவனுக்குத்தான் கடைசியில் வரப் போகுது. என்னோட சொந்த சம்பாத்தியம்தான். ஆனாலும் ஒரே மகனுக்குத் தராம நான் அத்த வேற யாருக்குக் கொடுத்துறப் போறேன்? கையிலே ஒரு அவசரப் போக்குன்னா நாலு காசு வச்சுக்கிட்டு இருக்கணும்கிறதுக்காகத்தானே சொல்றேன்? புரியாத பயலா இருக்குறானே?'

"ஆமாண்டா. பேசுவே. பேச மாட்டே? நாங்கதாண்டா முட்டாளுங்க. நீ ஒண்ணும் முட்டாளில்லே. அதான் உன்னைப் புத்திசாலியாக்குறதுக்கு ஒருத்தி வந்திருக்காளே?" என்று தன்

கட்டுப்பாட்டை மீறி மங்களத்தம்மாள் கத்த, அங்கே உடனே ஓர் இறுக்கம் விளைந்தது.

மாமியாரின் முதல் கடுமையான பேச்சு அது என்பதால் கவிதாவுக்குக்கூட வாயடைத்துப் போய்விட்டது.

சமாளித்துக் கொண்டு, "பாத்தீங்களா உங்கம்மா பேசற பேச்சை?" என்று கண்ணைக் கசக்கிய மனைவியை, "சரி, சரி. விட்டுத்தள்ளு. சமய சந்தர்ப்பம்னு வரும்போதுதானே பெரியவங்க நிஜமாவே பெரியவங்களா இல்லியாங்கிற உண்மை வெளியாகும்?" என்று கூறி அவன் சமாதானப் படுத்தினான்.

எகத்தாளமாக வெளிப்பட்ட அந்தச் சொற்கள் சுந்தரேசனுக்கு மகன் தம்மைப் பொட்டில் அடித்துவிட்டது போன்ற வலியை உண்டாக்கின. கடுமையாக ஏதோ சொல்ல வாய் திறந்த மனைவியை ஓரத்து விழிகளால் அவளை எதுவும் பேச வேண்டாமென்று அவர் உணர்த்திவிட்டு எழுந்து கொண்டார். அவர் கண்கள் கலங்கி இருந்தன.

அன்றிரவு மருமகளும் மகனும் தங்கள் பார்வையிலிருந்து மறைந்த பிறகு, மங்களத்தம்மாள் கணவரிடம் அழுதுகொண்டே நிறையப் பேசினாள். அன்று மாலை அவர் வெளியே போயிருந்தபோது மகனும் மருமகளும் தங்களுக்குள் பேசிக்கொண்டது தன் காதுகளில் விழுந்தது பற்றி அவள் அவரிடம் சொன்ன செய்திகள் அவருள் அளவுகடந்த ஆத்திரத்தை உண்டாக்கின. மாடியில் ஓர் அறையைத் தன் அப்பாவிடமிருந்து பணம் பெற்று அவன் கட்ட யோசனை சொன்னதே அவள்தானாம். தான் கிணற்றடியில் இருப்பதாக எண்ணி அவர்கள் கவனக்குறைவுடன் பேசியதை அவரிடம் முன்கூட்டிச் சொல்லி வைக்க வாய்ப்புக் கிடைக்கவில்லை என்றும், ஆனா



## Dr. அம்பேத்க(ா)ர்

★ பல்லவன் போக்குவரத்துக் கழகம் இரண்டாகப் பிரிக்கப்பட்டு வட சென்னை டெப்போக்களில் டாக்டர் அம்பேத்கர் போக்கு வரத்துக் கழகம் உருவானது.

"தமிழ் உயிர், தமிழ் மூச்சு என்று பேசும் தமிழக அரசு டாக்டர் அம்பேத்கரை டாக்டர் அம்பேத்காராக்கி பேருந்துகளில் பெயர் பொறித்துள்ளது என்ன நியாயம்? என்பது சென்னை மக்களின் அன்றாடக் கேள்விகளுள் ஒன்று.

இதில் டாக்டர் என்பதை தமிழில் குறிப்பிடாமல் 'Dr' என்று ஆங்கிலத்தில் குறிப்பிட்டுள்ளதும் இன்னொரு குற்றச்சாட்டு! •

### விடுதலைக்குப் பின் ஆளுநர்கள்:

லெப்.ஜெ. ஆர்கிபால்ட் – எட்வர்ட்நை 1946
கிருஷ்ண குமார சிங்ஜி 1948
பிரகாசம் 1952
ஏ.ஜே. ஜான் 1956
நீதிபதி ராஜமன்னார் 1957
விஷ்ணுராம் மேதி 1958
ஜெயசாம்ராஜ உடையார் 1964
நீதிபதி பி. சந்திர ரெட்டி 1964
உஜ்ஜல் சிங் 1966
கே.கே.ஷா 1971
மோகன்லால் சுகாதியா 1976
நீதிபதி கோவிந்தன் நாயர் 1977
பிரபுதாஸ் பட்வாரி 1977
நீதிபதி எம்.எம். இஸ்மாயில் 1980
சாதிக் அலி 1980
எஸ்.எல். குரானா 1982
டாக்டர் பி.சி. அலெக்சாண்டர் 1988
சுர்ஜித் சிங் பர்னாலா 1990
பீஷ்ம நாராயண் சிங் 1990
சென்னா ரெட்டி 1993

ஓ

னும் தன் கண்சாடையைப் புரிந்து கொண்டு அவர் உடனே மக னுக்குச் சரி என்று சொல்லிவிடா திருந்தது பற்றித் தான் மகிழ்வ தாகவும் அந்தக் கண்ணீர் இடையேயும் மங்களத்தம்மாள் புன்னகை செய்தாள்.

"மங்களம் அதுக்கு அவன் என்ன சொன்னான்?"

"அவ சொன்னது கூடப் பெரி சில்லைங்க. அது ஊரார் வீட்டுப் பொண்ணு. அதுங்கிட்ட நாம எதுவுமே எதிர்பார்க்க முடியாது. ஆனா நம்ப மகன் – நம்ப ரத்தம் – என்ன சொல்லிச்சு, தெரியுமா? எங்கப்பா தாராளந்தான். ஆனா அம்மா • முட்டுக்கட்டை போடும், அப்படின்னிச்சு. அது மட்டுமா? நாம தனிக்குடித்தனம் போனா என்னன்னு வேற கேட்டான் உங்க மகன். அதுக்கு அந்தப் பொண்ணு என்ன சொல்லிச்சு தெரியுமா? எனக்கும் தனியா இருக்கத்தான் பிடிக்கும். ஆனா தனிக்குடித்தனம் போயிட்டா வீட்டு வேலைங்க அத்தனையும் செய்யணுமே, அது எனக்கு முடியாதே அப்படின் னிச்சு, அதுக்கு அவன் சிரிச்சுட்டு, 'நீ கில்லாடியாச்சே' அப்படின் னான்."

"அப்படிக்கூடப் பேசிட்டாங் களா? அப்படின்னா, தனியாப் போனா உன்னையும் என்னையும் போல வேலைக்காரங்க கிடைக்க மாட்டாங்கங்கிறதனாலதான் இப்ப நம்மகூட இருந்துட்டிருக்காங் களாமா? அடி, செருப்பால. இதுங்களுக்கு ஒரு வழி பண் றேன்..."

"என்னங்க செய்யப் போறீங்க?"

"ஓர் அதிர்ச்சி வைத்தியம். அதுக்காக நமக்குப் பிள்ளை மேல பிரியம் கிடையாதுன்னு இல்லே. ஆனா, நம்மால அவங்களுக்கு என் னென்ன விதத்துல லாபம்கிறதை அவங்களுக்குப் புரிய வைக் கணும்".

"எப்படிப் புரிய வைப்பீங்க?"

"சொல்றேன். இந்தச் சின்ன வீடு பத்தலைன்னுதானே இதப் பெரிசாக் கட்டணும்னாங்க? கட்டிறலாம். ஆனா, அதுக்கு முன்னாடி, இன்னொரு வாடகை வீட்டப் பிடிச்சு அதுல அவங்க ரெண்டு பேத்தையும் அமர்த் திடணும். நாம ரெண்டு பேரும் மட்டும் இந்த வீட்டில தங்கிக்கிட்டு மாடியிலே ரூமைக் கட்டணும். ஏன்னா, உன் மருமகளுக்குத்தான் தூசி தும்புன்னா ஆகாதே? தனக்கு தூசின்னா அலர்ஜின்னு சொல்லிக் கிட்டு ஒட்டடைகூட அடிக்க வராதே? ஒரு நாளாச்சும் தரையைக் கூட்டிப் பெருக்கி இருக்குதா அது? அதனாலே மாடியில் ரூம் கட்டும்போது வீட்டுல தூசு தும்பு நிறைய விழும்னு சொல்லி ஒரு ரெண்டு மாசத்துக்கு எங்கயாச்சும் போய் இருங்கன்னு சொல்லி அனுப்பிற லாம்".

"அப்புறம்?"

"மாடி ரூமைக் கட்டிட்டு, மொத்த வீட்டுக்குமா ஒரு ஆளைக் குடி வச்சுட்டு நாம இன்னொரு சின்ன போர்ஷனாப் பாத்துக் குடி போயிறலாம்".

"அதுல என்னங்க இருக்குது?"

"அதுலதான் விஷயமே இருக் குது. அவங்களும் வாடகை குடுத்துப் பார்க்கட்டும். இங்க வாடகை இல்லாமதானே சுகமா இருக்குறாங்க? வீட்டு வேலை களையும் ரெண்டு பேரும் செய் யட்டும். அதுக்குப் பிறகு அவங்க சுபாவத்துல மாறுதல் வந்திச் சுன்னா, குடி வச்சவங்களைக் காலி பண்ணச் சொல்லிட்டுப் பழையபடி அவங்க ரெண்டு பேரையும் கூட்டிக்கிறலாம். சில பேருக்குப் பட்டாத்தான் தெரியும்..."

"பட்டும் தெரியாதவங்களா இருந்து, மறுபடியும் முருங்கை மரம் ஏறிக் குந்தினாங்கன்னா...?"

"முருங்கை மரம் ஏறிக் குந்துற துக்கு அவங்களுக்கு மட்டுந்தான் தெரியுமா என்ன?" என்று கேட்டு அவர் சிரித்த சிரிப்பில் அவளும் கலந்து கொள்ள, அவர்களது சிரிப்பொலி மூடிய கதவுக்கு அப் பால் மகனையும் மருமகளையும் சென்றடைந்ததில், இருவரும் ஒன் றும் விளங்காமல் விழித்தார்கள்.

"சாயந்தரம் கண் கலங்கின வங்க இப்ப சிரிக்கிறாங்களேன்னு ஒண்ணும் புரியாம ரெண்டு பேரும் முழிக்கப் போறாங்க' என்று மங்களத்தம்மாள் சிரிக்க, "தனிக்குடித்தனம் வெச்சுட்டு, சின்ன வீட்டைப் பெரிய வீடாக்கி வாடகைக்கு விட்டுட்டு நாமும் கிளம்பிட்டதும் இன்னும் பெரி சாவே ரெண்டு பேரும் முழிப் பாங்க" என்று கூறி அவரும் சிரித்தார்.

ஓ

# நவரத்னா காலனி

நவரத்னா அபார்ட்மென்ட்ஸ் களைகட்டத் தொடங்கிற்று. அன்று மாலை ஜெனரல் பாடி மீட்டிங்.

பெஸன்ட் நகரில் கடற்கரை யோரமாய் ஒன்பது கட்டடங்கள். சுற்றிச் சுற்றுச் சுவர். ஒரு கட்டடத் திற்கு ஆறு ப்ளாட்டுகளாய் ஐம் பத்து நான்கு பிளாட்டுகள்.

"... நம்மக் காலனியிலே என்ன விசேஷம்னா, கட்டடம் ஒன்பது. பிளாட்டுகள் ஐம்பத்தினாலு. ஐந்தையும் நாலையும் கூட்டினா ஒன்பது. காலனிக்குப் பேரும் நவ ரத்னா அபார்ட்மென்ட்ஸ்... எவ்வளவு பொருத்தம் பாத் தேளா?... ரொம்ப விசேஷம்... நாமெல்லோரும் அமோகமா இருக்கப் போறோம்..."

'வைடூர்யம்' பிளாக்கில் முதல் மாடியின் சொந்தக்காரர் ஆத்ம நாதனின் தந்தை சிவராம சாஸ்திரிகள் கூறினார். (இந்த ஆத்மநாதன், ஆஸ்த்மா நாதன் என்றும் சிவராம சாஸ்திரிகள் 'சவ' ராமசாஸ்திரிகள் என்றும் பின் னாளில் அழைக்கப்பட்டது வேறு விஷயம். அதற்குப் பிறகு வரலாம்.)

"நம்மக் காலனிலே ஒவ்வொரு பிளாக்குக்கும் ஒரு ரத்தினத் தினுடைய பெயரை வைச்சிருக்கே அது இன்னமும் சிலாக்கியம். வைரம்னு ஒண்ணு. முத்துன்னு இன்னொண்ணு... மரகதம்னு அடுத்தது... எல்லாமே ரொம்ப அருமையா அமைஞ்சு போயி டுத்து. நாமல்லாம் நவரத்தினங் களாய் ஜொலிக்கப் போறோம்..." (நவக்கிரகங்களாய் வக்கரித்தது பிற்கால நிகழ்ச்சி)

மாணிக்கம் பிளாக்கின் கோமளா உற்சாகமாய்க் கூறி னாள். (இவள் பின்னாளில் 'கோமாளி' என்று அழைக்கப்படப் போகிறாள்).

அவரவர் உற்சாகமாய்ப் பேசிக் கொண்டும் ஒருவரை யொருவர் புகழ்ந்துகொண்டும் பாராட்டிக் கொண்டும் வாழ்க் கையை அந்தக் காலனியில் ஆரம் பித்தார்கள். ஒரு பிளாக்கில் ஒருவருக்கு ஒரு நல்லது என்றால் மற்றவர்கள் ஓடிவந்து பாராட்டு வதும், யாருக்காவது பிரச்னை என்று வந்துவிட்டால் மற்றவர்கள் தமக்கே வந்துவிட்டது மாதிரி துக்கம் பாராட்டுவதுமாய்க் காலம் உற்சாகமாகத்தான் தொடங் கிற்று.

இதெல்லாம் ஐந்து வருடங் களுக்கு முன்னால், காலனி கட்டி முடிக்கப்பெற்று, ஒவ்வொரு வராய்க் குடிபுகுந்த காலம்.

"நம் காலனியை அழகு படுத்தவேண்டும்... பூவும் செடியு மாய்ப் பூத்துக் குலுங்கவேண்டும்... அதுக்குத்தான் இந்தப் பவள மல்லிகைச் செடியை வச்சிருக் கேன். பூத்துச் சொரியும்... வாசனை ஆளை மயக்கும்..." என்று வாஞ்சையுடன் தான் நட்டுவைத்த செடியைப் பார்த்துக் கொண்டேக் கூறினார் விநாயகம் பிள்ளை (விநாசம் பிள்ளை பிற்காலப் பட்டப்பெயர்).

மற்றவர்கள் பரம ஒப்புதலுடன் தலையசைத்தார்கள்.

"... அரளிப் பூவுக்கேச் செந் தூரப் பட்டைன்னு பேரு. பூஜைக்கு விசேஷம்..." என்று அரளிச் செடியை ஊன்றினார் மற்றவர்.

மல்லிகைக் கொடியை ஊன்றி னார் இன்னொருத்தர்.

"காம்பவுண்டைச் சுற்றித் தென்னைமரத்தை வச்சம்னா, நெழலுக்கு நெழலும் ஆச்சு... காய் காய்ச்சுதுன்னா நம்ம எல்லா ருக்குமேச் சமையலுக்கு ஆகும்..." என்று கூறிக் கொண்டே தென்னங் கன்றுகளை நட்டார் ராஜகோபால சர்மா.

அவருக்குப் பூர்விகம் திருச்சூர் சமீபம். தென்னை மரங்களின் அருமை தெரிந்தவர்.

"... மட்டைலேர்ந்து சரட்டை வரைக்கும் எல்லாமே உபயோக மாக்கும்... அதாலதானாக்கும் அதுக்குக் கற்பகவிருட்சம்னு பேர் வச்சான்... நான் சொல்றது புரிய றதோ ஒங்களுக்கு...?"

ராஜகோபால சர்மா கூறியதும் அனைவரும் மகிழ்ச்சியுடன் ஆமோ தித்தனர். அப்போதே தங்கள் வீட்டுச் சமையலுக்குத் தேங்காய் கிடைத்துவிட்ட சந்தோஷம் தெரிந் தது.

பூச்செடிகள் பூக்கிற வரை பிரச்னை ஏற்படவில்லை.

காய்க்கிற மரங்கள் காய்க்கும் வரை எந்தப் பிரச்னையும் இல்லை.

முதல் பிரச்னை செம்பருத்திச் செடியில் துவங்கிற்று.

'மரகதம்' பிளாக் அருகே இருந்த செடிதான் முதலில் பூக்கத் தொடங்கிற்று. 'முத்து' பிளாக்கிலிருந்த சுகவதனம் தன் வீட்டுப் பூஜைக்காக முதலில் எழுந்து பூக்களைப் பறித்தார். அவர் பொதுவாகக் காலையில் சீக்கிரம் எழுந்துவிடுவார். வேலை யிலிருந்து ஓய்வு பெற்றவராதலால் பகலில் ஒரு தூக்கம் போட்டு விடுவார். அதனால் காலையில் பறவைகளுக்கு முன்னால் தான் எழுந்துகொண்டு ஏதாவது 'கட முடா'வென்று காரியங்கள் செய் வார். அவரால் தனது தூக்கம் கெடுகிறது என்று அடுத்த பிளாட் அரங்கநாயகம் (பின்னாளில் சிரங்கு நாயகம் என்று அழைக் கப்பட்டார். அவருக்கு 'எக்ஸிமா' தொந்தரவு உண்டு) அவர்மீது போர் தொடுத்தது வேறு விஷயம்.

மரகதம் பிளாக் அமிர்தவல்லி தன் பிளாக்கினருகே இருந்த செடி யில் பூக்களே இல்லாதது கண்டு

ஜெயரதன்

ஏமாற்றமடைந்தாள். அந்தச் செடி அவள் கணவர் ஊன்றியது.

"ஒரு பூ இல்லாமெ யாரு இப்படிப் பரிச்சாக?... இன்னைக்கு வெள்ளிக்கிழமை. அம்மனுக்குப் பூ வைக்கலான்னா ஓர் எளவையும் காணும்..."

வெள்ளிக்கிழமை அதிகாலையில் மங்களகரமாய் முதல் அஸ்திரத்தைப் பிரயோகம் செய்தாள்.

"காலங்கார்த்தாலே யாரு எளவு அது இது இன்றது?... நான்தான் பறிச்சேன்" என்றார் சுகவதனம்.

"எல்லாப் பூவையும் நீங்களே பறிச்சுக்கிட்டா, மத்தவுங்க எங்கே போறது... என்ன எளவை..." பாதியில் நிறுத்திக் கொண்டாள். 'எழவு' என்ற பதப்பிரயோகம், இல்லாமல் அமிர்தவல்லியால் பேச முடியாது. அதற்குள் சமையலறையில் பால் பொங்குவதாக அறிவிப்பு வந்ததும் "காலங்காத்தாலே, எளவு, பால் பொங்கிருச்சு" என்று கறுவிக் கொண்டே உள்ளே ஓடினாள்.

மறுநாள் காலை சுகவதனத்திற்கு ஏமாற்றம்தான் மிஞ்சியது. அதிகாலை எழுந்து பூப்பறிக்கப் போனவர், செடியில் ஒரு பூக்கூட இல்லாதது கண்டு திடுக்கிட்டார். அவருக்கு முன், அலாரம் வைத்து நாலரை மணிக்கே எழுந்த அமிர்தவல்லி ஒரு மொட்டுக்கூட இல்லாமல் செடியை 'மொட்டை அடித்து விட்டாள்' (சுகவதனம் பாஷையில்).

"செடியிலே ஒரு பூவைக் காணுமே... எந்தக் கொரங்கோ எல்லாத்தையும் பறிச்சுக் கிளை இலை எல்லாத்தையும் கிள்ளிப் போட்டிருக்கு".

"ஏன், தெனம் பிசாசுதான் பறிக்கணும்னு எந்த எளவு சட்டத்திலே எழுதி வைச்சிருக்கு?..."

அமிர்தவல்லி கூச்சலிட, சுகவதனம் பதிலுக்குக் கத்த, காலையில் மற்றவர்கள் காபி சாப்பிடுவதைக்கூட மறந்து வேடிக்கைப் பார்க்கலானார்கள். சிறிது நேரம் இருவரும் ஒருவரையொருவர் சாடிக் கொண்டதும், பிரசிடெண்ட் சங்கரன் டானியேல் தலையிட்டுச் சமாதானமாயிற்று.

நவரத்னா அபார்ட்மென்ட்ஸில் முதல் யுத்தம் இப்படித்தான் தொடங்கிற்று, அதனையடுத்து மல்லிகைப் பூவை யார் பறிப்பது என்பதில் 'வைரம்' பிளாக்காரர்களுக்கும் 'கோமேதகம்' பிளாக் குடித்தனக்காரர்களுக்கும் தகராறு ஏற்பட்டது.

"நான் ஒரு துளசிச்செடி வச்சிருந்தேன். அதை யாரோ பிடுங்கிண்டு போயிட்டா..."

"... சார் உங்க பையனைக் கொஞ்சம் கண்டிக்கணும். ஜன்னல் வழியே வாழைப்பழத் தோலை வீசி எறியறான். நேத்திக்கு நான் வழுக்கிக் கீழே விழ வேண்டியது... மயிரிழையிலேத் தப்பிச்சேன்". (விழுந்திருந்தா நன்னாயிருந்திருக்கும்)

"சார் நீங்க ஸ்கூட்டரை ஸ்டார்ட் பண்றபோது சத்தம் ஜாஸ்தியா வரது.. எனக்குத் தலைவலியே வந்துடும் போலிருக்கு.. எனக்கு சவுண்ட் அலர்ஜி..."

"சத்தமில்லாமெ ஸ்டார்ட் ஆற ஸ்கூட்டரை அமெரிக்காவுலே கண்டு பிடிச்சிண்டிருக்காளாம். அடுத்த வருஷம் மார்க்கெட்டுக்கு வந்துடுமாம். வந்தவொடனே இம்போர்ட் லைசென்ஸுக்கு அப்ளை பண்ணி வரவழைச்சுடுவோம்..." என்று பதில் கூறியவரைச் சுட்டெறிக்கிற மாதிரிப் பார்த்தார் முன்னவர்.

இரண்டு நாள்கள் கழித்து, அதிகாலையில் ஸ்கூட்டரை எடுக்க அதனருகில் சென்றவர் துடித்துப் போனார். ஆசனமெல்லாம் பிளேடால் கிழிக்கப்பட்டு உள்ளே இருந்த 'ஸ்பாஞ்ஜ்' வெளியே சிதறிக் கிடந்தது.

கோபம் தலைக்கேற ஆவேசம் வந்தது மாதிரிக் குதிக்கத் தொடங்கினார்.

"... எந்தப் பொறுக்கி ராஸ்க்லோ என் ஸ்கூட்டரைக் கிழிச்சிருக்கான் .. யார்ரா அந்தப் பொட்டைப் பய?... தைரியமிருந்தா வெளியே வாடா ... ஒன் வாயைக் கிழிக்கறேன்... வயத்தை அறுத்துக் கொடலை உருவிடறேன்..."

நரசிம்மாவதாரம் மீண்டும் எடுக்கப்பட்டாற்போல் உறுமினார். அவரவர் தத்தம் வீட்டுப் பால்கனி வழியாக வாயில் டூத்பேஸ்டுடன் எட்டிப் பார்த்தார்கள். வழக்கமாய்க் காலனியில் ஒரு மூச்சுக் கேட்டாலே எட்டிப் பார்க்கும் சிவராமனை மட்டும் காணவில்லை.

"... எனக்குத் தெரியும், யார் பண்ணியிருப்பாங்கன்னு... இதுக்குப் பழிக்குப்பழி வாங்காமெ விடறதில்லை..." என்று சிவராமன் பிளாட்டை நோக்கிச் சவால் விட்டுக் கொண்டே உள்ளே போனார் ஸ்கூட்டர்காரர்.

இரண்டு மூன்று நாள்களானதும் சிவராமன் வீட்டு ஜன்னல் கண்ணாடி நொறுங்கிக் கிடந்ததும் அவர் வாயில் வராத வார்த்தைகளால் சாடியதும், பழிவாங்குவதாய்ச் சூளுரைத்ததும் 'யுத்த காண்டம்' என்ற தலைப்பில் ஒரு காப்பியமாய் எழுத்தில் வடிக்கவேண்டிய சம்பவங்கள்!

இதன் விளைவாய் ஸ்கூட்டர், கார் முதலியன வைத்திருப்பவர்கள், அவை இல்லாதவர்கள் என்று காலனியில் இரண்டு கோஷ்டிகளாய் உருவாயின. இரண்டு கோஷ்டியினரும் தமக்குள் கூடிக் கூடிப் பேசிக் கொள்வதும், மற்ற கோஷ்டியைச் சேர்ந்தவரைக் கண்டால் ஒரு விரோத பாவத்துடன் பார்ப்பதும் வழக்கமாயிற்று.

"வெளியே இருக்கிற இடம் பொது இடம். அதுலே எல்லாருக்கும் சம உரிமை உண்டு. அங்கே ஸ்கூட்டரையும் காரையும் நிறுத்தினா, அதுக்கு மத்தவங்களுக்கு வாடகை கொடுக்கணும்..."

ஒருநாள் ஸ்கூட்டர் இல்லாதவர் கோஷ்டியைச் சேர்ந்த முத்துக் கருப்பன் திருவாய் மலர்ந்து அபிப்ராயம் அருளினார். முத்துக் கருப்பனிடம் ஒரு விசேஷம் என்னவென்றால் அவர் வாயைத்திறந்து எதாவது கூறினாலே விவகாரம் வருகிறாற்போலத்தான் கூறுவார். அன்றொரு நாள், "நைட் வாட்ச் மேனும் மனுஷன்தானே சார்!... ராத்திரி முழுக்க எப்படி முழுச்சுக்கிட்டே இருப்பான்? அவனுக்கு ரெஸ்ட் எடுக்க ஒரு ரூம் கட்டித்தரணும் சார்..." என்று கூற, 'அது சரி ... நைட் வாட்ச் மேன் தூங்க ஒரு கட்டில். கால் புடிச்சுவிட பொண்டாட்டி... எல்

லாத்துக்குமே ஏற்பாடு பண்ண லாம்" என்று மற்றவர் சிரிக்காமல் கூறியதும், சிரிப்பது அடங்க வெகு நேரமாயிற்று.

இதனாலெல்லாம், முத்துக் கருப்பனுக்குக் காலனியில் உள்ள மற்றவர்கள் மீதெல்லாம் ஒரு விரோதம் உண்டாயிறது. 'தன்னைத் தவிர மற்ற யாருக்குமே மனிதாபிமானம் அல்லது நேர்மை உணர்வு இல்லை' என்கிற மாதிரியாய் ஒரு மனப்பான்மை உருவாயிற்று. தனியாய், ஒரு தீவாய் இயங்கலானார் முத்துக் கருப்பன்.

தென்னை மரங்கள் காய்க்கத் தொடங்கியதும்தான் பிரச்னை உச்சக்கட்டத்திற்குப் போய், ஜெனரல் பாடி மீட்டிங்வரை போயிற்று.

"நானும் பாத்துண்டே இருக்கேன். ஒவ்வொரு தடவையும் எனக்குச் சின்னத் தேங்காய்களையே கொடுக்கறா... நான் என்ன இளிச்ச வாயனா?..."

"அந்தக் கீழண்டை மரத்துக் காய்லே ருசி ஜாஸ்தி. அது எனக்கு வரதே இல்லை. எனக்கு வரதெல்லாம் உப்புக் கரிக்கற எளநீர் தான்..."

"போன தடவை 'மரகதம்' ப்ளாக்குலே இருக்கறவங்களுக்குத் தலா எட்டுக்காய் கொடுத்தாங்க. எங்க ப்ளாக்குலே தலா ஏழு தான்... இப்பவும் அவங்களுக்கு ஆறு... எங்களுக்கு அஞ்சா?... என்ன சார் நியாயம்?... இல்லே தெரியாமத்தான் கேக்கறேன்..."

"என் கொழந்தை செவ்விளநீர் வேணும்னு ஆசையாக் கேட்டான். அதைக் குடுக்க மாட்டேங்கறாங்க... அப்புறம் என்னத்துக்குத் தென்னை மரம்ங்கேன்?... எல்லாத்தையும் வெட்டிச் சாச்சிருவம்..."

"... தென்னை மட்டை வீட்டுக் குள்ளாற வந்து ஒணானும் அணிலும் என் வீட்டுக்குள்ளாற வந்துருதுங்க.. மரத்தை வெட்டிரணுங்க... தேங்கா வேணும்னா கடையிலே வாங்கிக்கலாம்... இது பெரிய பேஜாரு..."



"... நீங்க வச்ச வேப்பமரம் மட்டும் வேணுமோ?... வேர் வந்து காம்பவுண்டுச் சுவர்லேயே 'க்ராக்' விழுந்துடுத்து... அதை வெட்டுங்கோ மொதல்லே. அப்பறம் தென்னை மரத்தை வெட்டலாம்..."

ராஜகோபால சர்மாவின் குரலில் குரோதம் தெரிந்தது. தென்னை மரங்களை வைத்து வளர்த்தவர் அவர்.

"செம்பருத்திச் செடியை வெட்டி எறிங்க மொதல்லே..." என்றாள் அமிர்தவல்லி. தினசரி அதிகாலையில் எழுந்திருக்க முடியவில்லை அவளால்.

"அரளிச்செடியை ஒழிக்கணும். பாம்பரணையா நெளியறது..."

பிரச்னைகள் முற்றுவதையும், சிறுசிறு விஷயங்கள் வேண்டுமென்றே பெரிதாக்கப்படுவதையும் கண்ட பிரசிடென்ட் சங்கரன் டானியேலுக்குக் கவலை ஏற்பட்டது. அன்றாடம் பொழுது விடிந்தால் தகராறுகளும் மத்தியஸ்தங்களுமாய்ப் பொழுது விவகாரத்திலேயே கழிந்தது.

பிரச்னைகளுக்குத் தீர்வு காண 'ஜெனரல் பாடி மீட்டிங்'கைக் கூட்டினார்.

ஜெனரல் பாடி மீட்டிங்கில் நல்ல கூட்டம். அநேகமாக ஐம்பத்து நான்கு பேர்களுமே வந்திருந்தார்கள். நாகேஸ்வரனைத் தவிர. நாகேஸ்வரன் வந்திருந்தால், நாடு உருப்பட நல்ல யோசனைகளை வழங்கியிருக்கக் கூடும்.

மீட்டிங் துவங்கிற்று.

முத்துக் கருப்பன் விவாதத்தை அல்ல, வழக்கம்போல் விவகாரத்தைத் - தொடங்கினார்.

"... காலனி வாட்ச்மேனுக்குக் குளிர்காலத்துக்குன்னு ஸ்வெட்டர் வாங்கிக் குடுக்கணும். அவனுக்கு மட்டும் குளுராதா?..."

"சும்மா இருய்யா... அவனவன் இடுப்புலே துணியைக் காணுமாம். தனுஷ்கோடிலே வேட்டி தானம் பண்ணினாம். இருக்குற பிரச்னைக்கே வழியைக் காணுமாம். இவரு வாட்ச்மேனுக்கு ஸ்வெட்டர் வாங்க வந்துட்டாரு..."

"வேணும்னா, நீ வாங்கிக்குடு..."

"என்னை வாங்கிக் குடுன்னு சொல்ல நீ யாருய்யா?"

"ஒங்க பாட்டன்..."

"சும்மா இருய்யா..." 'ஒக்காருய்யா' "ஷட் அப் அண்ட் சிட் டவுன்" விதவிதமாய் எதிர்ப்புக் குரல்கள் கிளம்பவும் சர்வ எரிச்சலுடன் தனது நாற்காலியில் பட்டும் படாமலும் உட்கார்ந்தார் முத்துக் கருப்பன். மூல உபத்திரவம் வந்தவர் மாதிரி முகத்தில் சங்கடம் தெரிந்தது.

அமிர்தவல்லி எழுந்தாள்.

"செம்பருத்திச் செடியை வெட்டணும் மொதல்லே. யாருக்கும் உபயோகமில்லை.

"அதுக்கு முன்னாலே வேப்ப மரத்தை வெட்டணும்..."

"ஏன் ஒங்களை வெட்டினா?..."

"யார்ராவன் என்னை வெட்றவன்?... வாடா பாக்கலாம் யார் யாரை வெட்றாங்கன்னு..."

பெருங்குரலில் ஒருவரையொருவர் சாடிக் கொண்டனர். வம்சத்தின் மூத்த முதல்வர்களை சொர்க்கத்திலிருந்தும் நரகத்திலிருந்தும் சண்டைக்கு இழுத்தனர். சங்கரன் டானியேல் தலையிட்டுச் சமாதானப்படுத்த முயன்றார். இதற்குள் யார் காலையோ யாரோ மிதித்துவிட, மிதிபட்டவர் கெட்ட வார்த்தையால் திட்டினார்.

"இப்பக் கூட்டம் நடக்கணுமா இல்லே கேன்ஸல் செஞ்சுரவா?" என்று சங்கரன் டானியேல் குரலை உயர்த்தவும் சற்றுச் சமாதானம் தெரிந்தது.

சிறிது நேரம் அமைதியாய் இருந்தார்கள். சென்ற வருடத்திய கணக்குகள் ஏற்கப்பட்டன. சென்ற கூட்டத்தின் நடப்பு விவரங்கள் ஏற்கப்பட்டன.

"இப்ப தென்னை மரங்களைப் பத்திப் பேசுவோம்". என்று சங்கரன் டானியேல் கூறியதும் மீண்டும் சப்தம் கிளம்பிற்று.

"சிலருக்கு நல்ல தேங்காய் எப்பவுமே கெடைக்குது".

"எங்களுக்குச் சின்னதுதான் எப்பவுமே".

"மட்டை வீட்டுக்குள்ளே வந்து பேஜார் பண்ணுது".

"விழுற மட்டையெல்லாம் ஒருத்தரே எடுத்து வெறகு கடைக்காரன்கிட்ட வெலைக்குப் போடறாரு.."

"மரத்தையெல்லாம் வெட்டறது தான் ஒரே வழி..."

விதவிதமாய்க் கருத்துத் தெரிவித்தார்கள். விவாதத்தில் சூடு பறந்தது. தனிப்பட்ட முறையில் ஒருவரையொருவர் சாடிக் கொண்டார்கள். சில அந்தரங்கங்கள் அலசப்பட்டன.

இறுதியில் அனைத்துச் செடி கொடிகளையும் வெட்டி விடுவதென்றும், பிளாட்டுகளுக்கு அருகாமையில் மட்டை வீசும் மரங்கள் ஒன்றிரண்டை வெட்டி விடுவதென்றும் மிகுதி மரங்களைக் குத்தகைக்கு விடுவதாகவும், குத்தகைப் பணத்தை 'வெல்ஃபேர் அசோசியேஷன்' எடுத்துக் கொள்வது என்றும் தீர்மானிக்கப்பட்டது.

பிறகு கூட்டம் கலைந்து போயிற்று.

☆

பூச்செடிகளை வெட்டி இருந்தார்கள்.

வீட்டோரம் இருந்த தென்னைகள் சில காணாமல் போயிருந்தன.

மற்ற தென்னை மரங்களின் காய்களைக் குத்தகைக்காரர் பறித்துப் போகிறார். மட்டைகளையும் அவரே வெட்டியெடுத்துப் போகிறார்.

விளையாடும் இடம் அதிகமாகி விட்டதனால் எந்தக் குழந்தையும் விளையாடி விடவில்லை. எப்போதும் போல் 'ஸ்டார் டிவி' பார்த்துக் கொண்டிருக்கின்றன.

வீடு வீடாய்ப் பூக்காரர்கள் வியாபாரம் செய்து கொண்டிருக்கின்றனர். வியாபாரம் நன்றாக நடக்கிறது.

ஐந்து ரூபாய் ஆறு ரூபாய்க்குத் தேங்காய் காசு கொடுத்து வாங்கிக் கொள்கின்றனர்.

இப்போதெல்லாம் காலனியில் சத்தமே இல்லை. அடைசலும் இல்லை. எல்லாம் மனங்களுக்குள் வந்துவிட்டன.

# அது அப்படித்தான்

சுபா

அடித்த மழையிலும், வீசிய காற்றிலும் ஆபீஸாவது இன்னொன்றாவது? இரண்டு மணிக்கே எல்லாரையும் மூட்டை கட்டிக்கொள்ளச் சொல்லிவிட்டார்கள். ஆபீஸில் ஒரு பெண் பிள்ளை வேறு. புதிதாய்க் கல்யாணம் ஆனது. கணவன் இன்னோர் அலுவலகத்தில் வேலை செய்து கொண்டிருந்தான். அந்த ஆபீஸிற்கு ஃபோன் செய்து ஃபோன் செய்து மாய்ந்து போனது. தொடர்பு கிடைக்கவில்லை. தொலைபேசிக் கம்பியை எல்லாம் காற்று ஆப்பசைத்துக் கொண்டிருப்பதாகப் பியூன் வேறு வெளியில் எட்டி எட்டிப் பார்த்துச் சொல்லி அவள் வயிற்றில் புளியையும், அமிலத்தையும் ஒரு சேரக் கரைத்துக் கொண்டிருந்தான். அந்தப் பெண் அலுவலகத்தின் மூடியக் கண்ணாடிக் கதவண்டை நின்று கொண்டு வெளியேப் பார்த்தது. எதிரில் இருந்த முருங்கை மரம் ஒன்று அவள் கண்ணெதிரிலேயேச் சடசடவென்று சாய்ந்தது. எதிர்ச் சாரியில் இருந்த ஒரு டுடோரியல் காலேஜ் போர்டு கழற்றிக் கொண்டு சுழன்று, சுழன்று பறந்து போயிற்று. யார் மண்டையைத் தாக்குமோ என்னமோ!

இந்தப் பெண் வேறு ஐந்து மாதம். அது வெளியே பார்த்த பார்வையிலேயே பயம் தெரிந்தது. ஊரில் இருக்கிற பெண் தெய்வங்களை எல்லாம் உதவிக்கு அழைத்த மனதும் தெரிந்தது. ஏதோ ஒரு தெய்வம் அவள் புலம்பலைக் கேட்டிருக்க வேண்டும். ஃபோன் அடித்துக் கணவன் அவளைக் கூப்பிட்டான்.

'நீ அங்கேயே இரு, நான் வந்து அழைத்துப் போகிறேன்' என்று வாக்கு தந்துவிட்டான்.

அவளது அல்லாடல்களையும், அது ஒரு முடிவுக்கு வந்து சேர்ந்ததையும் கூடவே இருந்து பார்த்துக் கொண்டிருந்த ராகவேந்திரனுக்கு 'அப்பாடா' என்றிருந்தது.

இனிமேல் அனாவசியமாக அவளைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்க வேண்டாம். அவன்கூட நிம்மதியாய் வீட்டைப் பார்க்கக் கிளம்பலாம். அங்கே வீட்டில் என்ன கூத்து நடந்து கொண்டிருக்கிறதோ இரண்டு மணிக்கே எல்லோரையும் புறப்பட்டுப் போகச் சொல்லிவிட்டாலும் ஆபீஸில் அந்தப் பெண் பிள்ளை மாட்டிக் கொண்டதால், அவளை அப்படியே விட்டு விட்டுப் போகவும் மனம் வரவில்லை. ஒரு வேளை அவன் அவளைப் பற்றிக் கவலைப்படாது புறப்பட்டுப் போயிருந்தாலும்கூட, வேறு யாராவது ஒருவர் அவளை வீட்டில் கொண்டு போய்ச் சேர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருப்பார்கள். ஆனால், இவன்தான் மறுபடியும் அவளைப் பார்க்கிற மட்டிலும் 'அவளுக்கு என்ன ஆயிற்றோ, ஏது ஆயிற்றோ?' என்ற கவலையையும் சேர்த்துச் சுமந்து கொண்டிருக்க வேண்டும் என்பதால் இருந்து விட்டே போவது என்று முடிவெடுத்திருந்தான். அதிலேயே மணி ஆறாகி விட்டது. இனிமேல் கிளம்பலாம்.

ராகவேந்திரன் இடது கையில் சாப்பாட்டு அடுக்கும், வலது கையில் குடையுமாய்க் கதவைத் திறந்தான். வாளும் கேடயமும் தாங்கிப் போருக்குப் புறப்பட்டாற் போலிருந்தது.

கதவைத் திறந்தவுடன் காற்று அடித்தது. வேறு எந்த வார்த்தையும் சொல்லத் தோன்றவில்லை. புயல் என்றார்கள். சூறாவளி என்றார்கள். நூறு கிலோ மீட்டர் வேகத்தில் அடிக்கிறது, எண்பது கிலோமீட்டர் வேகத்தில் அடிக்கிறது, நூற்று அறுபது கிலோ மீட்டர் வேகத்தில் அடிக்கிறது என்ற புரளிகள் வேறு புயலைவிட அதிவேகமாய் அடித்துக் கொண்டிருந்தன.

காற்று ஒரு வாளி மழை நீரை வாங்கி, ராகவேந்திரன் முகத்தில் அறைந்தது. மூச்சுத் திணறித் திக்குமுக்காடிப் போனான். கையில் வைத்திருந்த குடையை விரித்துச் சாலையில் இறங்கினான். குடை ஒன்றும் பெயர் சொல்லிக் கொள்ளவில்லை. விரித்த சுருக்கில் கோபித்துக் கொண்டது. அத்தனைக் கம்பிகளும் ஆகாயம் பார்த்தன. ஆளை அப்படியே தூக்கிக் கொண்டு போகும் போல இருந்தது. மடக்கிக் கொள்வதுதான் உத்தமம் என்று தோன்றியது. மடக்கிக் கொண்டான்.

எதிரில் வந்தவர்கள்கூட அப்படித்தான் வந்தார்கள். மடக்கின குடையுடன் காற்றில் தள்ளப்பட்டுக் கொண்டே வந்தார்கள். சைக்கிளில் வந்தவன் சீட்டியடித்துக் கொண்டே சென்றான். ராகவேந்திரனுக்குக் குளிரில் உடம்பு விறைத்துக் கொண்டது. நனைந்த உள்ளங்கையின் உள்பக்கம் இலை நரம்புகள் மாதிரி நிறைய சுருக்கங்கள்! பஸ் இல்லை. லாரி இல்லை. சைக்கிள் இல்லை. மோட்டார் சைக்கிள் ஓடவில்லை. அத்தனை வாகனங்களும் எங்கே போய் ஒளிந்து கொண்டன என்ற எண்ணம் எழுந்தது ராகவேந்திரனுக்கு. சாதாரண நாள்களாய் இருந்தால் இந்த மாதிரி நடுரோட்டில் நடக்க முடியாது. ஏதாவது ஒரு பஸ்ஸோ, காரோ, லாரியோ உரசி விட்டுப் போய்விடும். ஏமாந்தால் அரைத்து விட்டுப் போய் விடும். அப்படி, இப்படி என்று கடல் துரும்பாய் அல்லல்பட்டு வீடு வந்து சேர்ந்தபோது பவானி

வாசல் கதவருகிலேயே நின்று நடுங்கிக் கொண்டிருந்தாள்.

ராகவேந்திரனுக்கு லேசாய்க் கோபம்கூட வந்தது. இவனுக்குத் தலையெழுத்து. உத்தியோகத்துக்குப் போக வேண்டும். நாலு காசு கண்ணால் பார்க்க வேண்டும். அப்போதுதான் வயிற்றுக்குச் சாதம். அவனுக்கும் சரி. அவளுக்கும் சரி. உடுத்த உடைக்கு என எல்லாவற்றுக்கும்! அவளுக்கு என்ன தலையெழுத்து?

"ஏன் இப்படி இங்க நிக்கறே?" என்று கொஞ்சம் கடுமையாகவே கேட்டான்.

"நீங்க வரலையேன்னுதான்".

"வந்தா வீட்டுக்குள்ளே வர மாட்டேனா? இந்த மழையில் நனைஞ்சிக்கிட்டுப் பாத்தாத்தான் நான் வர்றது தெரியுமா?"

"ஒங்களுக்கென்ன? சொல்லிப்பிடுவீங்க. வீட்ல உக்காந்துகிட்டு. 'வெளில போனவங்க ஒண்ணுமில்லாம வந்து சேந்துடணுமேன்னு வயத்துல நெருப்பை அள்ளிப் போட்டுக்கிட்டு இருக்கிறவங்களுக்குத்தானே அந்தக் கஷ்டம் தெரியும்! நீங்க மட்டும் மழையில நனையலை? நான் நனைஞ்சா என்னவாம்? ஒங்க ஒடம்பு மட்டும் இரும்புலயா பண்ணி வெச்சிருக்கு? அப்படித்தான் நான் என்ன கொட்ற மழையிலயா நனைஞ்சேன்? சும்மா வெறுஞ் சாரலுதானே?"

"அப்பா... என்ன மழை... என்ன மழை?" என்று, பார்த்துவிட்டு வந்த மழை பிரமிப்பை வெளிப்படுத்தினான் ராகவேந்திரன். தன் மனைவி தனக்காகக் கவலைப்பட்டுக் கொண்டு வந்து நிற்பதை உணர்ந்தவுடன், அவன் குரலில் இருந்த கடுமை எல்லாம் காய்ந்த தோசைக்கல்லின் மேல் பட்ட நீர்த்துளி போல் காணாமல் போய்விட்டது.

"காத்து ரொம்ப அடிக்குதாமில்ல? டி.வி.யில சொன்னாங்க..."

"என்ன எங்கயோ அடிக்கறா மாதிரி கேட்டாவது. போய்ப் பாரு. வழியெல்லாம் மரந்தான். 'நூறு வருஷமா இருக்கேன்'னு நேத்து வரைக்கும் மார் தட்டின மரமெல்லாம் இருந்த எடமேத் தெரியலை. எவ்வளவு காம்பவுண்டுச் சுவருங்க இடிஞ்சி வுழுந்திருக்கு தெரியுமில்ல? ஊர்ல பெரிய ராட்சஸன் நொழைஞ்சி ஹதம் பண்றாப்பல இருக்கு பவானி".

"சரி. கையைக் காலைக் கழுவிக்கிட்டு வாங்க. மணி இப்பவே ஏழரை. சூடாச் சாதம் வடிச்சிருக்கேன். கத்தரிக்கா பொரிச்ச கொளம்பு. அப்பளம். சாப்பிட்டுப் படுத்துருவோம்".

"பலே... பலே' என்றான் ராகவேந்திரன், கை கால் கழுவ முற்றத்தில் இறங்கிக் கொண்டே. அவன் பொரித்த குழம்பும், அப்பளமும் என்ற சமையல் தினுசிற்காகப் 'பலே' போட்டானா, இல்லை, 'படுத்துருவோம்' என்று பவானி சொன்னதற்காகப் 'பலே' போட்டானா என்று புரியாமல் லேசான வெட்கம் உடம்பைத் தழுவிப் பவானி சமையலறைக்குச் சென்றாள். நடக்கும்போது 'ணிக்' 'ணிக்' என்று அவள் கால் மெட்டி சங்கீதம் பாடியது.

சாப்பிட்டானதும் பவானி பாத்திரங்களை எல்லாம் ஒழித்துப் போட்டுத் தேய்க்க ஆரம்பித்தாள். ராகவேந்திரன் வாசல் கதவைத் தாழ் போடுவதற்காக வெளியே வந்தான். அவர்கள் குடியிருந்த வீடு கொஞ்சம் பழைய வீடு. ஒரு நூறு வருடப் பழையது என்று சொல்லலாம். அப்போதெல்லாம் சென்னையிலுங்கூட தாராள மனசுக்காரர்கள் இருந்திருக்கிறார்கள் என்பதற்கு அந்த வீடு ஒரு வாழும் சாட்சி.

தெரு வழியே போகிறவர்கள் வெயில் மிகுந்து தலைச்சுற்றல் நேர்ந்தால் கொஞ்சம் உட்கார்ந்து ஒய்வெடுக்க ஒரு நிழல் திண்ணை. மழை திடீரென ஆளை அப்படியே குளிப்பாட்டப் பார்த்தால் வந்து ஒண்டிக்கொள்ளத் திண்ணையை ஒட்டிக் கொஞ்சம் நிற்கும் இடம் என்று கட்டியிருந்தார்கள்.

முன்பு வீட்டுக்குக் கதவு என்பதே திண்ணை முடிந்த பின்தான் இருந்தது. கதவின் பின்னாலும் கூட ஒரு ரேழி, அல்லது நடை. இப்போதெல்லாம் வீடுகளில் அது ரிசப்ஷன் அறை என்று உருமாறி இருக்கிறது. திண்ணை இருக்கும் இடங்கள் எல்லாம் மனிதர்களின் கழிப்பிடங்களாகமாறியிருக்கின்றன.

ராகவேந்திரனின் வாடகை வீடு அத்தகைய நவீன மாற்றங்களுக்கெல்லாம் உள்ளாகவில்லை. வீட்டுக்காரரிடம் பழைமை இன்னும் ஒட்டிக் கொண்டிருப்பதும், நவீனப்படுத்தக் காசு இல்லாததுமே அதற்குக் காரணங்களாக இருக்கலாம்.

அதனால் இன்னும் திண்ணை இருந்தது. ஆனால் திண்ணையை ஒட்டி இருந்த நிற்கும் இடம் தள்ளி ஒரு கம்பிக் கிராதி நட்டு வைக்கப்பட்டிருந்தது. கூடவே ஒரு கம்பிக் கதவு. வெறும் திண்ணையாகவே இருந்தால் அது சோம்பேறிகளுக்கும், ஆடுகளுக்கும், நாய்க்கும் உறைவிடமாகப் போகிறது என்று வீட்டுக்காரரின் தகப்பனார் காலத்திலேயே அந்தக் கதவையும், கிராதிக் கம்பிகளையும் நூஊஊஊறு ரூபாய் செலவில் போட்டதாக வீட்டுக்காரர் வாடகை வாங்க வரும் போதெல்லாம் சொல்வது பழக்கம்.

நடையை ஒட்டி இருந்த கதவு, சுத்தமான பர்மா தேக்குக்கதவு. அந்தக் கதவை ஓர் ஆனை இழுத்துச் சொல்லச் சிரமப்படும். ஒற்றைக் கதவுதான். கால் அடி தடிமனான தேக்குப் பலகையில் சிற்பச் செதுக்கல்களும், பித்தளைக் குமிழ்களும் நிறைந்த கதவு. மழை, வெயில் என்று அத்தனை இயற்கை உபத்திரவங்களையும் தாங்கித் தாங்கிக் கறுத்துப் போயிருக்கிறதே தவிர இன்னும் அது பலவீனப்பட்டுப் போகவில்லை.

ராகவேந்திரன், கம்பிக் கதவையும், நடைக் கதவையும் ஒரு சேரத் தாழ் போட்டுவிடலாம் என்று இருட்டான நடையில் காலை எடுத்து வைத்தபோது வெளித் திண்ணையில் இருந்து பேச்சுக் குரல் கேட்டது. நடை விளக்கு ஃப்யூஸ் போய்விட்டது. நேற்றுதான் நடந்தது. இன்றைக்கு ஒரு புது பல்பு வாங்கி வரவேண்டும் என்றுதான் நினைத்திருந்தான். மழையிலும் காற்றிலும் ஃப்யூஸ் போன விஷயம் ஞாபகத்திற்கே வரவில்லை. இப்போது திண்ணையில் வெறும் குரல்கள். முகமற்றக் குரல்கள்.

"நீ கீழயே படுத்துக்கப்பா. கோணியை எடுத்து அந்தக்'

கம்பிங்கள மூடிட்டா அடக்கமா இருக்கும் என்று ஒரு வயதான பெண் கிழக்குரல் வேறு ஒரு ஏதோ ஒரு பரிச்சய உறவிடம் சொல்லியது.

"இம்மாங் குளுரு குளுரு தேம்மே. இதுல போய்ப் படுக்கச் சொல்றியே" என்று வயதான ஆண் கிழக்குரல் கொஞ்சம் ஆதங்கம் சேர்த்துப் பதில் அளித்தது.

"ஐய... ஒனக்கின்னாக் கேடு காலம்? ஏதோ எடங்கெடச்சிக் கீதேன்னு படுக்கச் சொன்னா இவ்ளோ பெனாத்திறியே. ஒனக் கின்னா கட்டுலும் மெத்தையும் கேக்குதா?"

ராகவேந்திரன் இருட்டு நடையைத் தாண்டி வெளித்திண்ணைக்கு வந்தான்.

"யாரது?" என்று கேட்டுக் கொண்டே திண்ணைப் பக்கம் பார்த்தான். தெரு விளக்கு எரிந்து கொண்டுதான் இருந்தது. அதன் நிழல் வெளிச்சத்தில் ஒரு கிழவி தெரிந்தாள். கிராதி கம்பிகளைக் கிழிந்துபோன சாக்கு விரிப்புகளைக் கொண்டு மூட முயற்சி செய்து கொண்டிருந்தாள். கிழவன் ஒருவன் திண்ணையில் குத்துக்காலிட்டு உட்கார்ந்திருந்தான். ஏதோ ஒரு சின்னப்பையனுக்குத் தேவையில்லாதச் சட்டை கிழவனின் உடம்பை மூடியிருந்தது. அந்தச் சட்டையில் தோள்பட்டைப் பக்கம் இருந்த வாரும், பித்தானும், இரண்டு மார்புப் பக்கமும் இருந்த இரண்டு பைகளும், அவற்றை மூடுவதற்காகத் தைக்கப்பட்டிருந்த துணிமுக்கோணங்களும் பித்தான்களும் மிகப் புதுமையைச் சொல்லிக்கொண்டிருக்க, கிழவன் அந்த சட்டைக்குள், கம்ப்யூட்டர் பாடும் கர்நாடகச் சங்கீதமாகத் தெரிந்தான். அவன் உடலும், கைகளும், கால்களும் வெகு தன்னிச்சையாக நடுங்கிக் கொண்டிருந்தன.

கிழவி சாக்குத்துணியை மாட்டுவதை நிறுத்திவிட்டு அவனைப் பார்த்தாள்.

"சாமி. மய பெய்து சாமி. ராவிக்கு இங்க படுத்துட்டுக் காலல பூட்றேம்பா" என்றாள்.

அவனை, கிழவி 'சாமி' என்று விளித்துக் கொஞ்சம் அந்நியமாகப் பாவித்து, 'பூடறோம்பா'வில் அவளையறியாமலேயே அவனை நெருக்கமாக்கிக் கொண்டதை ராகவேந்திரன் மனத்துக்குள் ரசித்தான்.



"எங்க இருக்கீங்க நீங்க?"

"ஸ்கோலு வாசல்ல ரிச்சா ஸ்டாண்ட்ல கீறேம்பா. ஸ்கோலுக் குள்ளதான் போய் இருப்போம், ஒரு காத்து மயன்னா. இன்னிக்கு ஸ்கோலு இடிஞ்சி வுயுந்திரிச்சி. அத்தைத் தொட்டுப் பயந்துக்கினுதான் இங்க வந்துட்டோம்பா. ஒரு ராவு படுத்துனுருந்துட்டுப் போயிடறோம்பா".

பள்ளிக்கூடக் கட்டடம்கூட இடிந்து விட்டதா? இந்த மழைக்கு இந்த வருடம் இவ்வளவு ஆங்காரம் ஏன்? எல்லோரும் போட்டுத் திட்டுத் திட்டுத் திட்டு என்று திட்டியதில் 'பெய்தே அழிக்கிறேன்

பார்' என்று தனக்குள் வன்மம் வளர்த்துக் கொண்டு இந்த மாதிரியான ஒரு நாளுக்கு வன் முறையில் அதுவும் இறங்கி விட்டதா என்ன?

திண்ணை ஏழடி நீளம். ஆனால் ஓர் ஆள் அகலம்தான். அதுவும் கடப்பைக்கல் போடப் பட்ட திண்ணை. வெயில் நாள் களிலேயே அந்தக் கடப்பைக்கல் ராத்திரி நேரங்களில் ஜில்லென்று இருக்கும். இப்போது ஐஸ் மாதிரி இருக்கிறதோ என்னவோ!

இந்தத் திண்ணையிலும், அதை ஒட்டி இருக்கும் அந்தத் தரை யிலுமா இந்தக் கிழட்டுத் தம்பதி களின் இன்றிரவு கழியப்போகிறது? ராத்திரி ஏற ஏற மழையின் வேக மும், காற்றின் வேகமும் அதி கரித்துக்கொண்டே போனால் இந்தக் கிழட்டுத் தம்பதிகள் ராத் திரி முழுக்க என்ன பாடு படுவார்கள்?

"இங்க ரொம்பக் குளுருமே".

"போவச் சொல்லிடாதப்பா. வெளியில போய் மயல நனிஞ்சா இதுக்குக் குளுரு ஜொரம் வந்து ரும்பா" என்றாள் கிழவி ஆதரவு தேடும் அபலைக்குரலில்.

'திண்ணையில் குளிரும், இரவில் இங்கே படுக்கக் கூடாது' என்று சொல்லி அவன் அவர்களை வெளியே அனுப்பி விடுவான் என்று கிழவி பயந்துவிட்டாள் போலும்.

"அதுக்குச் சொல்வலை. உள்ள நடைல வந்து படுத்துக்குங்க. அங்க மழெத்தண்ணி இல்லெ. சாரலும் இல்லெ. காத்தும் இல்லெ".

"ஐய... ஏன். எயுந்துக்க. உள்ள வந்து படுத்துக்கச் சொல் றாரில்ல சாமி! ராசா. கண்ணு. நீ நல்லா இருப்பப்பா. ஒன் புள்ள குட்டி ரொம்ப நாளிக்கு நல்லா இருக்கும். நாங்க அப்படியே இருட்டோட எழுந்து பூட்றோம்" என்று அவர்கள் நடைக்குப் பெயர்ந்து வந்தார்கள்.

ராகவேந்திரன் வாசல் கம்பிக் கதவைத் தாழ் போட்டுவிட்டு, நடைக்கதவைத் தாழ் போட்டு விட்டு அவர்கள் மேல் பட்டு விடாமல் அவர்களை எங்கும் மிதித்து விடாமல் மிக எச்சரிக்கை யாக நடந்து வீட்டுக்குள் வந்து சேர்ந்தான்.

முற்றத்துத் தரையில் மழை தாளம் போட்டது. முற்றத்தைச் சுற்றி இருந்த நடையில் கல்லுர லும், அம்மியும், ஓர் ஆனையடி அண்டாவும், ஒரு பெரிய பித்தளை அண்டாவும் மழைச் சாரலில் நனைந்தன. மழைநீர் ஆனையடி பித்தளை அண்டாவிலும், பெரிய பித்தளை அண்டாவிலும் பட்டு ஏதோ ஒரு கைதேர்ந்த ஜலதரங்க வித்வான் கச்சேரி பண்ணும் பிரமிப்பை உண்டுபண்ணிக் கொண்டிருந்தது.

கூடத்தில் மழைச்சாரல் குற்றா லச் சாரலாய்ப் புகுந்து புறப் பட்டது. காற்று நினைத்துக் கொண்ட மாதிரி உய்ய்ய்ங்க் என்று விசிலடித்தது. இல்லா விட்டால் 'ஸ்ஸ்ஸ்' என்று பாம்புச் சீறலாய்ச் சீறியது.

படுக்கை அறையில் பவானி அவனைச் சீண்டிவிட்டாள்.

"இது என்னாது அக்கிரமமா இருக்கு? தர்மராஜா மாதிரி யாரோ மூஞ்சி தெரியாதவங் களுக்குச் சத்திரத்துல எடங் கொடுக்கிற மாதிரி எடங்கொடுக் கச் சொல்லியிருக்கு. அண்டை வீட்டு நெய்யே, என் பொண்டாட்டி கையேங்கற மாதிரி?"

"அப்படின்னா?"

"இது உங்க வீடில்லியே. வாடகை வீடுதானே". அதனால தான் இவ்வளவு தாராளமா அவுங் களைப் படுக்கச் சொல்லிப் பிட்டீங்க. உங்க வீடாயிருந்தா எடங்கொடுத்திருப்பீங்களான்னு கேட்டேன்".

"அட. எத்தினி நாளா இந்த ஏத்தி விடற வேலை? இது ஒண் ணும் கடைத் தேங்காயை எடுத்து வழிப்புள்ளையாருக்குக் கொடுக்கற சங்கதியில்ல. நான் வீட்டை வாடகைக்கு எடுத்திருக்கேன்னா, அந்த எடம் வாடகை கொடுக்கற வரைக்கும் நம்ம எடந்தான். அத னால அவங்களுக்குக் குடுக்கலாம். தப்பில்ல. நான் என்ன காசு பணம் ஏதாவது வேணும்னு கேட் டேனா? சும்மாத்தான குடுத்தேன்? என் சொந்த வீடா இருந்தாலும் குடுத்திருப்பேன். அந்தக் கெழவி என்ன சொல்லிச்சின்னு கேக்க லியே நீ?"

"என்னா சொல்லிச்சி?"

"உங்க புள்ள குட்டிங்க எல்லாம் ரொம்ப நாளிக்கி நல்லா இருக்கணும்னு சொல்லிச்சி. மனசாரச் சொல்லியிருக்குதில்ல. நம்ம புள்ள குட்டிங்க எல்லாம் ரொம்ப நல்லா இருக்கும். வா. வா. புள்ள குட்டிங்களுக்கு ஒரு வழி பண்ணலாம்."

"ச்சீ. போங்க. நூலு நுனியை எங்க புடிச்சி எங்க வந்து சேர்ரீங்க?" என்று பவானி செல்ல மாகக் கோபித்துக்கொண்டு விளக்கை அணைத்துவிட்டு அவ னருகில் வந்து படுத்தாள்.

மறுநாள் காலை விடிந்த போது மழையும் காற்றும் சுத்த மாக நின்று போயிருந்தது. ஜன்னல் வழியே தெரிந்த ஆகாயம் பளிச்சென்று நீலமாகக் கலகல வென்று சிரித்தது. விஷமம் செய்து ஓய்ந்து விட்டு, 'நானா, விஷமமா, செய்யவே இல்லையே' என்று சாதிக்கும் குழந்தை போல் ஆகா யம் தெரிந்தது.

ராகவேந்திரன் மகிழ்ச்சியுடன் எழுந்து கொண்டான். பக்கத்தில் பவானி ஆயாசத்துடன் படுத்துக் கிடந்தாள்.

"பவானி... எழுந்துக்கயேன். விடிஞ்சிரிச்சி" என்று அவளைத் தொட்டு உலுக்கினான்.

பவானி ஒரு திடுக்கிடலோடு எழுந்து கொண்டாள்.

---

## சென்னையில்...

☆ 1861 ஆம் ஆண்டு சென்னை உயர்நீதி மன்றம் அமைக்கப் பட்டது.

☆ 1857 ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகம் துவக்கப்பட்டது.

☆ பல்லவன் போக்குவரத்துக் கழகம் 1972 ஜனவரி முதல் தன் பயணத்தைத் தொடங்கியது.

☆ சென்னை கடற்கரைச் சாலையில் அமைந்துள்ள ஐஸ் அவுஸ் (விவேகானந்தர் இல்லம்) 1840 இல் அமெரிக்காவிலிருந்து கொண்டுவரப்பட்ட ஐஸ் கட்டி களைச் சேமிப்பதற்காகக் கட்டப் பட்டது.

---

"ஐய்யய்யோ. இவ்ளவு நேர மாத் தூங்கிட்டேன்? எல்லாம் உங்களாலதான்" என்று அவன் மார்பில் செல்லமாகக் குத்திவிட்டு அறைக்கதவைத் திறந்து வெளியில் போனவள், "என்னாங்க, இங்க வந்து இந்த அநியாயத்தைப் பாருங்களேன்" என்று திகில் குரலில் கூவினாள்.

ராகவேந்திரன் பதறிப் போய் எழுந்து ஆடையை ஒழுங்காகச் சுற்றிக்கொண்டு வெளியில் ஓடினான்.

"என்ன ... என்ன ஆச்சி?"

"இங்க இருந்த ஆனையடி அண்டாவைக் காணுங்க. நல்ல கெட்டிப் பித்தளைத் தகடு. நம்ப கல்யாணத்துக்கு எங்க திருச்சி அக்காவோட மாமியார் சீராக் கொண்டு வந்து கொடுத்ததுங்க."

ராகவேந்திரன் கதவுப் பக்கம் பார்த்தான். நடைக்கதவு சும்மா மூடியிருந்தது. கிழவனும் கிழவியும் இல்லை. நடைக்கதவைத் திறந்தான். வாசல் கம்பிக்கதவும் அப்படியே சும்மா சாத்தி இருந்தது. திண்ணை வெறுமையாக இருந்தது. தெருவோரம் ஓடிக்கொண்டிருந்த மழை நீரில் குழந்தைகள் ஒன்றன்பின் ஒன்றாய்க் கப்பல் விட்டு ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தார்கள்.

ராகவேந்திரன் உள்ளே வந்தான்.

"பெரிய தர்மராஜா மாதிரி எடங்குடுத்தீங்க. என்ன ஆச்சி பாத்தீங்க இல்ல? உங்களுக்கு வெந்நீரு போட்டு அதுலதானே வெளாவிக் குடுப்பேன்! எவ்வளவு கனமா இருக்கும்? இன்னிக்கு வாங்கப் போனா இருநூறு முன்னூறு ஆகுமே. உங்களுக்கு இனிமே எதுல நான் வெந்நீரு வெளாவிக் குடுக்கறதுன்னு தெரியலையே..."

"விடு பவானி. நாம கத்தறதால அண்டா வரப்போறதில்ல. நமக்கு வெந்நீரு. அவங்களுக்குச் சோறு. விடு. போகட்டும்", என்றான் ராகவேந்திரன் பெருமூச்சுடன்.

தேளென்றால் கொட்டும். பாம்பென்றால் கடிக்கும். ஏழையென்றால் அதிகம் பசிக்கும் போலிருக்கிறது!

தம்பு செட்டி - முத்து, பவழம், நவரத்தினம் முதலிய பொருள்களை வியாபாரம் செய்து வந்த முக்கிய வணிகர்.

லிங்கி செட்டி - தேயிலை வியாபாரம் செய்து வந்தவர்.

காலடிப்பேட்டை - சென்னை நகர நெருக்கடியைத் தீர்க்க திருவொற்றியூர் செல்லும் வழியில் தென்பகுதியில் ஏற்பட்ட பகுதி. காலட்பேட்டை என்று பெயர். தற்போது காலடிப்பேட்டை என்று தவறான பொருளில் வழங்குகிறது. (காலட்- ஆங்கிலேயக் கவர்னர்)

வண்ணாரப்பேட்டை - ஆங்கிலக் கம்பெனியில் துணிகளைத் துவைக்க, வெளுக்க, காயப்போட பல வண்ணார்கள் பெத்த நாயகன் பேட்டைவடபுறத்தில்வேலைபார்த்து வந்தனர். அங்கே அவர்களுக்கு வேண்டிய நீண்ட திறந்த வெளியும் பெருமளவு நல்ல நீரும்கிடைத்தன.

பவழக்காரத் தெரு - லண்டனில் இருந்த ஈட்டு வர்த்தகர்களிடமிருந்து பவழம் முதலிய பொருள்களை இறக்குமதி செய்து உள்நாட்டில் விற்று வந்தனர். முத்தியாலுப்பேட்டையின் வடக்குப் பகுதியில் பவழ வணிகர்கள் சிலர் வசித்து வந்தனர். இதனால் பவழக்காரர் நகரம் (பகடறுபேட்டை) அல்லது பவழக்காரத் தெரு என்று அழைக்கப்பட்டது.

பொது மக்களின் வரிகொடா இயக்கத்தாலும், ஜோஸையா சைல்டு (Josiah Child) என்ற எழுத்தாளனின் இடையறாத கோரிக்கையாலும் 1687-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 30ஆம் தேதி ஜேம்ஸ் அரசனின் அனுமதியுடன் சென்னையில் நகராண்மைக் கழகம் (Corporation of Madras) என்ற ஓர் அமைப்புத் தோற்றுவிக்கப்பட்டது. இவ்வமைப்பின் தலைவராக நகரத்தந்தை (Mayor)யும், அவருடன் ஒத்துழைக்க சில மூப்பர்களும் (Aldermen) நகரத்தாரும் (Burgesses) அமர்த்தப்பட்டனர். டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகளின் நகராட்சி முறையை ஒட்டியே இந்த நகராண்மைக் கழகமும் அமைக்கப்பட்டது. முதல் நகரத் தந்தையாக நத்தானியேல் இக்கின்ஸன் (Nathaniel Higginson) நியமிக்கப்பட்டார். இதன் பிறகு நகர மண்டபம் (Town Hall) ஒன்றும் கட்டப்பட்டது. நகராண்மைக் கழகத் தோற்றுவிப்பு ஹேல் காலத்தில் நடந்த தலை சிறந்த நிகழ்ச்சி என்பதை இங்குக் குறிப்பிடுதல் நலம்.



# பேதங்கள்

சுகா ராமமூர்த்தி

எட்டுமணி வண்டியைப் பிடித்தால், மெட்ராஸ் போக அரை மணி; அங்கிருந்து பஸ் பிடித்து சைதாப்பேட்டை போனால் சரியாக இருக்கும். இந்தக் கணக்கில், அவர்கள் திருவள்ளூரில் லோகல் ட்ரெயினில் ஏறினார்கள்.

வழக்கமாக எட்டுமணி வண்டி காலியாகவே போகும். அலுவலகம், கல்லூரி, பள்ளி போவோரும் வருவோரும் தீண்டாத ஒரு வண்டி உண்டென்றால் அது இது தான்.

கதிரேசன் தம்பதி, மூன்று வயது மீனாவுடன் முதலில் ஏறினார்கள். பின்னால் மூட்டை முடிச்சுகளை ஏற்றி விட்டதும், கதிரேசனைப் பெற்றவர்கள் ஏறினார்கள்.

கதிரேசன் ஓர் இருக்கையில் அமரவும், அவன் மனைவி கலா, காதைக் கடித்தாள்.

"இங்க வேணாங்க. பயம்மா இருக்கு. வேற எடத்துக்குப் போகலாம்ங்க".

"அட சும்மா இரேன்! மூட்டை முடிச்செல்லாம் ஏத்தியாச்சு. இரேன். அரைமணி நேரம்! இதோ மெட்ராஸ் வந்திடும்! பயப்படாம உக்காரு". அவள் தோளைத் தொட்டு உட்கார்த்தினான்.

மீனா ஜன்னலோரத்தில் குதூகலம் பொங்க வேடிக்கை பார்ப்பதில் மூழ்கிவிட்டாள்.

கதிரேசனின் தந்தை கன்னியப்பனும் தாயும் அவர்களுக்கருகில் உட்கார்ந்து பிறகு எதிரில் நிமிர்ந்து பார்த்து அதிர்ந்தார்கள்.

கம்பீரமான உடம்புக்கும் முகத்தின் சோர்வுக்கும் துளியும் பொருத்தமில்லாமல் இருந்தான் அவன். அவனுடைய கைகளையும் கால்களையும் விலங்குச் சங்கிலிகள் பிணைத்திருந்தன.

முறுக்கிய மீசை; முகத்திலும் உடம்பிலும் அடிபட்ட இரத்தக் காயங்கள்! கண்கள் இடுங்குமளவு கன்னங்கள் வீங்கியிருந்தன. வஜ்ர தேகம்! உக்கிரப்பார்வை. மதுரை வீரன் சிலையை உட்கார்த்தி வைத்தது போல இருந்தான்.

கிழவி, காக்கிச் சட்டைக் காரனைப் பார்த்தாள். இயந்திரத்தனமாக இருந்தது அவன் முகம். குற்றவாளிகளைக் கண்டு மரத்துப் போனவனாகத் தெரிந்தான்.

கிழவி, கழுத்து நகை வெளியில் தெரியாமல் இருக்க 'சட்டென்று' இழுத்துப் போர்த்திக் கொண்டாள். "குளுருது இல்லே" என்று தனக்குத் தானே, தன் செயலுக்கான சமாதானத்தையும் சொல்லிக் கொண்டாள்.

கூடையிலிருந்து வெற்றிலையை எடுத்துத் துடைத்து, நிதானமாகச் சுண்ணாம்பு தடவி, பாக்கை வைத்து வாயில் அமுக்கினாள்.

"என்ன தப்பு செய்தாரு?" வெற்றிலையை வாயோரம் தள்ளி, சாற்றை முழுங்கிய கிழவி அக்கறையோடு கேட்டாள்.

"செய்தாரு, என்ன மருவாதி இவனுக்கு." வீங்கிய கன்னத்தில் இடித்தான்; வலித்ததோ இல்லையோ, உள்வாங்கிக் கொண்டான் போலும். கிழவிக்கு அடிவயிற்றில் சிலீரிட்டது!

"இந்த பேமானி, கட்டின பொண்டாட்டியையும் புள்ளையையும் ஒரே வெட்டா வெட்டினவன்" காக்கிச்சட்டை 'விலங்கை' இனம் காட்டியதும், கிழவி வெற்றிலை மெல்லுவதை மறந்தாள். கதிரேசன் தம்பதிகளின் உடம்பில் நடுக்கமும், முகத்தில் வெளுப்பும் தெரிந்தன. கிழவருக்குக் காது மந்தம். ஏதோ புரிந்த பாவனையுடன் தலையை ஆட்டினார்.

"நீங்க எங்க போறீங்க?

"முண்டக்கண்ணி அம்மனுக்குப் பொங்கல் போடணும். குல தெய்வம். திருவள்ளூர்ல பையனுக்கு வேலை". கிழவிதான் பயம் தெளிந்து பேசினாள்.

மீனா ஜன்னலிலிருந்து முகத்தைத் திருப்பவே இல்லை. இருட்டில் ஓடிமறையும் மின்விளக்குகளையும் தலைவிரித்து நின்ற மரங்களின் ஓட்டத்தையும் இமை மூடாமல் பார்த்திருந்தாள்.

"பாட்டிம்மா, ராவெல்லாம் கண்முழிச்சது, இப்ப தூக்கம் சொக்குது. நைட் டூட்டி வேற போட்டுடுவான். ஓர் அரை அவர் தூங்கறேன். 'இந்த பேமானி' அசைஞ்சா ஒரு கொரல் குடு'.

வழிநடையில் கால் நீட்டிப் படுத்தவன்தான்! அடுத்த மணித்துளியில் குறட்டை, ரயில் சத்தத்துக்குப் போட்டி கானம் இசைத்தது.

'விலங்கு' அசையாத சிலையாக, விழிகளைக் கூடத் திருப்பாமல் ஒரே புரத்தில் லயித்துக் கிடந்தான்.

கலாவுக்கு, காக்கிச் சட்டை தூங்கியவுடன் வயிற்றைக் கலக்கத் துவங்கியது. தேவையில்லாத கற்பனைகள் சிறகு விரித்து அவளைப் பயமுறுத்தின! காலை மடக்கி இருக்கையில் சப்பணமிட்டாள்.

"என்னங்க, இப்படி வந்து மாட்டிக்கிட்டோமே! ஏதோ ரொம்ப நாளைக்குப் பிறகு மெட்ராஸ் கௌம்பறோம்னு எவ்வளவு ஜாலியா இருந்தேன். இப்ப எல்லாமே அடங்கிப் போச்சு. ஏங்க. இவன் எழுந்து வந்து நம்மை அடிச்சுப் போட்டான்னா என்னங்க பண்றது!"

"இவ ஒருத்தி. நானே கெடந்து நடுங்கறேன். எத்தையாவது

சொல்லிப் பயமுறுத்தாதே! அவன் அடிக்கறவரைக்கும் நாம என்ன பூப்பறிச்சுகிட்டா இருப்போம்" கதிரேசனின் சொற்கள் மார்கழியின் காலைப் பனியில் நனைந்தன போலக் கிடுகிடுத்தன.

கைதியின் புறம் திரும்பவே அஞ்சினவன்போல எதிர்ப்புறம் நோக்கினான்! முதல் முறை பார்த்தபோது பதிந்து போன அவனுடைய கரணைக் கைகளும் தோளும் அடித்தால் எப்படியிருக்கும் என்று கற்பனை செய்கையிலேயே வியர்த்தது. மேல் துண்டால் அவசர அவசரமாகத் துடைத்தான்.

"அம்மா, பசிக்குதும்மா" திடும்மென்று மீனா ஜன்னல் இருக்கையை விட்டு கலாவிடம் வந்தாள்.

"இப்ப வண்டி ஏறும்போது தானே சாப்பிட்டே. அதுக்குள்ள என்ன பசி, போ, போய் உட்கார்ந்து வேடிக்கை பாரு" கலா குழந்தையை விரட்டினாள்.

பலகார மூட்டை அவனுடைய காலடியில் உள்ளே தள்ளி இருந்தது. அதை எடுக்க, தான் குனியும்போது, எதிரில் உட்கார்ந்திருக்கும் 'படுபாவி' எதையாவது செய்திட்டான்னா! அவன் மீது ஒரு கண் வைக்காவிட்டால் ஆபத்துத்தான்! கதிரேசனைப் பற்றி அவளுக்கு நன்றாகவே தெரியும்.

சினிமாவில், டி.வி. நிகழ்ச்சியில் திருடன் வந்தாலே, ஒடுங்கிப் போய் உட்கார்ந்திருப்பான். பூஞ்சை உடம்பு போல மனசும் பூஞ்சை!

இதோ உட்கார்ந்திருக்கானே மலை மாதிரி! ஏயப்பா! ஒடம்பு இப்படி இருக்கறதாலதான், யாரை அடிக்கலாம், எதை வெட்டலாம்னு மனசு அலைபாயுதோ என்னவோ! கண்ணைப் பாரு கண்ணை. யானை மாதிரி உடம்பு; சின்னக் கண்ணு! ஆனாலும் உடம்பில் சிலிர்ப்பு ஏற்படற மாதிரி வெறி பிடிச்ச பார்வையாக அல்லவா இருக்கிறது!

மீனா, அம்மாவைவிட்டு நகரவில்லை. அவனுடைய கவனத்தைத் தன் பால் இழுக்க, புடவையைப் பிடித்து இழுத்தாள். புதிதாகச் செய்திருந்த மூன்று சவரன் தாலிச் சங்கிலி வெளியில் தெரிந்து போனதில் கலாவுக்கு ஆத்திரம், 'என்னடி இது. சும்மா தொண தொணன்னு".

"பசிக்கிறது. எதாச்சும் குடு, நா போறேன்" - முதன் முறையாக எதிர் இருக்கை ஆளைப் பார்த்தாள் மீனா. வினோதமாகத் தெரிந்த கை விலங்கையும் பார்த்தாள். அம்மாவை நச்சரிப்பதையும் மறந்து பார்த்தாள். அவளுடைய சின்ன மனசுக்குள் அடுக்கடுக்காகக் கேள்விகள் தோன்றின. யாரைக் கேட்கலாம் என்பது போலச் சுற்றி வர ஒருமுறை பார்த்தாள்!

"அம்மா, இவர் யாரு? ஏன் கைல சங்கிலி போட்டிருக்காங்க?" அவனை ஓர விழிகளால் பார்த்தபடியே அம்மாவை மீனா கேட்டதும் கலாவுக்கு ஆத்திரம் பீறிட்டது.

'எதையாவது கொடுத்துத் தொலைச்சு உட்கார வெச்சிருக்கலாமோ? சே! இனிமே இவ வாய் சும்மா இருக்காதே! என்ன ஏதுன்னு கேள்வி கேட்டே ஆளைத் தொளச்சிடுவாளே!'

முதன் முறையாகக் கைதியின் உடம்பில் லேசான அசைவு! அசைவா அதிர்வா? தெரியவில்லை.

"மீனா, சும்மா இரு! இல்லே 'அந்தப் பூச்சாண்டி பிடுச்சுக்குவான்'' அவனிடம் பயம் தோன்ற வேண்டும் என்பதற்காகக் கலா கூறினாள். கிழவர் யார் யார் வாய் அசைகிறதோ அங்கெல்லாம் பார்வையை அலைய விட்டார். கிழவி, மீனாவை எப்படித் தன் பக்கம் இழுப்பது என்ற யோசனையில் ஆழ்ந்தாள்.

"இந்தா, மீனா, இங்க வா, முறுக்கு தரேன்."

மீனா பாட்டியை நோக்கி நகர்ந்தாலும், 'முறுக்கு மீசை'யிடம்தான் அவள் கண்களும் மனமும் ஈர்க்கப் பட்டிருந்தன.

"அட வாயேன். அங்க என்ன பார்வை!" கீழே காலின் அடியிலிருந்த கூடையை நகர்த்தினாள். கை முறுக்கின் வாசனை 'கம்'மென்று பெட்டியை நிறைத்தது.

"எல்லாருக்கும் ஒண்ணொன்னு குடு பாட்டி".

"சரி இந்தா'' ஐந்து முறுக்குகளை அவள் கைகளில் வைத்தாள் பாட்டி.

'இன்னம் ஒண்ணு!'

"எதுக்கு மீனா. நாம அஞ்சு பேர்தானே!"

"வேணும் குடேன்!"

"சைதாப்பேட்டை போய்ச் சேர்ந்து உங்க அத்தைகிட்ட கொடுக்க அப்புறம் வெறும் கூடைதான் மிஞ்சும். சரி சரி நீ விட மாட்டே! இந்தா".

பாட்டிக்கு, தாத்தாவுக்கு அப்பா அம்மாவுக்கும் தலைக் கொன்றாகக் கொடுத்து விட்டு அப்படியே கைதியின் காலருகே நின்றாள்!

கலாவுக்கு உடம்பு பதறி விட்டது! 'வாடி' என்று இழுத்தாள். கலாவின் இழுப்புக்கு வராமல், மேலும் அவனுடைய முரட்டுக் கால்களைத் தொட்டு நின்றாள்.

அவன் அந்தக் குழந்தையையே பார்த்தான்.

"ஏய், கலா, மீனாதான் பிடிச்சா விடாதுன்னு தெரியுமில்லே. அவளைக் கைப்பிடில வைக்க வேணாம்! கதிரு. நீதான் நயமா அவளைத் தூக்குப்பா! இவனோட மூச்சுக் காத்துகூட நம்ம கொழந்தைமேல படக்கூடாதுப்பா!"

கதிரேசன் எழுந்து தூக்க வந்ததும், மீனா, கால் உதறி, கைதியைப் பிடித்துக் கொண்டாள். "இந்தாங்க, நீங்களும் முறுக்கு சாப்பிடுங்க" - என்பதுபோல நீட்டினாள்.

'வேண்டாம்' என்பதுபோல அவன் தலையாட்டினான்.

கதிரேசன், கலா, பாட்டியம்மா எல்லோரும் பதைப்போடு பார்த்திருக்க, மீனா துளி பயமில்லாமல் அவனோடு ஒட்டிக் கொண்டாள்.

ரயில் மிகவும் மெதுவாகப் போவதுபோல, புழுக்கமாக இருந்தது. இருளும் ஒளியும் வெளியில் கண்ணாமூச்சி விளையாடின. மரங்கள் இலை அசைவின்றிக் கரும் போர்வையைப் போர்த்திக் கொண்டு நின்றன.

"ஒம் பேரென்ன?"

"பாண்டித்துரை"

"ஒனக்கு முறுக்கு பிடிக்காதா?"

"பிடிக்கும்".

"அப்ப ஏன் வேண்டாம்னு சொன்னே!

"வேண்டாம்!"

"கை ரெண்டையும் கட்டியிருக்கிறாங்க. சாப்பிட முடியாதுன்னு வேண்டானு சொல்றியா?"

"நீ சாப்பிடு".

"ம்ஹூம்!"

"ஏன்?"

"நாம எதாச்சியும் தின்னா பக்கத்துல இருக்கறவங்களுக்கும் குடுத்துட்டுத் திங்கணும்னு எங்க நளினி டீச்சர் சொல்வாங்க!"

"எனக்கு வேணாம்னா...!"

"ஏன் பசிக்கலியா?"

பாண்டித்துரைக்கு வயிறு இரைச்சலிட்டது! நேற்றுக் காலை நடந்த நிகழ்ச்சிக்குப் பிறகு பச்சைத் தண்ணீர் பல்லில் படவில்லை. போலீஸ் அடித்த அடிகள், பசியின் உக்கிரமான தாக்குதல் அவனைச் சோர்வடையச் செய்திருந்தன. பசிக்கவில்லையா என்று குழந்தை கேட்பது, ஒரு தாயின் குரலாகப் பெற்றவளை நினைவுபடுத்தவும் அவன் கண்களில் கசிவு!

பாட்டியம்மாவுக்கு நெஞ்சு உருகி விட்டது!

"கலாவுக்கு இன்னமும் பயம் தெளியவில்லை!

"ஏய் சனியனே! இங்க வந்து தொலையேண்டி. ஒன்னையும் கழுத்தை நெரிச்சுக் கொன்னு போட்டுடுவான்" -

"ஒண்ணும் கொல்ல மாட்டான்! இல்லை...? பாண்டித்துரையைப் பார்த்துச் சொன்னதும், அவனுடைய பாறை நெஞ்சம் இளகியது!

"ஆமா, பொண்டாட்டியக் கொன்னே! பெத்த பிள்ளைய ஏன் கொன்னே? அவ்வளவு ஈவு இரக்கமில்லாத ஒரு காரியம் செய்திருக்கியே!"

கிழவி கனகாரியமாகக் கேள்விக் கணை தொடுக்க, கதிரேசன் அவளை அடக்க வந்தான்.

பாண்டித்துரை, காக்கிச் சட்டையைப் பார்த்தான். கனவில் ஏதோ ஊறியபடி அவன் திரும்பிப் படுத்தான்.

"நா கொல்லலை".

"அது சரி. செய்த தப்பை எவன்தான் ஒப்புக்குவான்!"

கதிரேசன் பீதியுடன் அம்மாவை ஜாடையால் பேசாமலிருக்கும்படி வேண்டினான். காக்கிச் சட்டையோ தூங்கிவிட்டான். இருப்பதில் இளம் வயதுக்காரன் தான் மட்டுமே! எதாவது விபரீதமாக ஆகிவிட்டால்? கிழவிக்குப் புத்தி போகுது பார்!

"நா ஒரு கட்சில இருந்தேன் பெறகு வெலகிட்டேன். எங்க ஊர் அரசியல்வாதிக்கு நான் எதிர்கட்சிக்குப் போயிடுவேனோன்னு பயம்! எதாச்சும் செய்யணும்னு என் பொண்டாட்டியையும் மகளையும் வெட்டிப் போட்டுட்டு, என்னை கேஸில் மாட்டிட்டான். என் மக.. மக..."

மீனா அவனுடைய விலங்கிட்ட கைகளுக்குள்ளே பூப்போல இருந்தாள். அவன் கண்களில் பெருகிய கண்ணீர் மட்டுமே அவளுக்குப் புரிந்தது.

கலாவுக்குக்கூட, தான் தவறாக எண்ணி விட்டோமே என்று பச்சாதாபம் எழுந்தது.

"இவ வயசுதான்... என் மக... ராணி... அநியாயமா..." அவன் உடம்பு குலுங்கியது. வார்த்தை வராமல் நெஞ்சுக்குள் துக்கம் அடைத்துக் கொண்டது. வழிந்த கண்ணீரைத் துடைக்க முயன்றான். சின்னக் குழந்தைக்கு எதிரில், அழுவது அவமானமாகத் தோன்ற, மீனாவைப் பார்த்து இளம் சிரிப்பை வீசினான்! சூதுவாது என்ற பேதங்கள் தோன்றாத இளம் செடி அவள்.





# இந்தியா என் இந்தியா!



ஒவ்வொரு தளிரிலும் பூ மலரும்!
காய் வரும்; கனியாகும்!
இமயத்தின் பனிச் சிகரங்கள்
உதய ஒளியில் மின்னும் கம்பீரம் -
கங்கையின் தாய்மைப் பிரவாகம் -
அடர்ந்த கிர்காடுகளின் அச்சமூட்டும் தனிமை -
தஞ்சை நெல்வயல்களின்
பொன்மணிப் பசுமை நாட்டியம் -
புயலும் தென்றலும் தராசின் இருபுறமும்
நிற்கிறது!
எழுத்தறிவு இல்லாத கிராமிய உழவன்
வீட்டிலிருந்து புறப்படும் எனது இளைஞன்
விண்கோள்களை செலுத்தும் மையத்தில்
கம்ப்யூட்டர் பட்டன்களைக் கையாள்கிறான்!

அன்னை இந்திராவை, ஜெயலலிதாவை
பெற்றெடுத்த இம்மண்ணில் இன்னமும் ஒருபுறம்
உசிலம்பட்டிகள்!
அமுதம் நிறையும் யுகங்களைக் கடந்து
என் நாடு...
பஞ்சாக்னி நடுவே
வெப்பமும் குளிரும் தழுவ
இருளும் ஒளியும் மிதக்க
உதயமும் அஸ்தமனமும் சங்கமிக்க -
அறிவியலும் அறியாமையுமாய்...
'நிமிர்ந்த நன்னடைப் பெண்'ணும்
உயிர்வாழ அஞ்சும் பேதையுமாய்...
செல்வச் செழிப்பும் வறுமைக்
கொடுமையுமாய்...
இருபத்து ஒன்றின் அறிவும் பாய்ச்சலும்
ஒன்பதாம் நூற்றாண்டு பக்திப்
பரவசமுமாய்...
இந்தியாவின்
தவம் தொடரும்!

ஜெ. கமலநாதன்

"ஒனக்குப் பசிக்கிறது. அதான் அழுறே. எனக்குத் தெரியும். இரு. இரு" அவன் மடியிலிருந்து துள்ளிக் குதித்தாள். பாட்டியின் காலடியிலிருந்த மூட்டையை எடுத்தாள்.

"ஏய், மீனா, மீனா, இதை ஏன் பிரிக்கறே! இதெல்லாம் சாமி கும்பிடக் கொண்டு போறம்டி! எடுக்காதேங்கறேன்" பாட்டி கூப்பாடு போட்டும் அவள் கேட்பதாக இல்லை. மூட்டைக்குள்ளிருந்த சீப்புப் பழத்தை எடுத்துக் கொண்டாள்.

"ஏய், மீனா, நா சொல்லிட்டே இருக்கேன். எடுக்கறியா?" அதட்டவும், மீனாவுக்கு அழுகை வந்தது. உதடு கோணி முகம் நகங்கியது.

"கலா, இந்தப் பொண்ணைப் பாரு. நா அப்பவே பிடிச்சு தலைப்பாடா அடிச்சுகிட்டேன். 'இதை ஜன்னலை விட்டு இறக்காதே'ன்னு. கேட்டாத்தானே. சாமி படையலுக்குக் கொண்டு போற பழத்தை எவனுக்கோ..."

அதற்குப் பிறகு சொல்ல முடியாமல் வாய் பொத்தினாள். கோபத்தில் எதாவது செஞ்சிட்டான்னா?

"மீனா பழத்தை பைக்குள்ள கொண்டு வை. மெட்றாஸ் வந்ததும் இவருக்கு வேற எதாச்சும் வாங்கித் தரலாம்!" கதிரேசன் நயமாகச் சொல்லியும், அவள் வைக்கவில்லை.

"சாமிக்கு வைக்கறதை, நாம திங்கறோம் இல்லே!"

"இன்னும் சாமிக்கு நாம வைக்கலியே!"

"வெச்சா மட்டும் சாமியா திங்கப் போறது அப்பா, பிள்ளையார் சாமிக்கு கொழக்கட்டை வெச்சம், அதை சாமியா தின்னாரு. நாமதானே தின்னோம்! இந்தப் பழத்தைச் சாமி திங்காதுப்பா! பொம்மை எங்கியாவது தின்னு[illegible]? பாண்டித்துரைக்கு ரொம்ப பசியா இருக்காம்! பழத்தைக் குடுக்கறேம்ப்பா!" - மனிதர்களில் நல்லவர், கெட்டவர் என்று பேதம் பார்க்காத பருவம் பேசியது.

மௌன சாமியாக இருந்த தாத்தா, முதன் முறையாக வாய் திறந்தார். "குடும்மா! குழந்தை குடுக்கறேங்குது! தடுக்காதீங்க! சாமி கும்பிடறது எதுக்கு? நல்ல கொணம் வரணும்னுதானே! தடுக்காதீங்க! அவன் யாரா இருந்தா, என்ன, பசி எல்லாருக்கும் ஒண்ணுதான்!"

# தமிழில் தவறுகளை அறிவோம்

## டாக்டர். தி. முத்து-கண்ணப்பர்

அத்திம்பேர்; அம்மாஞ்சி; ஆத்தில்:

"அத்திம்பேரும் அம்மாஞ்சியும் ஆத்தில் பேசிக்கொண்டிருக்கிறார்கள்." என்று சிலர் சொல்வதைக் கேட்டிருப்பீர்கள். இந்த 'அத்திம்பேரும்' 'அம்மாஞ்சியும்' அழகான தமிழ்ச் சொற்கள். பேச்சுவழக்கில் அவை அப்படித் திரிந்துள்ளன. அவ்வாறே 'ஆத்தில்' என்னும் சொல்லும்.

அத்தை+அன்பர் = அத்தையன்பர் – அதாவது அத்தையினுடைய கணவர். 'அத்தையன்பர்' என்று சற்று விரைவாகப் பேசினால்கூட 'அத்திம்பேர்' என்றுதான் ஒலி வரும். அவ்வாறே 'அம்மான்+சேய்' என்பது அம்மாஞ்சியாகப் பேச்சுவழக்கில் உலவுகிறது. அதாவது அம்மான் என்பது (தாய்)மாமன். சேய் என்றால் பிள்ளை. எனவே அம்மான் சேய் – மாமன் மகன் என்று பொருள்படும். 'அகம்' என்பது 'வீடு' என்பதன் நல்ல தமிழ்ச்சொல்.

'இல்லாள் அகத்திருக்க இல்லாதது ஒன்றில்லை' என்பது குறள்.

'அகத்தில்' என்பதன் முதல் எழுத்து 'அ' 'ஆ'வாக நெடிலாகி, இரண்டாம் எழுத்து 'க' மறைந்து 'ஆத்தில்' எனக் கூறப்படுகிறது. 'அகத்தில்' என்பதைச் சற்று விரைவாக, அவசரமாகக் கூறும்போது, 'ஆத்தில்' என்னும் உச்சரிப்புத் தோன்றுவதை உணரலாம். இப்படிப் பல சொல்கள் பேச்சுவழக்கில் உருமாறிப் பொருள் என்னவென அறியவே முடியாமல் இருக்கின்றன. சற்றுச் சிந்தித்தால் அவற்றின் உண்மை வடிவும் பொருளும் விளங்கும். 'சிந்தனை செய் மனமே' என்று மனத்துக்கு அறிவுறுத்துவோம்; உண்மையை அப்போது உணர்வோம்.

அறுவடை:

தைமாதம் முதல் நாள் பொங்கல் திருநாள். மார்கழி மாத முடிவில் வயல்களில் உள்ள பயிர்; அறுவடை முடித்துப் போரடித்து நெல்மணிகளைப் பிரித்துக் குவித்துத் தைப்பொங்கல் கொண்டாடுகிறோம். நெல் 'அறுவடை' என்றுதான் பரவலாகச் சொல்கிறோம்; எழுதுகிறோம். அந்தச் சொல் சரியானதன்று. அது அறுவடை அன்று; அறுவிடை என்பதுதான் உண்மையான, சரியான சொல். அறுவடை என்றால் 'அறுக்கின்ற வடை' என்றல்லவா பொருள்படும்? நெல்லிலிருந்து எப்படி வடை கிடைக்கும்? எனவே 'விடை' என்பதுதான் சரியானது (அறுவிடை). 'விடை' என்றால் விடுத்தல், பிரித்தல், வேறாக்குதல் என்னும் பொருள்களைக் குறிக்கும். தாள் முற்றிக் கதிர்மணிக்கொத்து தலைசாய்ந்துப் பதமானதும், அதனை அறுத்துப் பிரித்து வேறாக்கி விடுகிறார்கள். ஆதலால் அது 'அறுவிடை' தான். எப்படியோ 'விடை' அறுபட்டு விடைபெற்றுக் கொண்டு போய்விட்டது. அங்கு 'வடை' வந்து ஆட்சி செய்கிறது. இப்போது 'அறுவிடை' எடுபடுமா? ஏதோ வடிவினைச் சுட்டிக் காட்டுகிறோம். ஏற்பவர் ஏற்கட்டும்!

உடன்படிக்கை:

இச்சொல் 'ஒத்துக்கொள்ளல்', 'இணங்குதல்', 'ஏற்றுக்கொள்ளல்' என்னும் பொருள்களில் வழங்கப்படுகிறது. சிந்தித்துப் பார்த்தால் அது தவறு என்பது புரியும். அதன் உண்மையான – சரியான வடிவம் 'உடன்படுகை'. உடன்படுதல், உடன்பாடு என்றால்தானே 'இணக்கம்', 'சம்மதம்' என்னும் பொருள்களைக் குறிக்கும். இனி 'உடன்படுகை'யென்றே திருத்தி எழுதுவோம்; பேசுவோம்.

குற்றச்சாட்டு:

'குற்றம் சாட்டுதல்' என்னும் சொல் 'பழி சுமத்தல்' என்னும் பொருளில் பயன்படுத்தப் படுகிறது. அது குற்றம் 'சாட்டுதல்' அன்று; குற்றம் 'சார்த்துதல்'. ஒருவர்மேல் பழியை, குற்றத்தைச் சார்த்துதல். குற்றத்தை அவர்மேல் பொருத்துதல் – ஏற்றுதல் என்பதுதானே பொருள்? 'சாட்டு', 'சார்த்து' என மருவிக் குற்றச் சாட்டாகிவிட்டது. எனவே, 'குற்றம் சாட்டுவது' குற்றம்; 'குற்றம் சார்த்துவதே' சரியானது.

தகப்பன்:

தந்தையைத் தகப்பன் என்று சாதாரணமாகச் சொல்கிறோம்; எழுதுகிறோம். ஆனால், அதன் உண்மை வடிவம் 'தமப்பன்' (தம்+

அப்பன்) என்பதே. தமப்பன் என்பது திரிந்து தகப்பனாகிவிட்டது. 'தகப்பன்' பெருவழக்காகி விட்டது. இதனை மாற்றல் அரிது; தேவை யற்றதுமாகும்.

**தெரிந்தெடுத்தல்,தேர்ந்தெடுத்தல்:**

இவ்விரு சொற்களும் வெவ்வேறு பொருள் களை உணர்த்துவன. அண்மைக்காலம் வரை இவ்விரண்டும் ஒரே பொருள் தரும் சொற் களாகவே பயன்படுத்தப்பட்டு வந்தன.

'தெரிந்தெடுத்தல்' என்றால் பல பொருள்கள் அல்லது பல பெயர்கள், சொற்கள் முதலிய வற்றில் ஏதேனும் உரிய ஒன்றை அல்லது சிலபலவற்றைத் தெரிந்து எடுத்தல் (பொறுக்கி எடுத்தல்) என்று பொருள்படும்.

ஆனால் 'தேர்ந்தெடுத்தல்' என்றால் பெரும் பாலானோர் கருத்துப்படி, குறிப்பிடப்படுதல் என்பது பொருள். ஆங்கிலத்தில் 'selection' அல் லது 'select' என்பவற்றின் பொருள்தான் தெரிந் தெடுத்தல் அல்லது 'தெரிந்தெடு' என்பன.

'Election' என்பதன் தமிழ்ச்சொல்தான் 'தேர்ந் தெடுத்தல்' என்பது. 'Elect' என்றால் தேர்ந்தெடு என்பது பொருள். தேர்தலில் போட்டியிடுப வர்களையும், நாம் சிந்தித்துத் தெரிந்தெடுத்து வாக்களித்தால் நாடு நன்றாக இருக்கும்!

**தோப்புக்கரணம்:**

இதன் சரியான சொல் 'தோற்புக்கரணம்'. தோப்புக்கரணம் என்பது 'தோப்பு+கரணம்' - என்றுதானே பகுபதமாகப் பிரியும். அப்படி யானால் பொருளே மாறிவிடுமல்லவா? 'தோப்பு' என்பது 'சோலை'. 'மரங்கள் பல நெருங்கியுள்ள இடம்' என்றுதானே பொருள் தரும்? 'தோப்புக்கரணம் என்றால் தோப்பில் - சோலையில் போடுகின்ற கரணம். ஒருவர் தவறு செய்தால் சிறு தண்டனையாக இந்தத் தோற்புக்கரணம் போடச் சொல்வார்கள். கைகளால் காதுகளைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து எழுவதைத்தான் பொதுவாகத் தோற்புக்கரணம் என்று சொல்கிறார்கள். செய்த தவற்றுக்கு அல்லது வேண்டியதைச் செய்யாமைக்கு, தோல்வியுற்றதற்குக் கொடுக் கப்படும் தண்டனை இது. ஆகையால் 'தோற்புக் கரணம்' என்று சொல்வதுதான் சிறந்தது.

**நாலாபக்கம்:**

'நாலாபக்கமும் பார்த்துப் பேசு; நட' என்றுதான் பொதுவாகப் பேசுகிறோம்; எழுது கிறோம். இது தவறு. 'நாலு பக்கம்' என்பதுதான் சரியான சொல். எப்போதும் நாலு பக்கமும் பார்த்துப் பேசுவோம்; நடப்போம். அது ஆபத் தைத் தடுக்கும்.

**புழக்கடை - புறக்கடை:**

வீட்டின் பின்புறத்தைப் 'புழக்கடை' என்று வழங்குகிறார்கள். அது சரியன்று. 'புழைக் கடை' என்பதுதான் சரியான சொல். 'உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்' என்கிறது திருப்பாவை. 'புறக்கடை' என்று கூறுவதும் சரியே. வீட்டின் பின்புறத்தில் உள்ள இடம் ஆத லால் அதனைப் 'புறக்கடை' என்று கூறுவதும் பொருத்தமானதே. ஆதலால் 'புழைக்கடை' என்றும் 'புறக்கடை' என்றும் கூறலாம்; எழுத லாம்.

**போக்கிலி - போக்கிரி:**

'போக்கிலி' என்பதுதான் சரியான சொல் (போக்கு+இலி). 'போக்கு இல்லாதவன்', 'கதியற்றவன்', 'நாதியற்றவன்' என்னும் பொருள்களையுடையது. இச்சொல் 'போக்கிரி' என்றே பேச்சு வழக்கிலும்,எழுத்து வழக்கிலும் பயன்படுத்தப்படுகிறது.

போக்கு இல்லாதவன், கதியற்றவன் என்னும் பொருள்களில் இச்சொல் பயன்படுத்து வதற்குப் பதிலாக 'முரடன்', 'பிடிவாதக்காரன்', 'துட்டன்' என்னும் பொருள்களில்தான் இப் போது பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது. பொருளே மாறி விட்டது. எனவே, இதனை உணர்ந்து உரியவாறு பயன்படுத்துதல் வேண்டும்.

**கொடை**

நாங்கள்கூட
மயிலுக்குப்
போர்வை கொடுப்போம்-
முல்லைக்குத்
தேர் கொடுப்போம்-
அவற்றிற்கெல்லாம்,
ஒட்டுப்போடும்
உரிமை மட்டும்
இருந்து விட்டால்!

— ஜெ. சுந்தரம்

அண்ணா சாலை என்று இப்போது அழைக்கப்படும் மவுண்ட் ரோடில் விக்டரி ஹவுஸ் இருந்த இடம்.

சென்னையில் இந்தக் காட்சிகளை இப்போது பார்க்க முடியாது.



திருவல்லிக்கேணி [illegible] பஜார்

☆ திருவல்லிக்கேணி பெரிய மசூதி

☆ கடற்கரை அருகே உள்ள
அஷ்டலட்சுமி திருக்கோயில்



☆ ஓவியர் எஸ். காந்தனின்
பார்வையில் இன்றைய சென்னை
மாநகரத்தில் சில பகுதிகள்

☆ திருவல்லிக்கேணி அருள்மிகு
பார்த்தசாரதி கோயில் கோபுரம்,
குளக்கரை

☆ சாந்தோம் சர்ச், சாலை



# சேவை

இயலாதவர்க்கு செய்யும் உதவியை உலகம் சேவையாக அறியும். மனித வாழ்வில் சிறப்பான இடம் சேவைக்குரியது. அன்னைக்கு சேவை செய்ய விழைபவர் பலர் ஆசிரமம் வந்து கொஞ்சநாள் தங்கி, ஏதாவது ஒரு டிபார்ட்மெண்டில் வேலை செய்வதுண்டு. அன்னைக்கு செய்யும் வேலை ஆன்மீக சேவையாகும். நாம் நம் ஆன்மாவுக்கு செய்யும் நல்லதாகும். நம்மிடம் அன்னை "சேவை"யாக விரும்புவது ஒன்றுண்டு.

சோம்பல், கர்வம், பொறாமை, குழப்பம், அவசரம் போன்ற பல குணங்கள் பல அளவில் நம்மிடம் உண்டு. சோம்பலை சுறுசுறுப்பாகவும், கர்வத்தை அடக்கமாகவும், பொறாமையை பெருந் தன்மையாகவும், குழப்பத்தை தெளிவாகவும், அவசரத்தை பொறுமையாகவும் மாற்றலாம். அம்மாற்றம் திருவுருமாற்றமாகும்.

எந்த ஒரு குறையையும் அதற்குரிய நிறைவாக அன்னை அருளினால் திருவுருமாற்றமடையச் செய்வதை அன்னை தனக்கு செய்யும் மகத்தான சேவையாகக் கருதுகிறார். அதை பன்முறையும் வற்புறுத்தி அன்பர்களிடம் கேட்டிருக்கிறார் என்பதால் நாம் அதை மேற் கொள்ளுதல் அருளுக்கு பாத்திரமாவதாகும்.



# வீடியோ விளையாட்டுகள்!



முதன்முதல் வீடியோ விளையாட்டு 1970ஆம் ஆண்டு பாங்க் (Pong) என்ற பெயரில் தோன்றியது. 1979இல் வீடியோ விளையாட்டு முன்னேறி 'விண்வெளி முற்றுகையாளர்கள்' என்ற பிரசித்தமான விளையாட்டு உருவாயிற்று. 1980ஆம் ஆண்டில் 'பாக்-பான்' வீடியோ விளையாட்டு மிகவும் பிரசித்தமாக விளங்கியது. வீடியோ விளையாட்டுக் கருவிகள் 1981ஆம் ஆண்டில் 27 மில்லியன் ஆக உயர்ந்தது என்றால் அதன் பிராபல்யத்தை உணரலாம்.

இந்த வீடியோ விளையாட்டுகளுக்குப் பெற்றோரிடமிருந்து எதிர்ப்புக் கிளம்பியது. ஏனெனில் இளம் சிறுவர் சிறுமியர்கள் தங்கள் பொழுதில் பெரும் பகுதியையும் பணத்தையும் இந்த விளையாட்டில் செலவழித்ததை விரும்பவில்லை. அமெரிக்காவில் பல சமூகத்தினர் தங்கள் இளம் குருத்து இப்படி வீடியோ பார்லாகளில் அதிக நேரம் செலவிடுவதைக் கட்டுப்படுத்தி உள்ளனராம்!

வீடியோ விளையாட்டுகளில் கார்ட் விளையாட்டு, போர்டு விளையாட்டு, வார்த்தை விளையாட்டு என்று பலவகை உண்டு. இளம் ஆட்டக்காரர்கள் வீடியோ கருவிகளில் பட்டன்களை அமுக்கியோ, 'ஜாய்ஸ்டிக்' போன்ற 'லீவர்'களை இயக்கியோ விளையாடுவார்கள். இந்த வீடியோ விளையாட்டுக் கருவிகள் பணத்தைப் போட்டு ஆடப்படுவது உண்டு. இதனால்தான் முதியவர்களிடமிருந்து எதிர்ப்பு கிளம்பியது! வீடியோ விளையாட்டில் ஒருவர் மட்டும் ஆடுவதற்கும், மற்றும் இன்னொரு போட்டியாளரோடு போட்டியிடுவதற்கும் வசதி உண்டு.

வீடியோ விளையாட்டில் ஓர் ஆட்டக்காரர் மின்சார முறையில் எழும் உருவங்களை வீடியோக் கருவியிலுள்ள திரையில் கண்ட்ரோல் செய்து இயக்க வைக்கும் மகிமைதான் இளம் குருத்துகளை ஆசையோடு இந்த விளையாட்டில் ஈடுபட வைக்கிறது.

வீடியோ விளையாட்டில் அநேகமாக ஒரு விளையாட்டை இரண்டு நிமிடங்களில் முடித்து விட இயலும். ஆனால் இதில் தலைசிறந்த ஆட்டக்காரர்கள் மணிக்கணக்கில் இழுத்துச் செல்லும் வல்லமை பெற்றவர்களாக இருப்பார்கள். ஃ





# மந்திரப் பானை



**நீ**ண்ட நாள்களுக்கு முன்னால் ஒரு சிறிய பெண் வாழ்ந்தாள். ஒருநாள் அந்தச் சிறுமி காட்டுக்குச் சென்று காட்டுப் பழங்களைச் சேகரிக்கச் சென்றாள். காட்டில் சிறுமி ஒரு மூதாட்டியைச் சந்தித்தாள்.

அந்த மூதாட்டி தித்திப்புக் கஞ்சி தயாரித்துத் தரும் மந்திரப் பானையைக் கொடுத்தாள். சிறுமி அவளுக்குக் காட்டுப் பழங்களைத் தந்தாள்.



"சின்னப்பானையே! கொதிக்கத் தொடங்கு!" என்று மந்திரத்தைச் சிறுமி சொன்னதும், அவளுக்கு வேண்டிய அளவு தித்திப்புக் கஞ்சியைத் தயாரித்துத் தந்தது! அது தயாரிப்பது நிற்க வேண்டுமானால், "சின்னப் பானையே! நிறுத்து!" என்று சொல்ல வேண்டும்.

சிறுமி தனக்கு மந்திரப்பானை தந்த மூதாட்டியை வாழ்த்தி விட்டு வீடு திரும்பினாள். அன்னையும் சிறுமியும் வேண்டிய அளவு 'தித்திப்புக் கஞ்சி' பெற்றுத் திருப்தியோடு வாழ்ந்திருந்தனர்.

ஒருநாள் சிறுமி தன் தோழிகளைப் பார்க்கச் சென்றபோது அன்னை, "சின்னப்பானையே! கொதிக்கத் தொடங்கு!" என்று வேண்டினாள். ஆனால் மந்திரப் பானை தித்திப்புக் கஞ்சி தயாரிப்பதை நிறுத்துவதற்கான மந்திரத்தை அன்னை மறந்துவிட்டாள்! ஆகவே வீடு முழுவதும் தித்திப்புக் கஞ்சி, வீடு நிறைந்து அந்தத் தித்திப்புக் கஞ்சி ஆறாகப் பெருகி ஓடியது. அக்கிராம மக்கள் மிகுந்த மகிழ்ச்சியோடு அதை உண்டு மகிழ்ந்தனர்.

ஊர் முழுக்கத் தித்திப்புக் கஞ்சி பெருகி ஓடுவதைக் கண்டு சிறுமி வீட்டுக்கு ஓடிவந்து மந்திரத்தைச் சொல்லி நிறுத்தினாள்! இப்பொழுது தினமும் அந்தத் தித்திப்புக் கஞ்சிக்காக அக்கிராம மக்கள் சிறுமியின் வீட்டில் கூடி நிற்கிறார்கள். சிறுமியும் அவர்கள் பசியைப் போக்கி விடுகிறாள். கிராம மக்களின் நன்றி அச்சிறுமிக்கு அளவற்றுக் கிடைக்கிறது! ●

# பிர்லா மியூசியம்!

**ரா**ஜஸ்தானின் பாலைவனப் பகுதியில் பிலானி நகரம் உள்ளது. இங்கேதான் இளம் விஞ்ஞானி மாணவர்களுக்கான . பிர்லா தொழில்நுட்ப விஞ்ஞான கழகம் அமைந்துள்ளது. இந்தத் தொழில்நுட்பக் கல்லூரி பல தேர்ந்த விஞ்ஞானிகளையும் இன்ஜினீயர்களையும் உருவாக்கித் தருகிறது. இந்த பிலானி தொழில்நுட்பக் கல்லூரி வளாகத்தில்தான் பிர்லா மியூசியம் அமைந்திருக்கிறது. 1954 இல் முதன் முதலில் உருவாக்கப்பட்ட விஞ்ஞான, தொழில்நுட்ப மியூசியம் இது! இந்தப் பிர்லா



மியூசியத்திலுள்ள நவீன கருவிகளைப் பார்வையாளர்கள் இயக்கி மகிழ வாய்ப்பு உண்டு. ஒரு பட்டனை அமுக்கி, மனிதன் நிலாவில் நடந்த கதையைப் படமாகப் பார்த்து மகிழலாம். ஒரு ரோபோ கருவி உங்களுக்கு வணக்கம் கூறி வரவேற்கும். இங்குள்ள நவீன கருவிகளை இந்நாட்டிலுள்ள விற்பன்னர்களே வடிவமைத்தது என்பது பெருமைக்குரிய விஷயம். பிர்லா மியூசியத்தில் துணி வகைகள், பழைய இந்திய ராணுவக் கருவிகள், சிற்பப் பகுதி கண்கொள்ளாக் காட்சியாகும். ●

# உலகின் முதல் மிருக சரணாலயம்!

உலகத்தில் முதன் முதலாக இலங்கை அரசன் தேவனாம் பியடிசா கிறிஸ்துவுக்கு முன் மூன்றாம் நூற்றாண்டில் மிருக சரணாலயமும் பல மரங்கள் இருப்பிடமும் மஹிந்தலையில் உண்டாக்கினார். இரண்டாயிரம் வருடங்களுக்கும் பிறகும் இந்தச் சரணாலயம் பார்க்கக் கண்



கொள்ளாக் காட்சி ஆகும். ஆசியாவிலேயே சிங்கராஜா மழைக்காடு பிரசித்தமான வனப்பிரதேசம். இந்தக் காட்டில் 170 வகையான மரங்கள் இருப்பது அரிய காட்சி.

இலங்கையில் உலகில் காணக் கிடைக்காத மிருக வகைகள் உண்டு. குமணா விரவிலா என்ற இரண்டு பறவை சரணாலயங்களும் இருக்கின்றன. மூடிய ஜீப்களில் பயணம் செய்து சிறுத்தைப் புலி, யானை, மான், கரடிக் கூட்டங்களைக் கண்டு ரசித்து மகிழலாம்! ●

## மூளை தேவையா?

ஒரு ராணுவ அதிகாரி ஒரே தலைவலி என்று ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். அவருக்கு மூளை ஆபரேஷன் செய்வதென்று சர்ஜன்கள் தீர்மானித்தனர்.

ஆபரேஷன் தியேட்டருக்கு ராணுவ அதிகாரி அழைத்துச் செல்லப்பட்டு, அவரது மூளையை எடுத்து மேஜையின் மேல் வைத்திருந்தனர்! மூளைப் பகுதியைச் சர்ஜன்கள் செப்பனிட்டுக் கொண்டிருந்தபோது ஒரு ராணுவக் காரியாலயத் தூதுவன் வந்து, ராணுவ அதிகாரிக்கு பிரிகேடியர் ஜெனரலாகப் பதவி உயர்வு பெற்றிருப்பதாகத் தெரிவித்தான். ராணுவ அதிகாரி செய்தி கேட்டு, ஆபரேஷன் அறையை விட்டு நடக்கத் தொடங்கினார்!

அப்பொழுது சர்ஜன்கள், "உங்களுக்கு மூளையைத் தலையில் இன்னும் பொருத்தவில்லையே! கொஞ்சம் பொறுங்கள்".

"எனக்குத் தேவையில்லை! நான் ராணுவ ஜெனரல்!"



## அரும்புகளுக்கு ஓர் அரசரின் கதை!

ஏதேச்சையாக ஒரு சிறுவன் தவறு செய்தால் அவனுக்கு வேண்டிய உபசரணை கிடைக்கும். ஆனால் உபசாரம் வேண்டித் தவறு செய்தால்?

சின்னஞ்சிறு வயதில் பள்ளிப் பருவத்தில் வானதி திருநாவுக்கரசு ஒருநாள் மழையில் நனைந்து விட்டு வீடு திரும்பியதும், அன்னை அவரைப் பரிவுடன் தலையை உலர்த்தி, கம்பளி உடை அணிவித்துப் போஷித்தார்..

இந்த உபசரணையில் மகிழ்ந்த சிறுவன் திருநாவுக்கரசு தானாகவே மறுநாள் குளத்தில் குளித்து விட்டு வந்து நடுங்கியபோது அன்னை அவரைக் கோபித்துக் கொண்டதோடு உதையும் தந்தார்! வாழ்க்கையில் இளம் வயதில் கிடைத்த இந்தப் பாடம் வானதிக்கு உழைப்பில் உயர்ந்து பதிப்பகத் துறையில் ஒரு சிறந்த திறமைசாலியாகத் திகழ்வதற்கு உதவியது.

இப்படிப் பதிப்பகத் துறையில் தலைசிறந்து விளங்கும் வானதி திருநாவுக்கரசுவின் வாழ்வை 'அரும்புகளுக்கு ஓர் அரசரின் கதை' என்ற நூலை எழுதி, குழந்தை எழுத்தாளர் சங்கத்தில் தங்கப்பதக்கம் பெற்றார் மயிலாடுதுறை கவிஞர் வெற்றிவேலன்.

## பாசம்!

ஆசிரியர் : நான் வழியில் ஒரு மனிதன் கழுதையை அடித்துக் கொண்டிருந்ததை நிறுத்தினால் அது எதனைக் காட்டுகிறது!

பையன் : உங்கள் சகோதர பாசத்தை, ஸார்!




### நீங்களே வரையலாம்!

வர்ணப் பென்சில்களைக் கொண்டு நீங்களே இந்தப் படத்தை அருகிலுள்ள வெற்றிடத்தில் வரைந்து பாருங்களேன்!



# விளையும் பயிர்!



அஸ்திவாரம் பலமாகப் போட்டால்தான் கட்டடம் உறுதியாக இருக்கும். விளையும் பயிருக்கான பயிற்சியும் போட்டியும்தான் எதிர்காலத்தில் தலைசிறந்த ஆட்டக்காரர்களை உருவாக்க இயலும்.

'ஹிந்து' ஸ்தாபனத்தில் வெளியாகும் விளையாட்டுப் பத்திரிகையான 'ஸ்போர்ட் ஸ்டார்' சமீபத்தில் 13 வயதுச் சிறுவர்களுக்கான கிரிக்கெட் போட்டி நடத்துவதற்காகக் கிட்டத்தட்ட லட்ச ரூபாய் நிதி உதவி இளைஞர்களை ஊக்குவித்தது.

இந்த இளைஞர்களுக்கான கிரிக்கெட் போட்டியில் தமிழ்நாடு, ஹைதராபாத், ஆந்திரம், கோவா, கேரளம், கர்நாடகச் சிறுவர்கள் கடுமையாகப் போட்டியிட்டனர். இறுதியில் தமிழகக் கிரிக்கெட் குழுவும் ஹைதராபாத் குழுவும் மோதின.

'ஸ்போர்ட் ஸ்டார்' ஆதரவு பெற்ற கிரிக்கெட் போட்டியில் தமிழகக் கிரிக்கெட் குழுவினர் வெற்றி வாகை சூடினர்.

தமிழக வெற்றிக்கு வித்திட்டவர்களில் பி.எஸ். உயர்நிலைப் பள்ளி மாணவன் விக்ரம் சிறப்பாக ஆடினான். அவன் எட்டாவது வகுப்பு மாணவன். வித்யா மந்திர் உயர்நிலைப் பள்ளி மாணவன். பி. மாதவ் குமாரும் தன் திறமையான ஆட்டத்தினால் வெற்றிக்கு உதவினான். முன்னாள் ரஞ்சிக் கோப்பை ஆட்டக்காரர் பி.வி. ஜயகுமாரின் புதல்வன் இவன். வலது கையினால் பந்து வீசுவதும் இடது கையினால் மட்டை பிடிப்பதும் இவனது தனிச் சிறப்புகள். இவனுக்குப் பயிற்சி அளித்த 'கோச்' எல்.எல். பஞ்சாபகேசன். இவனது ஆதர்ச ஆட்டக்காரர், சச்சின் தெண்டுல்கர்!

வட ஆர்க்காடு மாவட்டம் அரசு உயர்நிலைப் பள்ளி மாணவன் வேல்முருகன்தான் தமிழகக் குழுவின் காப்டன். தமிழக வெற்றிக்குப் பாடுபட்டதில் முக்கிய பங்கு இவனுக்கு உண்டு. இவன் அருமையான லெக் ஸ்பின்னர். இவனது சிறப்பான பந்து வீச்சில் நான்கு விக்கெட்டுகள் பலி ஆனது வெற்றியை நிர்ணயித்தது.

முன்னாள் இந்திய கிரிக்கெட் காப்டன் ஸ்ரீகாந்த் இந்த இளம் சிறுவர்களுக்குப் பரிசு வழங்கினார். 'ஸ்போர்ட் ஸ்டார்' நிறுவனம் வழங்கிய சிறப்பு ஆட்டக்காரர் பரிசு மாணவன் விக்ரமுக்கு வழங்கப்பட்டது. விளையும் பயிர்களான தமிழக இளைஞர்களுக்கு வாழ்த்துகள்!

நன்றி: ஸ்போர்ட் ஸ்டார்

## அதிசய விஞ்ஞானி!



கா லுறைகளும், தேனும், தேங்காய் நாரும், சவுக்காரமும் விற்றுப் பணம் சம்பாதிக்க எண்ணினார் அந்த மனிதர். அவரது முயற்சிகளில் தோல்வி கண்டார். ஆனால் உடல் நலம் கெட்டும் அவரது விஞ்ஞான ஆராய்ச்சியைக் கைவிடவில்லை! தொலைக்காட்சி என்ற அற்புதத்தைக் கண்டு பிடித்த விஞ்ஞானி ஜான் பெயர்டுதான் அந்தத் தோல்வியாளர். அவர் ஸ்காட்லாந்து தேசத்தவர். நாலு வீடுகளைத் தொலைபேசியால் இணைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கையில் பலத்த காற்றில் கம்பிகள் அறுந்து ஒரு குதிரை வண்டிக்காரர் ஒருவரைப் பாதித்தது. அவர் ஆர்ப்பாட்டம் தொடரவே ஜான் பெயர்டுக்குத் தண்டனை கிடைத்துவிடுமோ என்ற பயம் எழுந்தது. தொலைக்காட்சி கண்டு பிடித்தபின் கோபமாகப் பல நாள்கள் அதை நம்ப வைக்க அலைந்திருக்கிறார் ஜான் பெயர்டு.

ரூ. 10,000 பரிசு பெற்ற நாவல்

# 1




மரத்தாலான பாளங்களைப் பதித்த மாடி வராண்டாவில் குதிகால் செருப்புகள் ஓசைப்பட நடந்து கொண்டிருந்தாள் அவள். பெயர் அனாமிகா.

இருட்டும் விலகாத பொழுதும் விடியாத கங்குல் நேரம். நிலவைத் தொலைத்த அமாவாசை இருட்டு. நட்சத்திரங்கள் சிந்தும் கஞ்சத்தனமான ஒளியினால் அனைத்துக் காட்சிகளும் சில்-அவுட்டாகத் தெரிந்தன.

நடந்தவளின் நடை நின்றது. மரத்தாலான கைப்பிடிச் சுவரைப் பற்றிக் கொண்டு கண் கொள்ளு மட்டும் பார்த்தாள்.

சற்றே தொலைவிலிருந்த கடலில் அலைகளின் ஓசை மட்டும் விட்டு விட்டு ஓயாமல் கேட்டுக் கொண்டிருந்தது.

பார்த்தாள்.

எங்கோ கடலில் போகும் கப்பல் ஒன்று சிக்னல் என்கிற பெயரால் கண் சிமிட்டிக் கொண்டிருந்தது.

அந்த இருட்டுச் சூழ்நிலையிலும்கூட அவள் முகத்தின் சோகத்தை உணர முடிந்தது.

நிமிர்ந்தவள் மீண்டும் பின்னங் கைகளைக் கட்டிக் கொண்டு மீண்டும் உலாவத் தொடங்கினாள். தூக்கமில்லாத இரவின் தளர்ச்சி அவள் கால்கள் பின்னுவதில் தெரிந்தது. சோர்வு தாக்கியிருந்தது.

இப்படிப்பட்ட சோர்வு இப்போதெல்லாம் அடிக்கடித் தாக்குகிறது.

நடந்தாள்.

வீட்டைச் சுற்றிலும் - சண்டை போட்டுக் கொண்ட குழந்தைகள் போலப் பல திக்குகளைப் பார்த்து நிற்கும் தனித்தனி வீடுகள்.

தனித்தனியே குடும்பத்தோடு ஒருநாள் வாடகை நூற்று ஐம்பது கொடுத்தால் தாற்காலிகக் குடும்பம் நடத்தும் வசதி கொண்ட காட்டேஜுகள்.

அது ஒரு காலம்! வாங்குவதற்கு ஆளில்லாமல் போன கால கட்டத்தில் இவள் அப்பா வாங்கிப் போட்ட இருபது ஏக்கரா நிலப் பரப்புக்கு நடுவே தனி மரமாகத்தான் இந்த பங்களா கட்டப்பட்டிருந்தது.

இங்கிருந்துதான் தினம் மாட்டு வண்டி ஏறி டவுனுக்குப் போய் படித்து விட்டு வந்தாள். இங்குதான் கல்யாணமும் நடந்தது.

1947 இல் இந்தியாவை விட்டு ஓடும் அவசரத்தில் இருந்த ஒரு பிரிட்டிஷ் என்ஜீனியர் அவசரமாகத் தயாரித்துக் கொடுத்த வரைபடத்தை வைத்து அப்பா நேரடிப் பார்வையில் கட்டிய பங்களா.

உயர உயர விதானம். தூண்கள் தாங்கி நிற்க, நீண்டு படர்ந்திருந்த படிக்கட்டுகளின் உச்சத்தில் கட்டடம் கம்பீரமாக நின்றது. தரையிலும், மாடியிலும் மரப் பலகைகளினால் ஆன தளங்கள். (அந்நிய நடமாட்டமிருந்தால் காட்டிக் கொடுத்து விடும்).

இத்தனை நாள்களாகத் தனிக் காட்டு ராஜாவாக இருந்த அந்த பங்களாவைச் சுற்றிச் சின்னஞ் சிறு குடியிருப்புகள் சமீபத்தில்தான் முளைத்திருந்தன.

*காரணம்? அரசாங்கம்!*

**ராஜேந்திரகுமார்**

தேவைக்கு மேல் இருக்கும் உபரி நிலத்தை அரசு கையகப்படுத்தும் என்ற அரசு நோட்டீஸ் வந்ததும், முதல் வேலையாக இருபது ஏக்கர் நிலத்தைச் சுற்றிலும் பிரமாண்டமான மதில் சுவரை எழுப்பினாள். அவசரம் அவசரமாக நிறைய வீடுகளைக் கட்டி. வாசல் வளைவில் 'தங்க சொர்க்கம் பீச் ரிஸார்ட்' என்று எழுதி வைத்தாள்.

'தங்க' இரட்டை அர்த்தச் சொல். 'தங்கம்' என்றும் சொல்லலாம்; தங்குவதற்கு' என்றும் சொல்லலாம்.

பக்கத்தில் கன்னியாகுமரிக்கு உல்லாசப் பயணம் வரும் பயணிகளுக்குத் தங்குமிடம் என்று பெயர். ஆனால் வரத்தான் ஆள் இல்லை. ஈயோட்ட நேர்ந்தது. ஆனால் -

அரசு வாய் பொத்திக் கொண்டு விட்டது தான் லாபம்.

ஆரம்ப நாள்களில் தனிமையை அறிந்த ஹிப்பிகள் நிறையப் பேர் வந்தார்கள். கஞ்சா பிடித்து, பிறந்த மேனியாகத் திரிந்து, நீச்சல் அடித்து நாறடித்தார்கள்.

பார். ε சகிக்காமல் போலீஸாரை விட்டு துரத்தியடித்து விட்டாள்.

கண்ணியவான்களும் காரில் வந்து தங்குவதுண்டு. கதை டிஸ்கஷன், பாட்டு கம்போஸிங் என்றால் சில இசை அமைப்பாளர்கள் தபேலா, ஹார்மோனியத்துடன் வந்து, வாரம் பத்து நாள் தங்கி, தயாரிப்பாளர் செலவில் தட்டுத் தட்டாக முந்திரிப் பருப்பும், ஆப்பிள் ஜூஸுமாக வாங்கிச் சாப்பிட்டுத் தொந்தியைக் கணிசமாக வளர்ப்பார்கள்.

அவர்களுக்காகவே ரெஸ்டாரெண்ட் ஒன்றும் கட்டியிருந்தாள்.

அநேகமாக மாதத்திற்குப் பாதி நாள் வாங்க ஆளில்லாமல் காப்பி தவிர வேறு எதுவும் செய்யப்படாத ரெஸ்டாரெண்ட். சமையல்காரர்களும் சப்ளையர்களும் தனிச் சமையலைத் தவிர்த்து பங்களாவுக்கே வந்து சாப்பிட்டு விட்டுப் போவார்கள்.

அந்த அளவு ஈயடிக்கும்.

ஆனாலும் அதைப் பற்றி அனாமிகா கவலைப்பட்டதே இல்லை.

காரணம்?

தனிமை அவளுக்குப் பழகிப் போன ஒன்று.

மனம் திரும்பிப் பார்த்தது.

திறந்திருந்த அடுத்த அறைக் கதவு வழியாக தனது கணவர் போன் பேசுவதும் - எழுதுவதுமாகத் தெரிந்தது.

கட்டிலில் கவிழ்ந்து தலையணையைக் கண்ணீரால் நனைத்துக் கொண்டு இருந்தவள் எழுந்து போனாள்.

"மணி ஒண்ணரையாகுதுங்க..."

நிமிர்ந்தவர், மூக்குக் கண்ணாடியை உயர்த்தி உச்சந்தலையில் குந்த வைத்தார்.

"அரை மணிக்கு முன்னால் வாட்ச்சைப் பார்த்தப்ப மணி பதினொண்ணரை. இப்ப பன்னிரண்டு ஆயிருக்கும்னு எதிர்பார்த்தேன். ஒண்ணரை ஆயிடுச்சா? இருக்கும். இருக்கும்... நீ போய் படு. ஒரு போன் பண்ணிட்டு வந்துடறேன்".

"இந்த ராத்திரியில? யாரைத் தொல்லைப் படுத்தப் போறீங்க?"

"ராத்திரியா, முண்டம்! இங்க ராத்திரி. அங்கே - அமெரிக்காவிலே பகல் நேரம்டி. போ. போய்த் தூங்கு. பகல்ல பண்ணினாதான் அவனைத் தூக்கத்தில் இருந்து எழுப்ப வேண்டி வரும். அவசரமான ரெஃபரன்ஸ் ஒண்ணு கேட்கணும். போ. போய்த் தூங்கு".

காத்திருந்து காத்திருந்து தூங்கிப் போனவள், விடியற்காலையில் எழுந்து பார்க்கும்போது அவர் மேஜை மீதே கைகளை மடித்துத் தூங்கிக் கொண்டிருப்பார்.

எழுப்பிக் கைத்தாங்கலாக அழைத்துப் போய் கட்டிலில் படுத்தவரை விட்டு விட்டுக் குளியலறையில் குளிக்கப் போய் விடுவாள்.

சாப்பிடும் நேரத்தில் மட்டும், "என்ன எப்படி இருக்கே?" என்பார் அக்கறையாக. அநேகமான நாள்களில் இவளிடம் அவர் பேசும் பேச்சு இது ஒன்றாகத்தானிருக்கும்.

கோபம் மிகுந்த ஓர் இரவில் கேட்டே விட்டாள்; "மனைவி தேவையில்லாதப்ப எதுக்காக என்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்டீங்க?"

"இதபார் அனாமிகா. நான் நைட் கிளப்புக்கோ, தண்ணியடிக்கவோ போகலை. ஆராய்ச்சிக் கட்டுரை சப்மிட் பண்ணற நாள் நெருங்கிக்கிட்டிருக்கு. தயார் பண்ண வேணாமா?"

தவறிப் போய் சில நாள்களில் நேரத்தோடு நெருங்கி வந்தார். விளைவு?

குழந்தைகள்!

பெரியவன் மகேஷ்குமார். மகள் வினிதா.

குழந்தைகளைப் பார்க்க வந்த அம்மாவிடம் சொன்னாள். 'இனிமே நான் தனி மரமில்லைம்மா. எனக்காக ரெண்டு பிள்ளைங்க எனக்குத் துணை இருப்பாங்க".

அவள் பூரிப்பு அதிக நாள்கள் தாங்கவில்லை. அவர்களுக்கும் இவளுக்கும் இருந்த

உறவு - பத்து மாதம் வயிற்றில்; மூன்று வருஷம் எதிரில்.

பிறகு?

அபூர்வமாக அவரே கூப்பிட்டுப் பேசினார். "இந்தக் கிராமச் சூழ்நிலையில வளர்ந்தா அவங்களுக்கு உலகம் புரியாது. தவிர, குழந்தைகளின் நடமாட்டம் என் ஆராய்ச்சிக்குத் தடை" என்றார். "ஸோ, நான் ஒரு தீர்மானத்துக்கு வந்துட்டேன்".

பகீரென்றது.

"நீங்க என்ன சொல்றீங்க?"

"இந்தச் சூழ்நிலை, இந்தத் தனிமை அவங்களை ரொம்பவும் பாதிக்கும்" தீர்மானமாகச் சொன்னார், "படிப்போட நல்ல ஒழுக்கமும் வரணும். அதனால்..."

"அதனால..."

"அவங்களை ஊட்டி, கொடைக்கானல் ஸ்கூல் அண்ட் ஹாஸ்டலுக்கு அனுப்பிடப் போறேன்" என்றவர் -

அவள் தடுத்தும் கேளாமல் அனுப்பி விட்டார்.

அவள் முயற்சி தோற்றது. மீண்டும் அதே தனி மரமாக ஆகிவிட்டாள்.

"பிரிச்சிட்டீங்க" கத்தினாள், "என்னையும் என் குழந்தைகளையும் பிரிச்சிட்டீங்க. ஏன்?" கதறினாள், "சொல்லுங்க, ஏன்?"

"உன்னாலதான்" விரலால் அவளைச் சுட்டினார்.



"உன்னாலதான் அனாமிகா. உன் தாய்ப் பாசமும், நீ காட்டும் அபரிமிதமான அன்பும் அவங்களைச் சில சமயம் ஆபத்தில் கொண்டு விட்டுடும். கோழைகள் ஆயிடுவாங்க. குழந்தைகளுக்குப் பாசம் எவ்வளவு முக்கியமோ அதே அளவு கண்டிப்பும் அவசியம். அது உன்னால முடியாது".

உறுதியாகச் சொன்னார், "அதுக்கு ஹாஸ்டல்லயே வளரட்டும். இத பாரு. உன் நன்மைக்காகத்தான் சொல்றேன். ஒரே சமயம் இரண்டு பேரையும் உன்னால் சமாளிக்க முடியாது. தவிர, என் ஆராய்ச்சிக்கும் குழந்தைகள் முக்கிய தொல்லையாய் இருப்பார்கள்".

வாய் மூடிக் கொண்டு விட்டாள்.

மீண்டும் கடல் சூழ்ந்த நிலையில் தனித் தீவாகி விட்டாள்.

காத்திருந்தாள். பள்ளிக்கூட விடுமுறை நாள்களுக்காக ஆவலுடன் - ஆசையுடன் காத்திருந்தாள்.

பிள்ளைகள் வரும். கொஞ்சலாம். அவர்களை அழைத்துப் பிக்னிக் போக வேண்டும். அங்கே அவர்களுக்கு இணையாக தானும் சின்னப் பிள்ளையாகி ஓடியாடி விளையாட வேண்டும். காரில் சுற்ற வேண்டும். கம்பளத்தைப் புல்வெளியில் விரித்துப் பேப்பர் தட்டில் கேக், லட்டு, வெல்ல அவல், பருப்பு அடையென்று பறிமாறி ஊட்டி - தானும் தின்று...

கனவு - வெறும் கனவு.

ஒவ்வொரு தடவையும் விடுமுறையில் வீட்டுக்குள் நுழையும்போதே - "ஹாய் மம்மீ" என்ற கையோடு மாடியேறி அப்பாவிடம் போவார்கள்.

"அப்பா... பப்பா... என் பிரண்ட்ஸ் காஷ்மீர் போக ஆசைப்படறாங்க. எங்களையும் கூப்பிடறாங்க. ப்ளீஸ் பப்பா. நாங்களும் போகவா?"

"போயிட்டு வாங்க கண்ணுங்களா. நாலு இடத்துக்குப் போய் வந்தால்தான் பொது அறிவு வளரும். காஷ்மீர்தானே? ஜம்முவில் டாக்டர் தீன் தீன் வாலாவுக்கு போன் பண்றேன். நேரே போய்ப் பாருங்க. அவரே எல்லா ஏற்பாடுகளையும் பண்ணுவார்".

"படகு வீடு?"

"கண்டிப்பா ஏற்பாடு பண்ணச் சொல்றேன்".

"பனிச் சறுக்கு?"

"அது இல்லாமலா? இது பனி ஸீஸன்தான். நிறைய கம்பளி டிரஸ்ஸை மெட்ராஸ்லேயே வாங்கிட்டுப் போங்க" என்றவர், இவள் ஏக்கமாகப் பார்த்துக் கொண்டேயிருக்க - இவளை ஒரு வார்த்தை கேட்காமல் நிறையப் பணம் எடுத்துக் கொடுப்பார்.

"ராத்திரி ரயில்லேயே மெட்ராஸ் கிளம்பறீங்க..."

"இருங்க. வந்த குழந்தைகளை ரெண்டுநாள் கூட இங்கே தங்க விடாம துரத்தாதீங்க".

"நோ மம்மீ... இந்தக் கிராமத்தில என்ன இருக்கு இருந்து பார்க்க? டாடி, ராத்திரியே கிளம்பறோம் டாடி. ப்ளீஸ்..." என்று கொஞ்சி விட்டுக் கிளம்பிப் போய்விடுவார்கள்.

கல்லூரி திறக்க ஒருநாள் இருக்கும்போது திரும்பி வந்து - "பை மம்மீ" என்று சொல்லி விட்டுக் கிளம்பி விடுவார்கள்.

மீண்டும் அவளைச் சுற்றித் தனிமை வயலின் ஓசை கேட்கத் துவங்கும்.

எப்போதாவது போன் பண்ணுவார்கள். "ஹாய் மம்மீ... டாடியைக் கூப்பிடுங்க, சீக்கிரம். பேசணும்".

"கூப்பிடறேண்டி குழந்தே. அவர் வருகிற வரைக்கும் இந்த மம்மீ கிட்ட பேச மாட்டியா? பேசக் கூடாதா?" என்பாள் ஏக்கமாக.

"அய மம்மீ, பேசறது டிரங்க்கால். ஒவ்வொரு விநாடியும் பணம். டாடிகிட்ட பேசவே நேரம் போதாது. கூப்பிடுங்க சீக்கிரம்".

அதற்குள் அவரே வந்து ரிசீவரைப் பிடுங்கிக் கொள்வார். "ஹாய் வினிதா. ஹவ் ஆர் யூ?" என்று ஆரம்பித்துக் கொஞ்ச நேரம் கேட்டு விட்டு - "சரி, நாளைக்கே அனுப்பறேன்" சொல்வார். "நாளை மறுநாள் உனக்குக் கிடைக்கும். ஓ.கே?". என்று ரிசீவரை வைத்துவிட்டு, "பணம் வேணுமாம்" என்பார் பூரிப்பாக.

"காலையில் கொஞ்சம் ஞாபகப்படுத்தேன்" என்று யந்திரத்தனமாகச் சொல்லிவிட்டு நகர -

"இருங்க".

நின்றாலும் திரும்பாமலே, "என்ன?" என்பார்.

"சொல்றேனேன்னு தப்பா நினைச்சுக் காதீங்க".

"சொல்லு".

"தங்கி இருக்கிறது ஹாஸ்டல்ல. சாப்பிடறது மெஸ்ஸில. போக, மாதா மாதம் பாக்கெட் மணி வேற அனுப்பி வர்றீங்க. அப்புறமும் அப்படி என்ன செலவு?"

"எத்தனையோ செலவு இருக்கும். உனக்கென்ன அனாமிகா? என் குழந்தைகள் காரணமில்லாமல் பணம் கேட்காது. அந்த நம்பிக்கை

கி போர்டு தனது ஆட்சிக் காலத்தில் கறுப்பர் பட்டண ஊர்காவல் நிர்வாகத்தைத் (Police Administration) திருத்தியமைத்தான். ஊர் காவலின் தலைவனான பெத்த நாயகனுக்கு இவன் காலத்தில் மதிப்பு உயர்ந்தது. இப்போது பெத்த நாயகன் பேட்டை என்று அழைக்கப்படும் இடம் இவன் பெயரால் ஏற்பட்டதேயாகும். முன்பு நெல் வயல்கள் சூழ்ந்த இவ்விடம் ஊர் காவலுக்காக வேண்டி பெத்தநாயகனுக்கு மானியமாக அளிக்கப்பட்டிருக்கிறது. •

சென்னையில் தற்போது உருவாகிக் கொண்டிருக்கும் பீச்சில் இருந்து மயிலாப்பூர் லஸ் வரை 8.5 கி.மீ தூரத்துக்கான ரயில் பாதை 105 கோடி ரூபாய் திட்டமாகும். இதன் ஒரு பகுதி 2.75 கிமீ தரை மட்டத்தில் இருக்கும். மீதி உயரமான பாலத்தின் மீது இருக்கும். இடையில் 8 நிலையங்கள். பீச்சுக்கும் பார்க்டவுனுக்குமிடையே மூன்று பாலங்கள் அமைக்கப்பட இருக்கின்றது. •

சென்னையின் முதல் பெண் Alder Woman ஆக நியமிக்கப்பட்டவர், 1912 இல் தமிழ் நாட்டின் முதல் பெண் டாக்டரான டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி. •

ஆரூநர் பிக்கட் சிறையில் மாண்டதன் காரணமாக முன்பு ஆங்கிலேய மேலிடத்தாரால் ஒரு விசாரணைக் குழு நியமிக்கப்பட்டது. சென்னை ஆங்கிலக் கழகம் இக்குழுவின் விசாரணைக்கு உதவ ஓர் சட்ட ஆலோசகரை அமர்த்திக் கொள்ள வேண்டியதாயிற்று. இதற்குப் பெஞ்சமின் சுலிவான் என்பவர் தகுதியுள்ளவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தப் பதவியே நாளாவட்டத்தில் மாறி இன்று அரசாங்கத் தலைமை வழக்கறிஞர் (Advocate-General) பதவியாக விளங்குகிறது. ஃ

எனக்கு இருக்கிறது. அதெல்லாம் உனக்கெதுக்கு? காலையில் ஞாபகப்படுத்தறதோட நிறுத்திக்க" என்பார் கடுமையாக.

ஒட்டும் உறவுமில்லாத பற்றற்ற உறவுகள்.

ஒரு தடவை கேட்டே விட்டாள். "எனக்கொரு சந்தேகம், நான் யார்? உங்க மனைவியா? இல்லே, ஆயுள் கைதியா? என்னை ஏன் இப்படித் தனிமையிலே தவிக்க விடறீங்க?"

"நோ டியர்" கையில் பைப்பை ஆட்டியவாறு பேசினார், "என் ஆராய்ச்சிக் கட்டுரையின் பெருமை தெரியாமல் பேசாதே. என் வெற்றி உனக்குப் பெருமையில்லையா?"

"அதுக்காக நான் போரடிச்சுச் சாகணுமா?"

"அதான் தினசரி, வார, மாத பத்திரிகைகளை வாங்கித் தரேனே? படியேன்".

"படித்தால் எனக்குத் தூக்கம் வருகிறது".

"எத்தனை வீடியோ கேசட் வாங்கித் தந்திருக்கேன். பாரேன்".

"எனக்குச் சகிக்கலை. அக்கம் பக்கத்துக் காரங்ககிட்டே போய் பேசிட்டு இருக்கலாம்னா அடுத்த வீடே ஆறு கிலோ மீட்டர்ல இருக்கு".

"ஸோ வாட்? எங்காவது வெளியூர், வெளி நாடுன்னு போய் வாயேன். இங்கென்ன பணத்துக்கா பஞ்சம்?"

"நீங்களும் வருவீங்கதானே? " - ஆவலாகக் கேட்டாள்.

"புரிஞ்சுக்க முயற்சி பண்ணும்மா. ஸ்வீஸ் செமினார்ல என் தீசீஸை சப்மிட் பண்ணணும். தேதி நெருங்குது. அதுக்குள் ஆராய்ச்சி முடியணும். ஏன், தனியாகப் போய் வாயேன். படிச்சவள். உனக்கில்லாத துணிச்சலா? கிழக்கே போ. இல்லே, மேற்கே போ!"

"ஓர் இழவுக்கும் நான் போகலை" என்று சீறிவிட்டுப் போய் கட்டிலில் விழுந்து மணிக்கணக்கில் அழுதாள் - தனியாக.

"காலையில் இருந்து பட்டினி. இந்தச் சாப்பாட்டையாவது சாப்பிடுங்கம்மா" என்ற ராஜாத்தி மேல் எரிந்து விழுந்தாள்.

"போடி அந்தப் பக்கம். எனக்கு ஓர் இழவும் வேணாம், போ!"

சற்று நேரத்தில் அவரே மாடி ஏறி வந்தார். "டியர் அனாமிகா. இதென்ன சின்னப் பிள்ளையாட்டம் அடம் பிடிக்கிறே? என்னோட தீசீஸ் மட்டும் வெற்றிகரமாக முடிஞ்சா, அப்புறம் புற்று நோயைப் புத்தகத்திலேதான் படிச்சு தெரிஞ்சுக்கணும். உன் கணவனால ஒரு பயங்கர நோயிலிருந்து இந்த உலகமே விடுதலையாகப் போகிறதில் உனக்கு மட்டும் பெருமையில்லையா?" சொன்னார், "குழந்தைகளைப் பற்றிய கவலையை விடு. தரமான பள்ளிப் படிப்பை முடிச்சிட்டு வெளி நாட்டுக்குப் படிக்க அனுப்பப் போறேன். இந்த எல்லா வெற்றிகளுக்காகவும் நீ கொஞ்சம் தியாகம் செய்துதான் ஆகணும். விட்டுக் கொடுக்கத்தான் வேணும். கமான், சாப்பிடலாம் வா..." என்று அன்புடன் இடுப்பை வளைத்து அழைத்துப் போனார்.

எல்லாம் பழைய கதை!

இப்போதெல்லாம் அப்படி அழைத்துப் போவதில்லை.

அதற்கு காரணமிருக்கிறது.

(தொடரும்)

வித்வான் வே. லட்சுமணன்

| | | | |
|---|---|---|---|
| செவ் புத | சூரி சுக் | கேது | |
| சனி | கிரக நிலை | | |
| | | | |
| | ராகு | குரு-வ | |

14.4.1994 முதல்
14.5.1994 வரை

# உங்கள் ராசி பலன்

பவ வருஷம், சித்திரை மாதம்
1 ஆம் தேதி முதல் 31 ஆம் தேதி வரை

கிரக மாறுதல்

21-4-1994 முதல் ரிஷப - சுக்கிரன்
22-4-1994 முதல் மேஷ - புதன்
6-5-1994 முதல் ரிஷப - புதன்

கிரக பாதசாரம் : 14-4-1994

சூரியன் - அசுவினி - 1, சந்திரன் - கிருத்திகை - 2, செவ்வாய் - உத்திரட்டாதி - 1, புதன் - உத்திரட்டாதி - 4, குரு - சுவாதி - 4 (வக்ரீ), சுக்கிரன் - பரணி - 3, சனி - சதயம் - 3, ராகு - விசாகம் - 4, கேது - கிருத்திகை - 2.

## மேஷம் : (அசுவினி, பரணி, கிருத்திகை 1 ஆம் பாதம் முடிய)

ராசிநாதன் விரயத்தில் அமர்ந்தாலும் உங்கள் ஜன்ம ராசியை வியாழன் 7 இல் அமர்ந்து நோக்குவதால் அந்தஸ்தும், மதிப்பும், வாழ்க்கை வசதிகளும் திருப்திகரமாகவே இருந்துவரும். பணநடமாட்டம் கூடும். எதிர்பாராத திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கும் இடம் உண்டு. கணவன், மனைவியிடையே கனிப்புறவு கூடும். பயணத்தால் ஓர் எண்ணம் ஈடேறுமானாலும் சிறு சங்கடமும் ஏற்படும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். புத்திசாலித்தனம் காரணமாகவும், நிர்வாகத்திறமை மூலமாகவும் ஓரிரு எண்ணங்களை ஈடேற்றிக் கொள்வீர்கள். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு உற்சாகம் கூடும்.

அலுவலகங்களில் பணிபுரிபவர்கள் ஏற்றம் பெறுவார்கள். இடமாற்றம், ஊதிய உயர்வு, பதவி உயர்வு ஆகியவற்றை எதிர்பார்த்திருந்தவர்களுக்கு அதற்கான சூழ்நிலை கனிந்துவரும். மக்களால் ஓரிரு நன்மைகள் உண்டாகும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்கள் லாபம் தரும். 21 ஆம் தேதி முதல் குடும்பத்தில் இருந்துவந்த சிறுசிறு பிரச்னைகள் அகல ஆரம்பிக்கும். குடும்பநல முன்னேற்றத்திற்கான திட்டங்களிலும் ஈடுபாடு கூடும். புதிய பொருட்களின் சேர்க்கை நிகழும். 22 ஆம் தேதி முதல் வியாபாரிகள் மந்தநிலை விலகி, சுறுசுறுப்பாக நடைபோடுவார்கள். தொழிலாளர்கள், விவசாயிகள் ஆகியோர் தங்கள் குறிக்கோள் நிறைவேறப் பெறுவார்கள். உஷ்ணாதிக்கத்தால் உடல்நலம் பாதிக்கப்படுமாகையால் கவனம் தேவை. மின்சாரம், நெருப்பு, இயந்திரம் ஆகியவற்றின் பக்கம் நெருங்கும்போது பாதுகாப்பு தேவை. பரணி நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது நல்லது. அசுவினி, கிருத்திகை நட்சத்திரக்காரர்களுக்குச் செழிப்பான மாதமிது. ஏப்ரல் 16,18,21,24,30 மே 1,4,5,6,7,8,12,13 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, மேற்குத் திசைகள் நலம் தரும். துலா, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## ரிஷபம் : (கிருத்திகை 2 ஆம் பாதம் முதல், ரோகிணி, மிருகசீரிஷம் 2 ஆம் பாதம் முடிய)

10,11 ஆம் இடங்களில் உள்ள கிரகங்கள் உங்கள் பராக்கிரமத்தை வெளிப்படுத்துவார்கள். துணிவோடும், தன்னம்பிக்கையோடும் செயற்கரிய காரியங்களில் ஈடுபட்டு வெற்றி வாய்ப்பைப் பெறுவீர்கள். தடைகள் என்பவை விலகும். சிவப்பு நிறப் பொருட்கள் ஆதாயம் தரும். உழைப்பு வீண் போகாது. தொழிலாளர்கள், விவசாயிகள் ஆகியோர் தங்கள் திறமைக்குரிய வளர்ச்சியைக் காண்பார்கள். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் செழிப்புப் பெறுவார்கள். உடன்பிறந்தவர்களால் அனுகூலம் பெறச் சந்தர்ப்பம் கூடிவரும். நிலம், மனை, வீடு, வாகனங்கள் சம்பந்தப்பட்ட இனங்கள் லாபம் தரும். அரசு விவகாரங்களில் அளவோடு நலம் உண்டாகும்.

சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். மாதர்களுக்கும், சமுதாய நலப்பணியாளர்களுக்கும் செல்வாக்கு கூடும். பொருளாதாரநிலை சீராக இருந்துவருமென்றாலும் எதிர்பாராத செலவுகளும் அவ்வப்போது ஏற்படும். சிக்கனத்தைக் கையாள்வது நல்லது. பிறமொழி, மதக்காரர்களிடம் வெளிப்படையாகப் பழகவேண்டாம். அலுவலகங்களில் பணிபுரிபவர்கள், ஆசிரியர்கள், மதபோதகர்கள் ஆகியோர் தங்கள் பொறுப்புணர்ந்து கடமையாற்றினால் சரிவுக்கு ஆட்படாமல் தப்பலாம். மே மாதம் 6 ஆம் தேதி முதல் வியாபாரிகள் வெளிச்சம் காண்பார்கள். மாணவர்களது நிலையிலும் வளர்ச்சி தெரியவரும். நல்லவர்களின் துணையை நாடிப் பெறுவது நல்லது. ரோகிணி நட்சத்திரக்காரர்கள் ஒரிரு பிரச்னைகளுக்கு உள்ளாக வேண்டிவரும். கிருத்திகை, மிருகசீரிஷ நட்சத்திரக்காரர்களுக்கு அனுகூலமான மாதமிது. ஏப்ரல் 16,18,21,24,27,28 மே 4,5,6,7,8,12,13 தேதிகள் சிறப்பானவை. கும்ப, மீன ராசிக்காரர்கள் உதவுவார்கள். தெற்கு, மேற்குத்திசைகள் அனுகூலமானவை. 6,8,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## மிதுனம் : (மிருகசீரிஷம் 3 ஆம் பாதம் முதல், திருவாதிரை, புனர்பூசம் 3 ஆம் பாதம் முடிய)

பெரும்பாலான கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் உங்கள் அபிலாஷைகள் இனிது நிறைவேறும். மனமகிழ்ச்சி கூடும். பொருள் வரவு திருப்தி தரும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் கூடிவரும். துணிவும், தன்னம்பிக்கையும் கூடும். அறிவாற்றல் காரணமாகச் சாதனைகள் பல ஆற்றி மற்றையோரின் நல்லெண்ணங்களுக்குப் பாத்திரமாவீர்கள். அலுவலகங்களில் பணிபுரிபவர்கள், நிர்வாகிகள், அமைச்சர்கள், சட்ட வல்லுநர்கள், ஆசிரியர்கள் ஆகியோருக்கெல்லாம் செழிப்பான சூழ்நிலை உதயமாகும். மருத்துவர்களுக்குப் பாராட்டுகள் குவியும். புதிய பொறுப்புகள் வந்துசேரும். பதவி உயர்வு, ஊதிய உயர்வு, இடமாற்றம் ஆகியவற்றை எதிர்பார்த்திருப்பவர்கள் அது கிடைக்கப் பெறுவார்கள்.

போட்டிப் பந்தயங்களில் வெற்றி கிட்டும். கடிதப் போக்குவரத்து நற்செய்தி கொண்டுவரும். பயணத்தால் பயன் உண்டாகும். கேளிக்கை, உல்லாசங்களில் ஈடுபடச் சந்தர்ப்பம் கனிந்துவரும். இயந்திரப் பணியாளர்கள் ஏற்றம் பெறுவார்கள். கடன் உபத்திரவம் குறைவடையும். அயல்நாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். மக்களாலும், உடன்பிறந்தவர்களாலும் அனுகூலம் பெறுவீர்கள். தடைக்கற்கள் படிக்கற்களாக மாறும். நிலபுலங்களால் அனுகூலம் உண்டாகும். 22 ஆம் தேதி முதல் வெற்றி வாய்ப்புகள் மேலும் கூடும். நூதனமான துறைகளில் ஈடுபடவும், அவற்றின் மூலம் ஆதாயம் பெறவும் சந்தர்ப்பம் உருவாகும். ஒன்றுக்கு மேற்பட்ட இனங்களால் லாபம் பெறுவீர்கள். தெய்வ காரியங்கள் ஈடேறும். மிருகசீரிஷம், புனர்பூச நட்சத்திரக்காரர்களுக்கு விசேஷமான நேரமிது. திருவாதிரை நட்சத்திரக்காரர்களுக்கு ஒரிரு இடையூறுகள் உண்டாகும். ஏப்ரல் 16,18,21,24,27,28,29 மே 4,5,6,7,8,12,13 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தெற்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, மீன, மேஷ ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## கடகம் : (புனர்பூசம் 4 ஆம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

சூரியன், கேது ஆகியோரது அனுகூலமான சஞ்சாரம் காரணமாகச் சங்கடங்களைச் சமாளிக்கின்ற பராக்கிரமத்தைப் பெறுவீர்கள். பொருள் வரவு சீராகவே இருந்துவரும். குடும்பநல முன்னேற்றத்திற்கான திட்டங்கள் ஈடேறும். தந்தையால் அனுகூலம் பெறுவீர்கள். பேச்சாற்றல் கூடும். அரசு விவகாரங்கள் ஆக்கம் தரும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னேற்றமான சூழ்நிலையைக் காண்பார்கள். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் இனங்கள் லாபம் தரும். செய்துவரும் தொழில் எதுவானாலும் அதில் வளர்ச்சி காண முடியும். எதிர்ப்புகள் என்பவை குறையும். மக்களாலும் உடன்பிறந்தவர்களாலும் ஒரிரு நன்மைகளை எதிர்பார்க்கலாம்.

சுபகாரியங்களுக்காக ஒரிரு செலவுகளை மேற்கொள்ள வேண்டி வரும். தெய்வ தரிசனம், சாது தரிசனம் ஆகியவை கிட்டும். அதனால் மனத்தெளிவும் உண்டாகும். 21 ஆம் தேதி முதல் கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள், மாதர்கள், சமுதாயநலப் பணியாளர்கள் ஆகியோருக்கெல்லாம் பிரச்னைகள் என்பவை விலகி, தெளிவான பாதை புலப்படும். 22 ஆம் தேதி முதல் வியாபாரிகள் ஓரளவு வளர்ச்சி காண்பார்கள். மாணவர்களது நிலையிலும் அபிவிருத்தி தெரியவரும். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் வரவேற்பு கூடும். 8 இல் சனி உலவுவதால் ஒரிரு இடர்ப்பாடுகள் அவ்வப்போது உண்டாகுமென்றாலும் சனியைக் குரு பார்ப்பதால் அவை விலகவும் கூடும். ஆயில்ய நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது நல்லது. ஏனைய நட்சத்திரக்காரர்களுக்கு அனுகூலமான மாதமிது. ஏப்ரல் 16,18,21,24,27,28,29 மே 1,6,7,8,12,13 தேதிகள் சிறப்பானவை. கிழக்கும் வடமேற்கும் அனுகூலமான திசைகளாகும். மேஷ, ரிஷப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,7 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## சிம்மம் : (மகம், பூரம், உத்திரம் 1 ஆம் பாதம் முடிய)

குரு, சனி, செவ்வாய் ஆகியோரது சஞ்சாரம் கோசாரப்படி திருப்திகரமாக இல்லாததால் அலைச்சல், உழைப்பு, மனக்கிலேசம் ஆகியவை உண்டாகும். உடல் ஆரோக்கியம் கவனிக்கப்பட வேண்டிவரும். சுகானுபவம் குறையும். நண்பர்கள், உற்றார், உறவினர்களால் பிரச்னைகள் உருவாகும். பண நடமாட்டம் சீராக இராது. குடும்பத்

தில் சலசலப்புகள் ஏற்படும். பயணத்தை ஒத்திப் போடுவது அவசியமாகும். இயந்திரங்கள், எரி பொருட்கள், மின்சாரம் ஆகியவற்றின் பக்கம் நெருங்கும்போது பாதுகாப்புத் தேவை. நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற இனங்களில் விழிப்புடன் ஈடுபடுவது நல்லது. பிறரால் ஏமாற்றப் படக்கூடுமாகையால் யாரிடத்திலும் வெளிப்படை யாகப் பழகவேண்டாம். பேச்சில் சூடான வார்த்தைகளை உதிர்க்கலாகாது.

உடன்பிறந்தவர்களிடம் கருத்துவேறுபாடு கொள்ள நேரும். வீண் சண்டை, சச்சரவுகளில் பிரவேசிக்கவேண்டாம். கூட்டுத் தொழிலில் கவனம் தேவை. எக்காரியத்திலும் பதட்டம் அடியோடு கூடாது. நிதானத்தை அவசியம் கடைப்பிடிக்க வேண்டும். பெரியவர்களின் அதிருப்திக்கு ஆளாக வேண்டாம். பெற்றோர்களால் எதிர்பார்த்த காரியம் தாமதப்படும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு அனுகூலமான நேரமிது. அரசியல்வாதிகள், அரசுப் பணியாளர்கள் ஆகியோர் அளவோடு வளர்ச்சி காண்பார்கள். மருத்துவர்களது திறமை வெளிப்படும். நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயரு வார்கள். மே 6 ஆம் தேதி முதல் வியாபாரிகளுக்கு வெளிச்சமான பாதை உருவாகும். பூர நட்சத்திரக் காரர்கள் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. ஏப்ரல் 16,18,21,24,27,28,29 மே 2,5,9,10,12 தேதிகள் சுமாரானவை. தென்கிழக்குத் திசை நலம் தரும். மேஷ, ரிஷப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,6,7 எண்கள் ஓரளவு நலம் தரும்.

## கன்னி : (உத்திரம் 2 ஆம் பாதம் முதல், ஹஸ்தம், சித்திரை 2 ஆம் பாதம் முடிய)

குரு, சனி ஆகியோருடைய அனுகூலமான சஞ்சாரம் காரணமாக உங்கள் பேச்சுத்திறமை வெளிப்படும். குடும்பத்தில் சுபகாரியங்கள் நிகழும். விருந்து உபசாரங்களில் பங்கு கொள்ளச் சந்தர்ப்பம் கனிந்து வரும். எதிரிகள் விலகிப் போவார்கள். எவ்வளவுக்கெவ்வளவு உழைப்பீர் களோ, அவ்வளவுக்கவ்வளவு பயன் பெறத் தடை யிராது. ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்கள் லாபம் தரும். பிற மொழி, மதக்காரர் களது தொடர்பால் நலம் உண்டாகும். கடன் உபத்திரவம் குறையும். உற்றார், உறவினர்கள், நண்பர்களால் நலம் பெற வாய்ப்புக் கூடிவரும். தொழிலாளர்கள், விவசாயிகள், உத்தியோகஸ்தர்கள் ஆகியோருக்கெல்லாம் செழிப்பான பாதை தெரிய வரும்.

இரும்பு சம்பந்தப்பட்ட இனங்கள் ஆதாயம் கொண்டுவரும். ஆசிரியர்கள், பேராசிரியர்கள், அரசியல்வாதிகள், மருத்துவர்கள், இரசாயனத் துறைகளைச் சேர்ந்தவர்கள், விஞ்ஞானிகள் ஆகி யோருக்கெல்லாம் விசேடமான நேரமிது. 7 இல் செவ்வாயும், 6 இல் சூரியனும் உலவுவதால் எதிலும் பொறுமையோடு ஈடுபடுவது நல்லது. உடல் நலனில் கவனம் தேவைப்படும். கூட்டுத் தொழிலில் அக்கறை செலுத்துவது அவசியமாகும். பொறி யியல், சட்டம், காவல், இராணுவம் ஆகிய துறை களைச் சேர்ந்தவர்கள் அகலக்கால் வைக்கவேண் டாம். சினிமா, சங்கீதம் போன்ற இனங்கள் லாபம் தரும். 22 ஆம் தேதி முதல் வியாபாரிகள், எழுத் தாளர்கள், பத்திரிகையாளர்கள், கணிதத்துறை களைச் சேர்ந்தவர்கள் ஆகியோருக்கெல்லாம் மந்த நிலை விலகி, சுறுசுறுப்பான சூழ்நிலை உருவாகும். ஹஸ்த நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது நல்லது. ஏப்ரல் 16,18,21,24,27,28,29 மே 1,4,5,6,7,12,13 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, மேற்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, கும்ப, ரிஷப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,4,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## துலாம் : (சித்திரை 3 ஆம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3 ஆம் பாதம் முடிய)

6 இல் உள்ள செவ்வாய் உங்களுடைய ஆற்றலை வெளிப்படுத்துவார். சங்கடங்களைச் சமாளிக்கும் திறமை உண்டாகும். இயந்திரப் பணியாளர்களுக்கு உற்சாகமான பாதை புலப்படும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். உடன் பிறந்தவர் களால் ஓரிரு நன்மைகள் உண்டாகும். வழக்கு, வியாஜ்ஜியங்களில் மாமூலான போக்கு நிலவிவரும். ஜன்மத்தில் குரு உலவுவதால் அலைச்சல் சற்று கூடும். மனத்தில் சிறுசிறு கவலைகள் குடி கொள்ளும். பொருளாதார நிலையில் வளர்ச்சி காண அரும்பாடுபட வேண்டிவரும். குடும்பத்தில் சிறுசிறு பிரச்னைகள் தலைதூக்கும். பிறமொழி, மதக்காரர்களை நம்பி எதிலும் இறங்கவேண்டாம்.

கணவன், மனைவியிடையே கருத்து ஒற்றுமை குறையும். விட்டுக் கொடுத்துப் பழகினால் நிலைமையைச் சரிசெய்து கொள்ளலாம். கூட்டுத் தொழிலில் கவனம் செலுத்திவருவது நல்லது. அலுவலகங்களில் பணிபுரிபவர்கள், தொழிலாளர் கள், விவசாயிகள் ஆகியோர் தங்கள் பொறுப் புணர்ந்து கடமையாற்றினால் சரிவுக்கு ஆட்படாமல் தப்ப முடியும். பெரியவர்களின் நேசத்தை விரும்பிப் பெறுவதுடன், அவர்களின் ஆலோ சனைகளின்படி நடப்பதன் மூலம் நலம் பெற முடியும். இறைவழிபாட்டில் கவனம் செலுத்தி னால் மன அமைதி காணலாம். உங்கள் ஜனன கால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடைபெறுமானால் சோதனை கள் என்பவை குறையவும், ஓரிரு நன்மைகள் உண்டாகவும் வழி பிறக்கும். சுவாதி நட்சத் திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது அவசியம். ஏப்ரல் 18,21,24,27,28,29 மே 1,4,5,6,7,8 தேதிகள் சிறப்பானவை. தென்திசை நலம் தரும். மீன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 9 ஆம் எண் அதிர்ஷ்டமானது.

## விருச்சிகம் : (விசாகம் 4 ஆம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

சூரியன் 6 இல் பலமுடன் உலவுவதால் உங்கள் பராக்கிரமம் கூடும். எதிர்ப்புகளைக் கடந்து வாழ்

வில் முன்னேற்றம் காண்பீர்கள். புதிய பொறுப்புகள் வந்துசேரும். அரசாங்கத்தாரால் எதிர்பார்த்திருந்த ஓரிரு காரியங்கள் நிறைவேறும். அரசுப் பணியாளர்களுக்கும், அரசியல்வாதிகளுக்கும் செல்வாக்கு கூடும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றிநடை போடுவார்கள். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்களும், எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் துறைகளைச் சேர்ந்தவர்களும் செழிப்பான பாதையைக் காண்பார்கள். ஜன்மத்தில் ராகுவும், 7 இல் கேதுவும், 4 இல் சனியும் உலவுவதால் அலைச்சல் கடுமையாகும். அதனால் உடல் அசதியும் உண்டாகும். சுகானுபவம் குறையும்.

அதிகம் உழைக்கவேண்டிவரும். குரு விரயத்தில் உலவுவதால் பொருளாதார நிலையில் விசேடமான வளர்ச்சிக்கு இடமிராது. மக்கள் நலனுக்காகச் செலவு செய்யவேண்டிவரும். அலுவலகங்களில் பணிபுரிபவர்கள், தொழிலாளர்கள், விவசாயிகள் ஆகியோர் வளர்ச்சி காண அரும்பாடுபடவேண்டிவரும். கணவன், மனைவியிடையே சுமுகமான உறவு இராது. சிறுசிறு சலசலப்புகள் உண்டாகும். பக்குவத்துடன் சமாளிப்பது நல்லது. கூட்டுத் தொழிலில் அக்கறை தேவைப்படும். 22 ஆம் தேதி முதல் வியாபாரிகள் மந்தநிலை விலகப் பெறுவார்கள். இறைவழிபாட்டில் கவனம் செலுத்துவது நல்லது. நல்லவர்களின் நேசத்தை வலுப்படுத்திக் கொண்டு, அவர்களின் அறிவுரைப்படி நடப்பதன் மூலம் நலம் பெற முடியும். மாதர்களது அபிலாஷை ஈடேறத் தாமதம் உண்டாகும். கேட்டை நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது நல்லது. ஏப்ரல் 21,24,27,28,29 மே 1,4,5,6,7,8,12 தேதிகள் சுமாரானவை. கீழ்த்திசை நலம் தரும். கும்ப, மேஷ ராசிக்காரர்கள் ஓரளவு உதவுவார்கள். 1 ஆம் எண் அதிர்ஷ்டமானது.

## தனுசு : (மூலம், பூராடம், உத்திராடம் 1 ஆம் பாதம் முடிய)

ராசிநாதன் குரு 11-லும், சனி 3-லும் உலவுவதால் உங்கள் அறிவாற்றலும் செயல்திறமையும் பளிச்சென்று பிரகாசிக்கும். எடுத்த காரியங்களைத் திறம்பட ஆற்றி, மற்றவர்களிடம் நற்பெயரைப் பெறுவீர்கள். பொருளாதாரநிலை உயரும். திரவப் பொருட்கள் லாபம் தரும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்கள் ஆதாயம் கொண்டுவரும். எதிர்பாராத திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் கூடிவரும். தொழிலாளர்கள், விவசாயிகள், உத்தியோகஸ்தர்கள் ஆகியோர் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். மகப்பேறு அல்லது மக்களால் பாக்கியம் உண்டாகும். அயல்நாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். நண்பர்கள், உற்றார், உறவினர்கள் ஆகியோரால் அனுகூலம் உண்டாகும்.

கணவன், மனைவியிடையே களிப்புறவு கூடும். மாதர்கள் தங்கள் இலட்சியம் ஈடேறப் பெறுவார்கள். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம், ஆன்மிகம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களும், ஆசிரியர்கள், பேராசியர்கள், அரசியல்வாதிகள் ஆகியோரும் உற்சாகமான சூழ்நிலையைக் காண்பார்கள். ஞான மார்க்கத்தில் ஈடுபாடு கூடும். கடிதப்போக்குவரத்து நற்செய்தி கொண்டுவரும். கூட்டுத் தொழில் லாபம் தரும். அலைச்சல் கூடினாலும் உழைப்பு அதிகரித்தாலும் அதற்கான பயன் கிடைக்கத் தவறாது. பெரியவர்களும் தனவந்தர்களும் பக்கபலமாக விளங்குவார்கள். பொன், வெள்ளி, இரத்தின வியாபாரிகளுக்கு லாபம் கூடும். பூராட நட்சத்திரக்காரர்கள் ஓரிரு சங்கடங்களுக்கு உள்ளாக வேண்டிவரும். ஏப்ரல் 16,21,24,27,28,29 மே 1,4,5,6,7,8,12,13 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, மேற்கு, கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. கும்ப, மேஷ, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,6,7,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## மகரம் : (உத்திராடம் 2 ஆம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2 ஆம் பாதம் முடிய)

3 இல் செவ்வாய், 11 இல் ராகு ஆகியோருடைய அனுகூலமான சஞ்சாரத்தால் உங்கள் துணிவும், தன்னம்பிக்கையும் கூடும். எதிர்ப்புகள் என்பவை குறையும். பிறமொழி, மதக்காரர்களது தொடர்பால் அனுகூலம் விளையும். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற இனங்கள் ஆக்கம் தரும். நிலபுலங்களால் ஆதாயம் கிடைக்கும். உடன்பிறந்தவர்கள் தக்க தருணத்தில் முன்வந்து உதவுவார்கள். பொருளாதாரநிலை சீராகவே இருந்துவரும். உற்றார், உறவினர்கள், நண்பர்களால் ஓரிரு காரியங்கள் ஈடேறும். குடும்பத்தில் அமைதி காணலாம். கேளிக்கை, உல்லாசங்களில் ஆர்வம் கூடும். புதிய ஆடை, அணிமணிகளின் சேர்க்கையைப் பெறுவீர்கள். சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள்.

தொழில்துறையில் சீரான வளர்ச்சியைக் காணலாம். இடமாற்றம் நிலைமாற்றம் ஆகியவை சிலருக்கு ஏற்படும். கடுமையாக உழைக்கவும் நேரும். உழைப்புக்குப் பின்வாங்கலாகாது. மக்கள் நலனில் கவனம் செலுத்தி வருவது நல்லது. 21 ஆம் தேதி முதல் ஓரிரு எண்ணங்கள் ஈடேற வழிபிறக்கும். மாதர்களது நலம் கூடும். கணவன், மனைவி உறவுநிலை சீராக இருந்துவரும். 22 ஆம் தேதி முதல் கணிதம், விஞ்ஞானம், எழுத்து, வியாபாரம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் இருட்டில் இருந்து வெளிச்சத்திற்கு வருவார்கள். நிறுவன, நிர்வாகத்துறைகளைச் சேர்ந்தவர்களுக்கும் வெளிச்சமான பாதை புலப்படும். தெய்வ வழிபாட்டில் கவனம் செலுத்துவது நல்லது. அதன் மூலம் மனக்குழப்பம் அகலும். திருவோண நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது அவசியம். ஏப்ரல் 16,18,24,27,28,29 மே 1,4,5,6,7,8,12,13 தேதிகள் அனுகூலமானவை. தெற்கும், தென்மேற்கும் அனுகூலமான திசைகளாகும். மீன, விருச்சிக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 4,6,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

→

**கும்பம் : (அவிட்டம் 3 ஆம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3 ஆம் பாதம் முடிய)**

குரு, சுக்கிர பலம் காரணமாக உங்கள் தோற்றப் பொலிவும், அறிவாற்றலும், செயல்திறமையும் பளிச்சிடும். சங்கடங்கள் என்பவை குறையும். எடுத்த காரியங்கள் இனிது நிறைவேறும். நூதன முயற்சிகளில் ஈடுபடலாம். அரசாங்கத்தாரால் எதிர்பார்த்த காரியங்கள் நிறைவேற ஆரம்பிக்கும். மக்களால் பெற்றோருக்கும், பெற்றோரால் மக்களுக்கும் நன்மைகள் உண்டாகும். பொருளாதார நிலை உயரும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்கள் ஆதாயம் கொண்டுவரும். சமுதாயத்தில் உயர் அந்தஸ்தில் உள்ளவர்களது தொடர்பால் நீங்கள் நலம் பல பெறுவீர்கள். ஆசிரியர்கள், பேராசிரியர்கள், மேடைப் பேச்சாளர்கள், அரசியல்வாதிகள், ஆன்மிகவாதிகள் ஆகியோருக்கெல்லாம் செல்வாக்கு உயரும்.

கணவன், மனைவியிடையே கருத்து ஒற்றுமை கூடும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். அலுவலகங்களில் பணிபுரிபவர்கள் பதவி உயர்வு, இடமாற்றம் ஊதிய உயர்வு ஆகியவற்றைப் பெறுவார்கள். சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். நிறுவன, நிர்வாகத்துறைகளைச் சேர்ந்தவர்கள் எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் இனங்களில் தொடர்புடையவர்கள் ஆகியோருக்கெல்லாம் செழிப்பான சூழ்நிலை உருவாகும். அலைச்சலும், உழைப்பும் கூடினாலும் அதற்கான பயனைப் பெற்று வருவீர்கள். பேச்சில் சூடான வார்த்தைகளை உதிர்க்காமல் இருப்பது நல்லது. சதய நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது அவசியம். ஏப்ரல் 16,18,21,27,28,29 மே 1,4,5,6,8,12,13 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென் கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. மேஷ, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,4,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**மீனம் : (பூரட்டாதி 4 ஆம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)**

விசேடமான நன்மைகளை நீங்கள் இந்த நேரத்தில் எதிர்பார்க்க முடியாவண்ணம் கிரகங்கள் உலவுகிறார்கள். ஆதலால் எக்காரியத்திலும் பதட்டத்திற்கு இடம் தராமல் ஒருமுறைக்குப் பலமுறை யோசித்து ஈடுபடுவது நல்லது. உடல்நலனில் கவனம் தேவைப்படும். பயணம் தவிர்க்கப்படவேண்டும். இயந்திரங்களின் பக்கம் நெருங்கும்போதும், கூரிய ஆயுதங்கள், எரிபொருட்கள் ஆகியவற்றின் பக்கம் நெருங்கும்போதும் பாதுகாப்பு தேவை. வீண் சண்டை, சச்சரவுகளில் பிரவேசிக்கலாகாது. அந்தஸ்தும், மதிப்பும் சாதாரணமாகவே இருந்துவரும். நூதனமான தொழில் துறைகளில் ஈடுபட இந்த மாதம் சிறப்புடையதாகாது. மாமூலான பணிகளில் ஈடுபடுவதே உத்தமம். கணவன், மனைவி உறவுநிலை ஒருநாள் போல் மறுநாளிராது.

பேச்சில் சூடான வார்த்தைகளை உதிர்க்க வேண்டாம். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளை எண்ணிக் கைப்பொருளை வீணாக்காமல் இருப்பது நல்லது. சிக்கன நடவடிக்கை அவசியம் தேவை. தொழிலாளர்கள், விவசாயிகள், உத்தியோகஸ்தர்கள், ஆசிரியர்கள், பேச்சாளர்கள் ஆகியோர் தங்கள் பொறுப்புணர்ந்து கடமையாற்றினால் சரிவுக்கு ஆட்படாமல் மீளலாம். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். மாதர்கள் தங்கள் எண்ணம் ஈடேறப் பெறுவார்கள். 22 ஆம் தேதி முதல் கணிதம், விஞ்ஞானம், வியாபாரம், எழுத்து போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு மந்தநிலை அகன்று வெளிச்சமான சூழ்நிலை உதயமாகும். ரேவதி நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது அவசியமாகும். ஏப்ரல் 16,18,21,27,28,29 மே 1,4,6,7,8,12,13 தேதிகள் சுமாரானவை. தென்கிழக்கு, வடமேற்குத் திசைகள் நலம் தரும். மேஷ, ரிஷப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 6,7, எண்கள் அதிர்ஷ்டமானவை.

ஃ

# "அப்பா எப்படிம்மா இருப்பாங்க!"

தினகரி சொக்கலிங்கம்





திருவனந்தபுரத்தில் காலை நேரப் பரபரப்பில் - 'சாலைத் தெருவில்' உள்ள நகைக்கடை ஒன்றின் உள்ளே நுழைகிறார் ஒருவர். மும்முரமாக வியாபாரம் நடந்து கொண்டிருக்கும் நேரம்.

"சார், தங்க அரைஞாணும்,, காப்பும், மோதிரமும் வேணும்... சின்னப் பாப்பாவுக்கு... பிறந்து பதினாறு நாள் ஆகவில்லை, கிடைக்குமா?" - வந்த மனிதர் விசாரிக்கிறார். பார்ப்பதற்குப் படாடோபம் இல்லாமல், வெள்ளை ஜிப்பாவும் ஒல்லியான உடல்வாகும் - கலைந்தும் கலையாமலும் கிடக்கும் தலை முடியுமாக மிக எளிய தோற்றத்தோடு தன் முன்னே நிற்பவரை ஏறிட்டு நோக்குகிறார் கடைக்காரர்.

"இப்போ ஏதும் ரெடியா இல்லை. ஆர்டர் கொடுத்தால் செய்து தரலாம்..." சற்று விட்டேத்தியாகப் பதில்...

"எங்கே போனாலும் நமக்கு வெற்றியே கிடைக்காது போலும் பணம் கொடுத்தாலும் ஆசை பூர்த்தி அடையாது போலிருக்கு. ம்... கொஞ்சம் குடிக்கத் தண்ணி கொடுப்பீர்களா..." விரக்தியாக கேட்கிறார் வந்தவர்.

"கூல் டிரிங்க்ஸ் சாப்பிடுகிறீர்களா..." முதலாளியின் குரல் சற்று மென்மையாகவே ஒலிக்கிறது.

"இல்லை. நல்ல குளுந்த தண்ணியே போதும் - சாமான் வாங்காமப் போயிட்டா, அது நஷ்டமாப் போயிடும் -"

"எது? -" கடைக்காரர்.

"கூல்டிரிங்க்ஸ்!..." சொல்லிவிட்டு கடகடவென சிரிக்கிறார் வந்தவர்.

அவர்! — அந்த வேடிக்கை மனிதர், வேறு யாருமில்லை. எனது அருமைத் தந்தை திரு. புதுமைப்பித்தன் அவர்கள்தான். அப்பாவின் அருகாமை, அவரால் வளர்க்கப்பட்ட பெருமை, ஏன் தந்தைப் பாசம் என்பதைக்கூட அறியாதவள் நான். எனது தந்தை என்னைத் தொட்டுத் தூக்கிக் கொஞ்சி மகிழ்ந்த காலம் எல்லாம் வெகு கொஞ்சமே. இன்னமும் குறிப்பாகச் சொல்லப் போனால் பிறந்து நான்கே மாதங்கள் ஆன பிஞ்சுக் குழந்தையோடு இரண்டு மாதங்கள் கூடவே இருந்து பாசத்தைக் கொட்டி சந்தோஷப்பட்டதும் அப்போதுதான். பிறகு கதை வசனம் எழுத என பூனா சென்றதும், காசநோயோடு திரும்பி வந்ததும் - மீளாத் துயரில் எங்களை ஆழ்த்திவிட்டு மறைந்தே போனதும் தனி வரலாறு. ஆம் எனது தந்தை எங்களை விட்டுப் பிரிந்தபோது எனக்கு இரண்டே வயது. அப்போது என்ன தெரியும் எனக்கு? அவரது முகம்கூட நிழலாய் நெஞ்சில் தோன்றுமே அல்லாது முழுமையாக அவரை நான் அறிந்து கொள்ள முயல்வதெல்லாம் அம்மாவிடம்தான். எனக்கு தாய்தான் 'தந்தையுமானவர்!' -

'அப்பா எப்படிம்மா இருப்பாங்க!' - என்று குழந்தையாய் நான் பலமுறை அம்மாவிடம் கேட்டதுண்டு. என் சம வயது தோழியர் எல்லாம் அப்பா கைபிடித்து நடப்பதை ஏங்கும் கண்களோடு பார்த்த காலங்களும் உண்டு. அந்த தாக்கம்தானோ என்னமோ இப்போதுகூட எங்காவது தந்தையைப் பிரிந்த குழந்தையைப் பார்க்க நேரிடும்போது மனம் தவித்துப் போகிறது. நான் அப்பாவைப் பற்றி விவரம் அறியாச் சிறுமியாய் கேட்கும் போதெல்லாம், அவரைப்பற்றிக் கூறும் எனது அன்னையாரின் பதில்கள் என்றும் என் இதயத்தில் பதிவாகிப் போன ஒலிப் பேழைகள்.

"சுவர் ஓரமாக விரிக்கப்பட்ட ஓர் தாழம் பாயும் - இரு தலையணையும், பக்கத்தில் ஒரு கூஜா நிறையத் தண்ணீரும் திறந்து வைக்கப்பட்ட வெற்றிலைச் செல்லமும் - கையில் எழுதும் பலகையும் பேப்பரும் பேனாவுமாகச் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு வேகமாக எழுதிக் கொண்டிருப்பார்... அந்தக் காட்சிதான் கண்முன் இப்போதும் பளிச்சென்று தோன்றுகிறது..." என்று என் அம்மா பலமுறை கூறக் கேட்டிருக்கிறேன்.



ஒரு மாமனிதனின் மனைவியாகி, அவரது சுக துக்கங்களில் சரி சமமாகப் பங்கு கொண்டு,

இறுதியாக ஒரு பெண் குழந்தையை வளர்க்கும் பெரிய பொறுப்பையும் தலையில் சுமந்து வெற்றி கண்டவர் எனது தாய் திருமதி கமலா விருத்தாசலம் அவர்கள். எனது பெற்றோரின் இல்லற வாழ்வில் பணம் இல்லை, பகட்டில்லை, ஆடம்பரம் இல்லை. மாறாக அன்பு இருந்தது, பற்று இருந்தது, பாசம் இருந்தது. வறுமையிலும் செம்மை கண்டு வாழ்ந்தவர் எனது பெற்றோர். இப்போதுகூட எனது தந்தைக்குப் பிடித்தமான உணவு வகையோ பழங்களோ நான் சாப்பிடக் கொடுக்கும்போது 'இப்போ உன் அப்பா இல்லையே' என எண்ணி வருந்துவார்கள் அவர்கள்.

இன்றைய தலைமுறையினர் பலர் ஆர்வத்தோடு வீடு தேடி வந்து அப்பாவைப் பற்றிய செய்திகளைக் கேட்கும்போது - அவர்களிடம் மிகுந்த மகிழ்வோடு பழைய நினைவுகளைப் பகிர்ந்து கொள்ளும் எனது அன்னை அப்பாவோடு வாழ்ந்த காலத்திற்கே போய்விட்டாற் போன்று அதில் ஒன்றிப் போய் விடுவார்கள்.

சமீப காலமாக ஒரு சிலர் அவரது பெயரை மாசுபடுத்துவது போல ஏதாவது கூறுவதைச் செவிமடுக்கையில் மதுரையை எரித்த கண்ணகி போல் கோபம் கொள்வதும் உண்டு.

"நல்ல இலக்கியத்தைக் காணும்போது அதைத் தெரிந்து கொள்ளவும், பரிச்சயம் செய்து வைக்கவும் திராணி வேண்டும் - போலியைக் காணும்போது யார் வந்து நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் அது போலி என்று சொல்வதற்கு நெஞ்சழுத்தமும் கொண்டிருக்க வேண்டும்..." - என்று அழுத்தம் திருத்தமாக சொல்லிச் சென்ற எனது அருமைத் தந்தையின் குரல் இன்றும் தனது காதுகளில் ஒலித்துக் கொண்டே உள்ளது என்கிறார் எனது அம்மா.

எனது தந்தை உயிரோடு இருந்த காலத்தில் அவரைத் தேடிப் பட்டமோ, பரிசோ, பதவியோ வரவில்லை. ஆனால் அப்படி ஏதும் பெறாமல் தனித்து நின்றே சாதனை பெற்றவர் அவர். ஆம் அவரது படைப்புகள்

காலத்தால் சாகாது

காலத்தின் ஏலத்தால் மலியாது!

# நெஞ்சம் எப்படி நிறையும்?

நா. ராமச்சந்திரன்

பல வருடங்களுக்கு முன் ஒரு நாள் மயிலாப்பூர் சுலிவான் கார்டன் தெரு வழியாகப் போய்க் கொண்டிருந்தேன். பகல் வேளை. மழை பிசுபிசுவென்று தூறிக் கொண்டிருந்தது. பொருட்படுத் தாமல் நடந்து கொண்டிருந்தேன். விவேகானந்தர் கல்லூரி சமீபம் வந்திருப்பேன். தூறல் பலமா யிற்று. மழைக்காக ஒதுங்க வேண் டும் என்று விவேகானந்தா கல் லூரிப் பக்கம் ஓட எத்தனித்தேன். அப்போது யாரோ பலமாகக் கை தட்டிக் கூப்பிடும் சப்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். என் நண்பர் ஒருவர் எதிர்சாரியிலுள்ள கடை முன் நின்று, "மழைக்கு ஒதுங்குவதற்கு இது சௌகர்ய மான இடம்" என்று என்னைக் குரல் கொடுத்துக் கூப்பிட்டுக் கொண்டிருந்தார். கல்லூரி வளா கத்திற்குச் செல்ல வேண்டிய நான், அவர் உத்தரவுப்படி திசை மாறி அவருடன் போய்ச் சேர்ந்து கொண்டேன்.

இதை எதற்குச் சொல்கிறேன் என்றால் விதி மழைக்காகக்கூட என்னைக் கல்லூரிப் பக்கம் ஒதுங் காமல் செய்து விட்டது!

பால்ய வயதிலேயே உத்தி யோகத்திற்குப் போன நான் மூன்று எண்ணங்கள் நிறைவேற வேண்டும் என்று சதா பிரார்த் தித்துக் கொண்டிருப்பேன். அப் போது வயது எனக்குப் பதினைந்து தான் இருக்கும்.

'கல்கியைப் போலத் தமிழில் எழுத வேண்டும்.

நல்ல சங்கீத சபையில் அங்கத் தினராகச் சேர்ந்து கர்நாடக இசை யைக் கேட்க வேண்டும்.

தினசரி சொந்தத்தில் 'ஹிந்து' பேப்பர் வரவழைத்துப் படிக்க வேண்டும்.

இந்த மூன்று ஆசைகள் எப் போது நிறைவேறும் என்று சதா எண்ணிக் கொண்டிருப்பேன். நான் உத்தியோகத்தில் சேர்ந்து முதல் சம்பளம் வாங்கியவுடன் முதலில் ஹிந்து பேப்பருக்குச் சந்தா செலுத்தினேன். இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைடியில் அங்கத்தினராகச் சேர்ந்தேன். என் முதல் கதையையும் சிறுவயதி லேயே 'மாலதி' என்ற தமிழ்ப் பத்திரிகைக்கு அனுப்பி வைத் தேன். பிறகு மற்ற பத்திரிகை களுக்கு அனுப்பும் முயற்சியில் ஈடுபட்டேன்.

கிட்டத்தட்ட ஐம்பது வருடங்கள் ஓடிவிட்டன. இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் மூலமாக நான் கேட்காத கச்சேரிகள் இல்லை. தலை சிறந்த வித்துவான்கள் அத்தனை பேர் இசையையும் கேட்டு மகிழ்ந்திருக் கிறேன். அவர்களைப் பற்றிய கட்டுரைகளும் எழுதியிருக்கிறேன். இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸில் 'கேட் கீப்பரா'க இருந்து, டிக்கெட் கொடுத்து டிக்கெட் வசூலித்து இன்னும் பல சேவைகள் செய்து முப்பது வருடங்களாக அதன் காரியதரிசியாக இருந்து வரு கிறேன்.

வாழ்க்கையில் பல சோதனை கள் வருவது போல இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸும் பல சோதனை களைக் கடந்து வந்த ஸ்தாபன மாகும். அது வெள்ளி விழா கொண்டாடி முடிந்தவுடன், மூடு விழா கொண்டாடும் நிலைக்கு வந்து விட்டது! பாங்கில் இருந்த பணமெல்லாம் கரைந்து போயிற்று. ஏராளமான கடன் சுமையில் தள் ளாடிக் கொண்டிருந்தது. நிர்வ கிக்க முன்வருவோர் யாரும் இல் லாத சமயத்தில் ஆண்டியான நான் அதை 'நிர்வகிக்கிறேன்' என்று துணிந்து கடவுள் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு நிர்வ கிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டேன். பணமும் பலமும் செல்வாக்கும் உள்ள ஒரு பிர முகரை அதன் தலைவராக ஆக்கி விட்டால் போதும் என்று தீர்மா னித்துச் செல்வந்தரும் தொழிலதி பருமான திரு வி. எப்பெருமானார் செட்டியாரை ஃபைன் ஆர்ட்ஸுக்குத் தலைமைப் பொறுப்பை ஏற்கச் செய்தேன். ஃபைன் ஆர்ட்ஸ் ஒன் றுக்காகவே என் உத்தியோக மாற்





றங்களைத் தவிர்த்து சென்னை யிலேயே நிரந்தரமாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்து அல் லும் பகலுமாக அதன் உயர்வுக் கும், வளர்ச்சிக்கும் உழைத்தேன்.

இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைடிக்கு இப்போது அறு பத்து இரண்டு வயது. படிப்படி யாக உயர்ந்து இன்று நமது புரா தனக் கலைகளான சங்கீதம், நாட் டியம், நாடகம் ஆகியவற்றிற்குச் சிறந்த சேவை செய்து கொண்டு வருவதை நாடறியும். கடனில் மூழ்கியிருந்த சொஸைடிக்கு இன்று பல லட்ச ரூபாய்கள் சேர்மானத்தில் உள்ளது. இதை நினைத்துப் பார்க்கும் போது என் உள்ளம் பெருமிதமடைகிறது. உடல் தள்ளாமை எங்கோ மறைந்து புதுத் தெம்பு வந்து விடு கிறது.

'நமக்கு என்ன செய்து கொண் டோம்' என்பதைவிடப் பிறருக்கு என்ன செய்தோம்?' என்பதை எண்ணிப் பாருங்கள். பிறருக்கும், நாட்டிற்கும், கலைகளுக்கும் நாம் ஆற்றும் பணி நிச்சயம் நம் நெஞ்சில் நிறைந்து நின்று நமக்கு மன நிம்மதியளிக்கும். என் எண் ணம் ஈடேறிய மகிழ்ச்சியில் சென்னை மாநகரில் வாழ்வதில் நான் பெருமை கொள்கிறேன்.

# எனது இரண்டாவது பட்டினப் பிரவேசம்

அனுராதா ரமணன்

சென்னை ஒன்றும் எனக்குப் புதுசில்லை. பிறந்தது புரசைவாக்கத்தில் - ராஜீவி நர்ஸிங்ஹோமில். நடுவில் இரண்டு வருடம் போல - அம்மாவுடன் மேட்டூருக்குப் போயிருந்தேனா... அவ்வளவுதான். அம்மா - என் தம்பியைப் பிரசவிக்க மறுபடி சென்னை வந்தபோது - என்னை, தன் அம்மாவிடம் விட்டு விட்டு, தம்பிப் பாப்பாவுடன் கிளம்பி விட்டாள்.

இதற்குப் பின் ஆரம்பக் கல்வி, புரசைவாக்கத்தில் சுவார்ட்ஸ் கான்வென்ட். அப்புறம் ராஜா முத்தையா, அப்புறம் ஓவியப் பயிற்சி. பத்தொன்பதில் கல்யாணம். இருபதில் முதல் குழந்தை... இருபத்தியொன்றில் மறுபடியும்-மேட்டூர்...

இந்த காலக் கட்டத்தில் சென்னையில் வசித்தேன் என்கிற பெயரே தவிர - தனியே எங்கும் போய்ப் பழக்கமில்லை. அப்படியே போனாலும் குதிரைக்குக் கடிவாளம் போட்ட மாதிரி ஒரே தடத்தில் போய் வந்துதான் பழக்கம். 11ஆம் நம்பர் பஸ் என்றால் அதுதான் வர வேண்டும். வேறு சில பஸ்களும் நான் போக வேண்டிய இடத்துக்குப் போகுமென்றாலும் எதற்கு வீண் பிரச்னை? அடுத்த 11ஆம் நம்பர் வரும் வரையில் காத்திருப்பதே உசிதம் என்கிற முறையில் வளர்க்கப்பட்டவள்.

எனது . இருபத்தொன்பதாம் வயதில்... மீண்டும் சென்னைப் பிரவேசம்... குழந்தைகள் என் பெற்றோரிடம். நான் மட்டும் இங்கே...

திடீரெனக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற் போல... அதென்னவோ, தெருவில் - பஸ்ஸில் எங்கே பார்த்தாலும் புற்றீசல் மாதிரி ஜனங்கள். ஏழெட்டு வருடங்களுக்கு முன்பு இத்தனை நெரிசல் இல்லை என்றே தோன்றியது.

இங்கே 'ஸ்பெஷாலிடி பப்ளிகேஷன்ஸில்' ஓவியர் வேலை. சாஸ்திரி நகரில் ஆபீஸ். அடையாறு கஸ்தூரிபா நகரில் ஒரு லேடீஸ் ஹாஸ்டலில் தங்கியிருந்தேன்.

ஓவியத் துறையில் நான் படித்தது ஃபைன் ஆர்ட்ஸ். பத்திரிகைக்குத் தேவையோ கமர்ஷியல் ஆர்ட்டிஸ்ட் ஆனாலும் ஏதோ ஓர் அசட்டுத் துணிச்சலில்தான் வேலையை ஒப்புக் கொண்டேன். ஒப்புக் கொண்டேன் என்பதை விடக் - கற்றுக் கொண்டேன் என்பதுதான் சரி.

ஆபீஸ் விட்டு ஹாஸ்டல் வந்தால் - அது தனி உலகம். ஒரு பெரிய ஹாலில் மொத்தம் எட்டு கட்டில். ஒரு கட்டிலுக்கும் இன்னொரு கட்டிலுக்கும் இடையில் மிகச் சரியாய் ஓரடி இடைவெளிதான். நம்முடைய பெட்டி, பக்கெட், பிளாஸ்டிக் குவளை, தட்டு, தம்ளர் இவற்றை - நமது கட்டிலுக்கடியிலேயே தான் வைத்துக் கொள்ள வேண்டும்.

எனக்குக் கட்டிலில் படுத்துப் பழக்கமில்லை. (இன்னமும்) தரையில் பாய் விரித்துப் படுத்துத் தூங்கியவள். கை கால்களை வீசிப் போட்டுப் படுப்பேன். ஒரு நாள் பழக்க தோஷத்தில் இப்படிக் காலை வீசியதில், அடுத்தக் கட்டிலைச் சேர்ந்த மெஹருன்னிசா நடு ராத்திரியில் 'குய்யோ முறையோ' என்று கத்தியதில் நடுங்கிப் போய்விட்டேன்.

இரண்டாவது பட்டினப் பிரவேசத்தில் நான் நிறையக் கற்றுக் கொண்டேன். சொன்னால் சிரிக்கக் கூடாது. எங்கள் குடும்பத்தில் - வீட்டு வேலைக்கும் அஞ்ச மாட்டோம். சாப்பிடவும் வெட்கப்பட மாட்டோம். அப்போதிருந்த என் தட்டைத் தூக்கவே தனித் தெம்பு வேண்டும். தம்ளர் - தாராளமாய்க் கால்படி பிடிக்கும்.

ஹாஸ்டலில் இந்தத் தட்டும், தம்ளரும் எல்லார் வாயிலும் விழுந்து புறப்பட்டிருக்கிறது பாருங்கள். தம்ளரில் காபி ஊற்றினால் - அடியில் எங்கோ இருக்கும். சாப்பாடு, அத்தனை பெரிய தட்டில் ஒரு மூலையில் - ஆனால், அதையும் சாப்பிட முடியாது என்று வைத்துக் கொள்ளுங்கள்.

அந்த வயதில் எனக்குப் பிளட் பிரஷர் இல்லை; டயபடீஸ் இல்லை. சாப்பாடும் இல்லை. ராத்திரியில் ஹாஸ்டல் மொட்டை மாடியில் பாயை விரித்து, கையில் இரண்டு கிராக்ஜாக் பிஸ்கட் பாக்கெட்டுடன் வந்து உட்காருவேன். வானத்தையும், நிலாவையும் பார்த்துக் கொண்டே பத்து நிமிஷத்தில்



காவி செய்வேன். அப்புறம் இரண்டு டம்ளர் தண்ணீர்.

இரவு படுத்தால் உடம்பு அடித்துப் போட்டாற் போல இருக்கும். கனவே இல்லாத வாழ்க்கை. தூக்கம் வராத இரவுகளில் என் குழந்தைகளின் நினைப்பு. அவர்களது பட்டுக் கன்னத்தை ஸ்பரிசிக்க - எப்பொழுது சந்தர்ப்பம் கிடைக்கும் என்கிற ஏக்கம்.

இப்படித் தூக்கம் வராத இரவுகளில் எழுந்து உட்கார்ந்து, அறையிருட்டில், எதையாவது எழுதுவேன். மன வலி குறைந்தாற் போலிருக்கும்.

அப்பொழுது ஒன்றைத் தெரிந்து கொண்டேன் :

'மனசிலுள்ள பாரத்தை எழுத்து மூலம் காகிதத்தில் இறக்கி வைக்கலாம்' என்பதுதான் அது.

இப்பொழுதும் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறேன், ஒரே ஒரு சின்ன வித்தியாசத்துடன். அப்பொழுது பசித்தது... உணவு சாப்பிடும்படி இல்லை. வயிற்றுப் பசி மறக்க எழுதினேன்.

இப்பொழுதும் பசிக்கிறது. ஆனால் உணவு வயிற்றுக்கு வேண்டாம். மனசுக்குத் தேவை. மனப் பசி குறையவில்லை. எழுதுகிறேன். எழுதிக் கொண்டிருக்கிறேன்...

# சென்னைத் துறைமுகம்



● சுமார் 220 ஏக்கர் நீரின் அளவும், 441 ஏக்கர் நிலத்தளவும் கொண்டு சென்னை நகரின் கிழக்குக் கடற்கரையை தன் மையமாகக் கொண்டு - ஒரு குட்டி சாம்ராஜ்யம்போல் இயங்கி வருகிறது சென்னைத் துறைமுகம்.

● இந்தியாவின் பொருளாதாரத்தை நிலைநிறுத்த - ஆண்டு ஒன்றுக்கு 250 கோடி ரூபாய் வருமானத்தைச்சர்வ சாதாரணமாகப் பெற்றுத்தரும் சென்னைத் துறைமுகம் - இன்றைக்கு இரண்டாவது மிகப்பெரிய துறைமுகமாக விளங்குகிறது.

● கப்பலில் இருந்து இறக்குமதியான பொருட்களை அடுக்கிச் சேமித்து வைக்க 12 'வேர் ஹவுஸ்'; ஒரு பொருளை மற்றோர் இடத்திற்குக் கொண்டு முறைப்படியாக டெலிவரி எடுக்க 10 டிரான்ஸிட் ஷெட்; உணவு தானியங்களை பத்திரமாக மூடிவைக்க உணவுப் பொருள் கார்பரேஷனுக்காக மிகப் பிரம்மாண்டமான 6 ஷெட்; கொள்கலம் (CONTAINER) வந்து இறங்கவும், அதை வரிசைப்படுத்தி அடுக்கி வைக்கவும் தூய்மையான முறையில் கட்டப்பட்ட இரண்டு அரங்குகள் சென்னைத் துறைமுகத்தில் உண்டு.

● சரக்குகளை ஏற்றி - இறக்க - அவற்றைக் கப்பல் அருகே கொண்டு செல்ல - வழிவகை செய்ய தனியாக ரயில்வே 'லைன்' உண்டு. 36,359 கிலோ மீட்டர் பிராட்கேஜ் ரயில்பாதை 33,666 கிலோமீட்டர் சுற்றளவு கொண்டு 'மிக்ஸ்டு கேஜ்' - இந்த இரண்டும் இங்கு உண்டு. இதனால் காலதாமதமின்றி - சுறுசுறுப்புடன் ஏற்றுமதி - இறக்குமதி நடக்கிறது.

● லாரிகள், டிராக்டர்கள் மூலமாகவும் சரக்குகள் கையாள செம்மைப்படுத்தப்பட்ட அற்புதமான சாலைகள் சுத்தமாக இருப்பதைக் காணலாம். இதற்காக 27.5 கிலோ மீட்டர் நீளத்திற்கும் 6 கிலோ மீட்டர் அகலத்திற்கும் சாலைகள் போடப்பட்டு - அவற்றை நல்லமுறையில் பராமரித்து வருகிறது துறைமுக நிர்வாகம்.

● இந்த துறைமுகத்தில் 23 கப்பல்கள் ஒரே சமயத்தில் சரக்குகளை ஏற்றி இறக்குமதி செய்யலாம். இதைத் தவிர மூன்று கப்பல்களை 'மூரிங்' என்றவாறு உள்ளே கட்டி வைத்து அதன் மூலமும் படகுகளில் ஏற்றுமதி - இறக்குமதி செய்யலாம்.

● சென்னைத் துறைமுக நிர்வாகத்திற்கென்று இரண்டு டிரஜ்ஜர்கள், ஆறு டக், மிதக்கும் கிரேன் ஒன்று, 'லாஞ்ச்' ஒன்பது, தண்ணீர் கொண்டு செல்ல உதவும் வாட்டர் பார்ஜ் இரண்டு, 'சர்வே' செய்வதற்காக மூன்று லாஞ்ச், டம்ப் லாஞ்ச் என்ற சிறு சிறு படகுகள், நீராவி 'போட்டு'கள் உண்டு.

● சரக்குகளை கப்பலில் இருந்து இறக்கி ஏற்றவும் - இறங்கின பொருட்களை முறைப்படியாக அடுக்கி வைக்கவும் - நடமாடும் கிரேன்கள், போர்க் லிப்ட்கள், எலெக்ட்ரிக் போர்க் லிப்ட்கள், பேலோடர்கள், நிற்கும் எலெக்ட்டிரிக் கிரேன்கள், டாடா கிரேன்கள், டிரான்ஸ்பர் கிரேன்கள், டிராக்டர்கள், டிரைலர்கள் ஆகியவை அங்கங்கே உண்டு.

● கொள்கலப் பெட்டி (CONTAINER)யை இறக்கி ஏற்ற (40 டன் அளவு) உலகில் மிக நவீனமான கன்டெயினர் கிரேன்கள் நான்கு சென்னைத் துறைமுகத்தில் உண்டு. இதன்மூலம் ஒரு கப்பலை 24 மணி நேரத்திற்குள் அத்தனை கன்டெயினர்களையும் இறக்கியோ - ஏற்றியோ வைத்து விட முடியும். தாமதம் என்பது இங்கு ஒரு நிமிடம்கூட இருக்காது.

● விரைவில் எண்ணூரில் துறைமுகம் ஒன்று கட்ட ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. ஏற்கனவே ராயபுரத்தில் சிறிய மீன்பிடித் துறைமுகம் இருக்கிறது. கடல் வாணிபம் இன்றைக்கல்ல நேற்றைக்கல்ல ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நம் தமிழ்நாட்டில் புகழ்பெற்றது. இது நாட்டையும் துறைமுகத் தொழிலாளர்களையும் முன்னுக்குக் கொண்டு வருவதில் அரும்பாடுபட்டு வருகிறது. அப்படிப்பட்ட துறைமுகம் நமது இந்திய தேசத்தின் பொருளாதாரத்திற்கு முக்கியத் துணையாக நிற்கிறது என்ற பெருமையைவிட நமது சென்னை நகருக்கு அணிகலனாக விளங்குவது போற்றத்தக்கது என்றால் அது மிகையல்ல.

த.கி.ராமசாமி

# சிங்கக் கவிஞனின் சிந்தனையில்



பாவேந்தர் 'முரடர்' என்று பலராலும் எண்ணப்படுபவர். ஆனால், கொஞ்சும் மழலை உள்ளம் கொண்டவர் என்பது பலர் அறியாத செய்தி.

என் மூத்த அண்ணன் செல்வம் காக்கி நிற அரைக்கால் சட்டையுடன் மிடுக்கான பேச்சோடு வீட்டுக்குள் ஓடி ஆடிக் கொண்டிருந்தபோது சென்னையிலிருந்து வந்த பாவேந்தர் வியப்புக் குறியாய் நின்றார்.

என் அன்னையார் சாவித்திரியை அழைத்து, "என்னம்மா, கான்ஸ்டபிள் மாதிரி இருக்கான் இவன்" என்று கூறி என் அண்ணனின் அருகே சென்று, "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

"அடுத்த தடவை வர்றப்போ குதிரை, சைக்கிள் வாங்கிட்டு வரணும்" என்று கண்டிப்பான குரலில் சொன்னதும், பாவேந்தருக்கு உச்சி குளிர்ந்துவிட்டது. கெஞ்சும் போக்கை வெறுப்பவர் அல்லவா?

அடுத்தமுறை சென்னையில் இருந்து புதுவைக்கு அவர் புறப்பட்டபோது உடன் வந்த விகடம் கஜகர்ணம் ஒத்துழைப்புடன் பேரனுக்கு வேண்டிய மரக்குதிரையையும், மூன்று சக்கர சைக்கிளையும் வாடகை வண்டி ஒன்றில் ஏற்றிக் கொண்டு ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொள்ளப் போனவர் அந்த வண்டியிலேயே மறந்து வைத்துவிட்டு அன்று மாலை தொடங்கி மறுநாள் காலை வரை தேடித் திரிந்து, சென்னைப் பேருந்து நிலையத்தில் காத்திருந்துவிட்டுப்பின்னர் பேருந்தில் புதுவைக்கு வந்து சேர்ந்துள்ளார்.

காணாமல் போன பொருட்கள் எப்படியோ மீண்டும் கிடைத்து அவற்றைப் பேரனிடம் ஒப்படைத்தபோது பாவேந்தரும் ஒரு குழந்தையாகிக் குதித்தாராம் மகிழ்ச்சியாலே!

என் இரண்டாம் அண்ணனுக்கு 'தென்னவன்' என்று பெயர் சூட்டிய பாவேந்தர் 'மூத்த அண்ணனுக்காக வாங்கப்பட்ட அந்த மூன்று சக்கர சைக்கிளை மிதித்து ஓட்டி விளையாடுவது உண்டா' என்று அடிக்கடி கடிதத்தில் கேட்பாராம்.

புதுவைக்கு வரும்போது பெருமாள் கோயில் தெரு வீட்டின் முற்றத்தில் அமர்ந்தபடி தென்னவனை சைக்கிள் ஓட்டச் செய்து பார்ப்பதில் மிகுந்த மகிழ்ச்சி அடைவார். தாமே சைக்கிளை ஓட்டத் தெரிந்து கொண்டதுபோல் ஓர் உவகை. பாவேந்தருக்கு சைக்கிள் ஓட்டத் தெரியாது.

அடர்ந்த முடிக்கற்றை நெற்றியில் வந்து விழும்படி குழந்தை ஒன்று அன்னையின் மடியில் தவழ்ந்து கொண்டிருந்தது. ஊரிலிருந்து வந்த பாவேந்தர் குழந்தையைக் கையில் ஏந்திக் கொண்டு முகத்தை உற்று நோக்கினார். குழந்தையின் முடியை நீவியபடி "நூதனமான பையன்" என்றுகூறி மகிழ்ந்தார். "உங்க பேரையே வைக்கலாம்னு இருக்கோம்" என்றார் தந்தை. பாவேந்தர் இடைமறித்து "ஊஹூம். பாரதி என்று வை" - முடித்துவிட்டார்.

தம் பெயரையே வைக்க விரும்பும் பாட்டன்மாரே பெரும்பான்மையாக இருக்கும் காலத்தில் தாம் மதித்த பெருங்கவிஞரின் பெயரைச் சூட்ட விரும்பிய இந்தப் பாட்டன் தனிவகைதானே.

அந்தக் குழந்தை நானேதான். அவர் விருப்பப்படிதான் நான் பாரதியானேன்.

தம் மூத்த மகளுக்கு அக்கால வழக்கப்படி 'சரஸ்வதி' என்று பெயரிட்டுள்ளார் பாவேந்தர். பாரதியின் நினைவாக வைக்கப் பட்டிருக்கலாம் என்று கருதத் தோன்றுகிறது.

தம் மகன் புலவர்களால் பாராட்டப்படுகின்ற வகையில், மொழிக்கு முதலில் வாராத எழுத்துகளை ஒதுக்கிவிட்டு வாழ்த்துக்கு இசைந்த சொல்லாய் அமையும்படி 'கோபதி' என்று பெயரிட்டுள்ளார். அடுத்த புதல்வியர்க்கு வசந்தா (வேனில்), ரமணி எனவும் பெயர் சூட்டிய பாவேந்தர் 1944 ஆம் ஆண்டு தனித்தமிழ்க் கொள்கையில் முழுதாய் தம்மை ஆட்படுத்திக் கொண்டு அதற்கேற்றபடி அவரின் முதல் பேரனுக்கு "புகழேந்தி" என்று சூட்டியதுதான் அவருடைய தூய தமிழ்க் கொள்கையின் முதல் முத்திரை. இதற்குப் பின்னரே புகழேந்தி என்ற பெயர் தமிழ் நாட்டில் பரவிற்று என்று சொல்லலாம்.

புலவரில் சிறந்த புகழேந்திக்குப் பிறகு பாவேந்தரின் அடுத்த பேரன் "பாரி". இவர்களைத் தொடர்ந்து மல்லிகை, தமிழ்ச்செல்வம், பாண்டியன், சேரன், செங்குட்டுவன் என்றெல்லாம் பெயர் சூட்டினார். பின்னர் பிறந்தவர்களுக்கும் அவரின் எண்ணப்படியே மணிமேகலை, முல்லைக்கொடி, இளமுருகு, அன்புமணி என தமிழ்ப்பெயர்களாகவே விளங்குகின்றன.

அந்த சிங்கக் கவிஞனின் சிந்தனையில் உருவான 'புரட்சிக்கவி' கதைத்தலைவி "அமுதவல்லி", "அமுதவல்லி என் ஆசைக்கொரு பெண்" என்று தொடங்கும் அந்தப் பாவியத்தில் முழு நிலவு ஒரு முதன்மையான திருப்பத்தை உண்டாக்கும்.

ஆசைக்கொரு பெண்ணாக எங்கள் வீட்டில் ஒரு முழு நிலவன்று பிறந்த என் தங்கையின் பெயர் 'அமுதவல்லி'. எண்ணிப் பார்க்கிறேன்... பெயரில் என்ன இருக்கிறது என்று தமிழ் மக்கள் பலர் பேசத் தொடங்கிவிட்ட இக்காலத்தில் அந்தச் சிங்கக் கவிஞனின் சிந்தனையில் எப்படிப்பட்ட கொள்கைப் பிடிப்பு இருந்திருக்கிறது. ✿

கோ. பாரதி
(பாரதிதாசனின் பேரன்)










# ஒலிப்பேழை

## வரவு எட்டணா செலவுப்பத்தணா

சந்தோஷம், பேப்பரப் பாத்தியா, ஏறாத சரக்கு, நான் ஒன்று, ஆசை மச்சான், சொன்னான் அந்த கண்ணதாசன் ஆகிய அருமையான ஆறு பாடல்களை இந்த கேசட்டில் நாம் கேட்கலாம். எஸ். ஜானகி, சந்திரபோஸ், மலேசியா வாசுதேவன், சித்ரா, சுவர்ணலதா, வைரமணி, டி.எல். தியாகராஜன் ஆகியோர் சந்திரபோஸ் இசையில் இந்தப் பாடல்களை பாடியுள்ளார்கள். பாடல்களை கவிஞர் வாலி எழுதியிருக்கிறார்.

## தாமரை

தேனிசைத் தென்றல் தேவாவின் இசையில் கவிஞர் வைரமுத்து எழுதிய இனிமையான ஆறு பாடல்கள் இந்த கேசட்டில் இடம் பெற்றுள்ளன. எங்கே தேன்துளி, ஆட்டு மந்தைய ஒட்டி, மதுரை வீரன் சாமி, முக்கா முக்கா மரக்கா (தேவா இயற்றியது), வெள்ளைக் கிளி ஒருத்தி, அத்தி மரம் பூத்தது ஆகிய பாடல்களை மனோ, சுனந்தா குழு, சுவர்ணலதா, எஸ்.பி. சைலஜா, சித்ரா, சந்திரபோஸ் ஆகியோர் பாடியுள்ளனர்.

## சிந்துபாத்

தேனிசைத் தென்றல் தேவா இசையில் டி.எம். ஜெயமுருகன் எழுதிய இனிமையான ஆறு பாடல்கள் இந்த கேசட்டில் உள்ளன. எஸ்.பி. பாலசுப்ரமணியம், சித்ரா, ரங்கபாபு, மனோ, எஸ். ஜானகி, கிருஷ்ணராஜ், சுந்தர்ராஜன், மலேசியா வாசுதேவன் ஆகியோர் "வா... வா... கன்னித்தேன், ஆட்டம் ஆடுவாங்கோ, சிந்துபாத் கோட்டையிலே, ஐஞ்சனக்கு, சின்னப் பொண்ணு ஆகிய பாடல்களைப் பாடியுள்ளனர். கேட்கத் தூண்டும் பாடல்கள் இவை.

## எங்க வீட்டு மாப்பிள்ளை

சந்திரலோகத்து, ஆத்தாடி குதிரை வண்டி, இங்கொரு வானம்பாடி, தென்மதுரைத் தமிழே, மேலே வட்ட நிலா, என் காதல் நிலா, என்னுயிர் மன்னவா ஆகிய பாடல்களை கவிஞர் வாலி, செல்வமுருகன் எழுதியிருக்க... எஸ்.பி.பி., சித்ரா, சுஜாதா, மலேசியா வாசுதேவன் ஆகியோர் இனிமையாகப் பாடியுள்ளார்கள். செவிகளைக் குளிர வைக்கும் பாடல்களின் தொகுப்பு இது. எஸ்.பி. வெங்கடேஷ் இசையமைத்துள்ளார்.

## மம்மி மம்மி

இசையமைப்பாளர் ஆதித்யன் இசையில் பிறைசூடன் எழுதிய இனிமையான ஐந்து பாடல்கள் இந்த இசைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

லம்பாடி சின்னக்குட்டி (சுரேஷ் பீட்டர்), ஆந்திரா கட்டழகி (சுவர்ணலதா) தொடத் தொட (மனோ, சுவர்ணலதா), காதல் வலை (சித்ரா), மம்மி மம்மி (கல்பனா) ஆகிய இனிமையானப் பாடல்கள் இந்தத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

(மேற்கண்ட ' ஐந்து கேசட்டுகளும் வெளியீடு : பிரமிடு ஆடியோ, 73, நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை – 34. கேசட் ஒவ்வொன்றும் விலை ரூ. 29.00)

அறந்தாங்கி சங்கர்

# ஸ்ரீ ராஜமாதங்கீ ஸஹித அஷ்டலக்ஷ்மி தீப பூஜை

(2 பாகம்)

'ஸ்ரீராஜ மாதங்கீ ஸஹித அஷ்டலக்ஷ்மி தீப பூஜை' சர்வ ஐஸ்வர்யத்தையும் சர்வ மங்களத்தையும் தரும் என்பது சத்ய வாக்கு. அம்பாளின் பரிபூரண கிருபையுடன் இந்தப் பூஜையை செய்யும் எல்லோருக்கும் சாப பாப தோஷங்களும் சரீர ரோகங்களும் நீங்கும் என்பது நிதர்சனம்.

'ஸ்ரீ மீனாட்சி உபாஸகர் மந்த்ர மூர்த்தி தாசன் ஸ்ரீமான் உ.வே. வெங்கடேஸ பட்டாச்சாரியார் இப்பூஜைக்கான மந்த்ரங்களை கேசட் வடிவில் தந்திருக்கிறார். கேசட்டில் உள்ள மந்த்ரங்களை திரும்பச் சொல்லும் விதத்தில் ஒரு புத்தகமும் இலவசமாகத் தரப்பட்டுள்ளது.

ஸ்ரீகவியின் வடிவமைப்புடன் 'தி மதர் மந்திர்' (27, நரசிம்மபுரம், மயிலாப்பூர், சென்னை – 4) இக்கேசட்டுகளைத் தயாரித்துள்ளது. விலை ரூ. 70/-.



☆ சொகுசு சுற்றுலா வளர்ச்சிக் கழகப் பேருந்து ☆ உலகின் அழகிய இரண்டாம் கடற்கரையில்...

அண்ணாசாலை சுறுசுறுப்புக்குத் தன்னை ஆயத்தப்படுத்திக் கொண்டிருந்தது.

சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் ஊழியரிடம் டிக்கெட்டைக் காண்பித்து வருகையை உறுதி செய்து கொண்டோம்.

"உட்காருங்கள் ஸார். இப்போது பஸ் வந்துவிடும்" என்றார். நேரம் 7.15.

இந்திய நேரப்படி சரியாக 7.50 மணிக்குப் பேருந்து வந்தது.

பெங்களூரில் இருந்து வந்த 26 பள்ளி மாணவ - மாணவியர். அவர்களுக்குத் துணையாக 4 ஆசிரியைகள். தூத்துக்குடியில் இருந்து கணேஷ். பம்பாயிலிருந்து அவினாஷ். நியூயார்க்கைச் சேர்ந்த இரு பெண்மணிகள். லண்டனில் இருந்து வயதைக் கணக்கிட முடியாத அசத்தலில் ஒரு பெண். இவர்களுடன் நாம்.

வழிகாட்டியாக நமக்கு அறிமுக மானவர் ராஜலட்சுமி. எழில்மிகு சென்னையின் புள்ளி விவரங்களை விவரித்து, தற்போதைய முதல்வர், கவர்னர் பெயர்களை அறிவித்து

# நகர்வலம்

**1639** ஆம் ஆண்டு முதல் வளரத் தொடங்கிய சென்னை. 172 கி.மீ. பரப்பளவு உடைய சென்னை. இந்தப் பரப்பளவை விஸ்தீரணப்படுத்திக் கொண்டே போகும் சென்னை. இந்திய நகரங்களில் நான்காவது முக்கிய நகரமான சென்னை. தமிழ்நாட்டின் தலைநகரான சென்னை.

இந்தச் சென்னையைச் சுற்றிப் பார்க்க சின்ன ஆசை. ஒரே நாளில் முடிகிற விஷயமா? 'அரை நாளில் முக்கிய இடங்களுக்கு அழைத்துச் செல்கிறோம்' என்றது 'தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின்' அறிவிப்பு. கட்டணம் ரூபாய் 60/-

காலை 7.30 மணி முதல் 1.30 மணி வரை பயணம். டிக்கெட்டை முன் பதிவு செய்து குறிப்பிட்ட தினத்தன்று ஆஜரானோம்.







☆ நியூயார்க் பெண்மணி லிப்பெரிக்

பயணமாகிற இடங்களை வரிசைப் படுத்தினார்.

முதலில் மெரினா கடற்கரை. உலகின் இரண்டாவது அழகிய கடற்கரை. போகிறபோது வலது புறம் சென்னை பல்கலைக்கழகம். இடதுபுறம் அண்ணா, எம்.ஜி.ஆர். சதுக்கங்கள், வலதுபுறம் பொதுப் பணித்துறை அலுவலகம், இடது புறம் பாரதியார் சிலை, வலது புறம் மாநிலக் கல்லூரி என்று சொல்லிக்கொண்டே பயணம் தொடர இடது - வலது புறங்களில் தலையை ஆட்டிக் கொண்டே இருந்தோம்.

ஐ.ஜி. அலுவலகத்தின் எதிரே கலங்கரை விளக்கத்தின் முன்பு பேருந்து நிற்க - மெரினாவைப் பார்க்க 30 நிமிடங்கள் அனுமதிக் கப்பட்டது. நம்முடன் பயணித்த மாணவர்கள் துள்ளி ஓடினர். கடற்கரை மணலில் கால்களைப் புதைத்து, ஓடி வந்த அலைகளில் முழங்கால் வரை நனைத்து திரும்பி வருவதற்குள் பேருந்தி லேயே அமர்ந்திருந்த நியூயார்க் பெண்மணி லிப்பெரிக்குடன் பேசும் வாய்ப்பு கிடைத்தது.

"இந்தியா பிடித்திருக்கிறதா?"

"ரொம்ப!"

"சென்னை பிடித்திருக்கிறதா?"

"நிறைய!"

"எப்படி?"

"மக்கள் மிக அன்பானவர்கள். இட்லி சுவையாக இருக்கிறது!".

லிப்பெரிக் பிரெஞ்சு நாட்டு பிரஜையைக் காதலித்து மணந்து கொண்டவர். திருமணமாகி 25 வருடங்கள் ஆகின்றன. குழந்தை

☆ வெளிநாட்டவரைக் கவரும் தென்னக கோபுர தரிசனம்.

☆ வழிகாட்டும் ராஜலட்சுமியுடன் வெளிநாட்டுச் சுற்றுலா பயணிகள்





☆ சுற்றுலா தலமாக வள்ளுவர் கோட்டம்

இல்லை. வருடத்திற்கு இருமுறை உலகை வலம் வருகிறவர். இந்தியா நிறையப் பிடித்துப் போய் இரண்டாம் முறையாக வருகை புரிந்திருக்கிறார். கட்டடக் கலையில் ஆர்வம் அதிகம். தென்னக சிற்ப வேலைப்பாடுகளில் சொக்கி விடுகிறார்.

"அமெரிக்கா எப்படி இருக்கிறது?"

"தான், தனது, நான், எனது, என்னுடைய என்கிற போக்கில் போய்க் கொண்டிருக்கிறது. வன்முறை மலிந்துவிட்டது".

"டைவர்ஸ் அதிகமிருக்கிற நாட்டில் குழந்தைகள் இல்லாமலும் கணவரை விட்டுப் பிரியாமல் இருக்கிறீர்களே, எப்படி?"

"அவர் அன்பானவர். என் மீது உயிரையே வைத்திருக்கிறார். அன்பு எங்களைப் பிரிக்க விடாமல் காக்கிறது".

கைகளில் காலணிகளை எடுத்து வந்த பயணிகள் பேருந்தில் ஏறினர். நேரம் 8.45.

அகில இந்திய வானொலி நிலையம், சாந்தோம் சர்ச்சைத் தொட்டு கச்சேரி சாலையில் பயணித்தது பேருந்து. மயிலை கபாலீஸ்வரர் கோயிலின் தேரடிக்குப் பின் நின்றது. காலை 9.00 மணி.



☆ உடன் வந்திருந்த மாணவ மாணவியர்

ராஜா அண்ணாமலைபுரத்தில் நிர்மாணிக்கப்பட்டுள்ள வட சபரி எனப் புகழப்படும் ஸ்ரீ ஐயப்பன் ஆலயத்தில் புதிதாக நிர்மாணிக்கப்பட்டுள்ள வெள்ளித் தேர் 15 அடி உயரம்! ( ஸ்ரீ ஐயப்பன் ஆலயக் குடமுழுக்கின் போது வெள்ளோட்டம்.)



காலணிகள் பேருந்திலேயே கழட்டி விடப்பட்டன. கோபுர தரிசனமே வந்திருந்த அத்தனை பேருக்கும் திருப்தியைத் தந்துவிட - பரவச முகத்துடன் பிராகாரத்தில் நுழைந்து வலம் வந்து மூலவரை தரிசித்து வெளியே வந்தபோது பிராகாரத்திலேயே நின்றிருந்தனர், வெளிநாட்டுப் பயணிகள்.

மூலஸ்தானத்தில் அவர்களுக்கு அனுமதியில்லை.

காஞ்சிபுரத்தில் இதேபோல் அங்கிருந்தவர்கள் சொல்ல - ஒரு வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணி அங்கேயே சண்டை போட்டு இருக்கிறார். "எங்கள் சர்ச்சில் அனைத்து மதத்தினரும் வருகிறார்கள். அனுமதிக்கிறோம். உங்களுக்கென்ன வந்ததாம்?" என்று கோபப்பட்டிருக்கிறார். ஆனாலும் பிரயோஜனம் இல்லை.

பணம் கொடுத்தால் அனுமதிப்பார்கள் என்றார் அருகில் இருந்த உள்ளூர் ஆசாமி.

நம்முடன் வந்தவர்கள் மூலஸ்தானத்திற்குள் வருகிற மூடில் இல்லை. கட்டட வேலைப்பாடுகளை அணு அணுவாய் ரசித்துக் கொண்டிருந்தனர், ஆனந்தமாய்.

"திருப்பதியில் முன்பெல்லாம் இந்த மாதிரி மூலஸ்தானத்தில் அனுமதிக்க மாட்டார்கள். இப்போது அனுமதிக்கிறார்கள். இவ்வளவு தூரம் வரும் வெளிநாட்டுப் பயணிகளை அனுமதிப்பதில் தவறு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை" என்றார் வழிகாட்டி ராஜலட்சுமி.

பி.எஸ்ஸி., படித்தவர். கும்பகோணம் சொந்த ஊர். சுற்றுலாப் பயணிகளின் வழிகாட்டியாகத் தொழிலைத் தொடங்கி இரண்டு வருடங்கள் ஆகின்றதாம். ஒரு முறைக்கு வழிகாட்டியாக வருவதற்கு 40 ரூபாய் சம்பளம். நிரந்தரமில்லாத தொழில். வந்தால் வேலை.

"இந்தத் தொழிலுக்கு எப்படி வந்தீர்கள்?"

"என் சிநேகிதி சொல்லிச் சேர்ந்தேன். விருப்பப்பட்டு ஏற்றுக் கொண்ட தொழில். தினம் தினம் புதுப்புது மனிதர்கள்; புதுப்புது அனுபவங்கள்".

"நீங்கள் சென்னையை மிகைப்படுத்திச் சொல்கிறீர்கள். உண்மை தானே?" மௌனமானார்.

அவரது மௌனத்தின் அர்த்தம் - "என்ன பண்றது ஸார். போகிற எந்த இடத்திலும் பராமரிப்பு சரியில்லை. விவரிக்கிற மாதிரி புதுமையாக ஒன்றுமில்லை. ஏதோ ஒப்பேற்றிக் கொண்டு இருக்க வேண்டி உள்ளது" என்று சொல்லாமல் சொல்லியது.

அந்த மௌனத்தின் உண்மை, சென்னை நகரை வலம் வந்து கொண்டிருக்கும் கூவத்தைக்கூட எட்டிப் பார்க்கிற மாதிரி சொல்கிற கலை, நிச்சயம் சுற்றுலா வளர்ச்சிக் கழக வழிகாட்டியான ராஜலட்சுமிக்கு சாத்தியமாகி இருக்கிறது.

இவரைப் போல மேலும் 40 வழிகாட்டிகள் கழகத்தில் பணியாற்றுகிறார்கள். அதில் 4 பேர் பெண்கள்.

9.30க்கு கபாலீஸ்வரர் ஆலயத்தை விட்டு அடையாற்றைத் தாண்டி கிண்டி பாம்புப் பண்ணை.

அனுமதிக் கட்டணம் ரூபாய் ஒன்றுக்கான தொகை, நாம் கொடுத்த ரூபாய் 60 இல் அடக்கமாம். உள்ளே சென்றோம். சென்னைக்குப் பெருமை சேர்த்த பாம்புப் பண்ணையைப் பார்க்க பரிதாபமாக இருந்தது.

கூண்டுகள் இருக்கிற எண்ணிக்கையைவிடப் பாம்புகளின் எண்ணிக்கை குறைவு.

23.2.87 முதல் அரசு ஆணைப் படி பாம்பிலிருந்து விஷம் எடுக் கிற காட்சி நிறுத்தி வைக்கப் பட்டுள்ளது.

கூண்டுகளில் எட்டிப் பார்த்து பாம்பைத் தேட வேண்டிய நிலை.

நம்முடன் வந்த மாணவ குழாம் ஓடி ஆடி ரகளை பண்ண - அமெ ரிக்கப் பெண்மணியுடன் லண் டன் மாதுவும் வியந்தனர். "என்ன அருமையான குழந்தைகள் ஆசிரியர் சொல்படியெல்லாம் கேட்கின்றன!" என்றனர்.

அவர்கள் ஆசிரியைகளைக் கிண்டலடித்துக் கொண்டிருந்த பாஷை, அந்த ஆங்கில மாது விற்குத் தெரிய வாய்ப்பில்லை.

கோட்டூர்புரத்தைக் கடந்து அண்ணாசாலையில் நுழைந்து தி.நகர் திருமலைப் பிள்ளை சாலைக்கு எதிரே வள்ளுவர் கோட்டம். வழி நெடுக இடது - வலது புறங்களில் இருந்த இடங்களைப் பார்க்கத் தலையை ஆட்டி ஆட்டிச் செம வலி.

நட்ட நடுப்பகலில் 1976 ஆம் ஆண்டு திறக்கப்பட்ட வள்ளுவர் கோட்டம்.

அரங்கம், குறள் மணி மாடம், வேயா மாடம் (மாடி), வள்ளுவர் திருத் தேருடன் கம்பீரமாய் நின்ற வள்ளுவர் கோட்டத்தை விவரித் தார் வழிகாட்டி.

"ஆசியாவிலேயே பெரிய, 4000 பேர் ஒரே நேரத்தில் அமரக் கூடிய அரங்கம் இது" என்றார்.

"4000 பேர் உட்கார முடியா துங்க இந்த இடத்தில்" என்றோம்.

அறிவிப்புப் பலகையைக் காட்டினார். 4000 பேர் அமர்ந்து ரசிக்கிற 220 அடி நீளம், 140 அடி அகலம் கொண்ட இடத்துடன் 106 அடி உயரமுள்ள திருத்தேர் பற் றிய குறிப்புகளுடன் அறிவிப்புப் பலகை!

வள்ளுவர் கோட்டம் முழுக்க சுற்றுலாப் பயணிகள் வலம் வந் தனர். முக்கியமான, முக்கியமில் லாத இடங்களில் எல்லாம் 'காந்தி சரோஜா', 'கார்த்தி-கஸ்தூரி' என்ற அடுப்புக் கரி எழுத்துகள் காதலாகி நின்றன. உலகையே மறந்து தோளுடன் மார்பு சாய்த்து சில காதல் ஜோடிகள்.

சாயம் கலக்கப்பட்ட ஐஸ் துண்டுகள் வேகமாய் விற்பனை யாகிக் கொண்டிருந்தன.

மீண்டும் பயணம். எழும்பூர் மியூசியத்திற்குள் நுழைகிறோம். இந்தியாவில் உள்ள பெரிய மியூசி யங்களில் இரண்டாவது இடத் தைத் தக்க வைத்துக் கொண்டிருக் கிறது, சென்னை மியூசியம். 40 நிமிடங்கள் அனுமதிக்கப்பட்டன.

மியூசியத்திற்குள் கலைப் பொருட்களுக்குப் பாதுகாப்பாக ஊழியர்கள்.

வெளிநாட்டுப் பயணிகளைக் கண்டதும் அவர்களின் கண்கள் அகல விரிகின்றன. ஒட்டை ஆங்கி லத்தில் வெளிநாட்டுப் பயணி களின் கேள்விகளுக்கு 'யெஸ், யெஸ்' என்கிறார்கள். தலையைச் சொறிந்து விட்டுப் பல் இளிக்கக் கை நீட்டுகிறார்கள். அரசாங்கம் தரும் சம்பளம் போக, 'தினச் செலவு'க்கு ஆளுக்குக் கொஞ்சம் தேறி விடுமாம்.

திமிங்கல எலும்புக் கூடு குழந்தைகளைக் கவர்ந்து 'வாவ்' சொல்ல வைத்தது.

அமராவதியில் கண்டு எடுக்கப் பட்ட அகழ்வாராய்ச்சிப் பொருட் கள் மதிப்பில்லாத பொக்கிஷம்.. நிறையவே இருக்கின்றன. பார்க்கத்தான் நேரமில்லை.

தூத்துக்குடியைச் சேர்ந்த கணேஷ் நம்முடன் வந்தார்.

"சென்னைக்கு நாமும் வந் தோம்; பார்த்தோம் என்று சொல்லக்கூடாதென்று குறிப்பிட்ட முக்கியமான இந்த இடங்களைப் பார்த்தேன் என்கிற திருப்தி இருக் கிறது. ஆட்டோவிலோ, பஸ்ஸிலோ வந்தால் அலைச்சல் அதிகம். பணமும் விரயமாகும். அதனால் சுற்றுலா வளர்ச்சிக் கழக பஸ்ஸில் வந்திருக்கிறேன்" என்றார்.

கடைசியாக நாம் சென்ற இடம் புனித ஜார்ஜ் கோட்டையில் இருந்த அருங்காட்சியகம். உள்ளூரில் இருக்கிற சென்னைவாசிகளே இவ் விடத்தைப் பார்த்திருப்பார்களா என்பது சந்தேகமே!

கிழக்கிந்திய கம்பெனியாரின் நினைவுச் சின்னங்கள் மிக நேர்த்தி யாகக் காட்சிப் பொருளாகியிருக் கின்றன.

1798 ஆம் ஆண்டு தாமஸ் டேனியல் வரைந்த சித்திரங்கள், 1809 ஆம் ஆண்டு ஹென்றி சால்ட் வரைந்த சித்திரங்கள் இன்னும் மங்கா ஒளிவீசிக் கொண்டிருக் கின்றன.

ஆயில் பெயின்ட்ஸ் அற்புத ரூபங்களில் மிளிர்ந்தன. யூனி பார்ம், மெடல்கள், நாணயங்கள், சிற்பங்கள், பல்லக்கு, துப்பாக்கி கள், போர்க் கருவிகள், பீரங்கிகள், குண்டுகள், இந்தோ-ப்ரெஞ்ச் கலாசாரத்தைக் கண்முன் நிறுத் தின.

பம்பாயைச் சேர்ந்த அவினாஷ் ஆயில் பெயிண்டுகள் அறையில் இருந்து வர நிறைய நேரமானது.

சென்ற இடத்தில் சிறப்பான இடமாக புனித ஜார்ஜ் கோட்டைக் குள்ளிருக்கும் அருங்காட்சியகம் திகழ வெளியேறினோம்.

மரத்தடியில் முதல்வருக்கு பவ்யமாய் விண்ணப்பம் எழுதிக் கொண்டிருந்தது சிறு சிறு கூட்டம். நேரம் மதியம் 1.20.

பிறந்து வளர்ந்த சென்னை யைச் சுற்றுலா வளர்ச்சிக் கழகத் துணையுடன் சுற்றிப் பார்க்கிற போது மாறுபட்ட அனுபவம். இப்படியெல்லாம் இருக்கிறதா சென்னைக்குள்? இருக்கிறது, இன் னும் நிறைய இருக்கிறது. இது நிஜம்.

தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழக அலுவலகத்தில் பேருந்தை விட்டு இறங்கிய போது வெளி நாட்டுப் பயணியரை சூழ்ந்து கொண்டனர் நம்மூர் ஆசாமிகள். பக்கத்திலேயே இருந்த கலைப் பொருட்கள் கூடத்திற்கு அழைத் துச் செல்லக் காசு கேட்டனர்.

வெளிநாட்டவர் போற்றுகிற இந்தியாவில் - இட்லிக்குப் புகழ் பெற்ற தமிழகத்தில் - மனித நேயத்தை சென்னை மக்களிடம் ரசிக்கிற - அவர்களிடம் இப்படிப் பட்ட இடைத் தரகர்களின் ராஜ்யம் நம் மதிப்பைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தவிடுபொடியாக்கு கிற கலக்கத்தில் வழிகாட்டிக்கு நன்றி சொல்லி விட்டுப் புறப் பட்டோம்.

நகர்வலம் வந்தவர்கள் :

**நாகராஜகுமார், யோகா**

# வட சபரி



☆ புனித 18–ஆம் படித் தோற்றம்

அவதார நாயகரான ஐயப்ப சுவாமி எங்கே, எப்போது தம் அதிசயத்தை நிகழ்த்துவார் என்று சொல்ல முடியாது.

ஐயப்பன் ஒரு ராஜகுமாரர் தானே. பந்தள நாட்டு அரசரிடம் தமக்குச் சபரிமலையில் ஒரு கோயில் அமைக்குமாறு அருளிய ஐயப்பன் இப்பொழுது செட்டி நாட்டு அரசருடைய குமாரரையும் தமக்கு ஓர் ஆலயத்தை சென்னை, இராஜா அண்ணாமலைபுரத்திலும் அமைக்குமாறு அருளிவிட்டார் போலும்.

சபரிமலையில் சந்நிதானத்தின் திருமுற்றத்து இடது பகுதியில் அமைந்துள்ள கன்னி மூலை கணபதி கோயில். கணபதி கோயிலுக்குச் சற்றுத் தள்ளி நாகராஜர் கோயில்.

வலது பகுதியில் ஐயப்பன் கோயிலுக்குச் சற்றுத் தள்ளி மாளிகைபுரத்து அம்மன் கோயில்.

குறிப்பிட்ட கால – நேரங்களில் மட்டுமே, இருமுடி கட்டிச் செல்ப வர்கள் மட்டுமே செல்லும் சக்தியம் நிறைந்த புனித 18 படிகள்.

சபரிமலையில் அனுபவிக்கிற ஆன்மிக உணர்வுகள் அனைத்தும் சென்னை, இராஜா அண்ணாமலை புரத்திலுள்ள ஐயப்பன் கோயிலை வலம் வரும்போது நம்முள் ஊடுருவுகிறது.

இப்படிப்பட்ட ஓர் ஆலயத்தை – சபரிமலைக் கோயிலுக்கு ஒப்பான ஒரு கோயிலை, தர்மமிகு சென்னை என்று போற்றப்படும் தமிழகத்தின் தலைநகரில் உருவாக்கியுள்ளது மிகப் பெரிய சரித்திரமே. மாபெரும் அதிசயமே.

சென்னை, இராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீ ஐயப்பன் திருக்கோயில் திருப்பணிக் குழுத் தலைவர் டாக்டர் எம்.ஏ.எம். ராமசாமி அவர்களைச் சந்தித்தோம்.

"எல்லார் வாழ்க்கையிலும் அதிசயங்கள் நடக்கும் என்று சொல்ல முடியாது. சிலர் வாழ்வில் எப்போதாவது இறைவன் அதை உண்டாக்குகிறான்.

"1973ஆம் ஆண்டு என் வாழ்வில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. அதற்கு முன்னர், நண்பர்கள் சிலர் வீட்டில் நடந்த ஐயப்ப பூஜையில் நான் கலந்து கொண்டதுண்டு. பின்னர் என் இல்லத்திலேயே ஐயப்ப சுவாமி பூஜை பெரும் அளவில் நடைபெறும் என்று நான் அப்பொழுது எண்ணியதில்லை.

"1973ஆம் ஆண்டில் முதன் முதலில் நான் சபரிமலைக்குப் போவது என முடிவு செய்தேன். என்னைத் தூண்டியவர் ஆடிட்டர் சம்பத்குமார். அந்த முடிவு என்னைச் சுற்றி உள்ளவர்களுக்கும், நண்பர்களுக்கும், என் நலனில் அக்கறை உள்ள பெரியவர்களுக்கும் மிகுந்த மகிழ்ச்சியைத் தந்தது.

"என்றாலும் சபரிமலை யாத்திரைக்குரிய, மிகுந்த கட்டுப்பாடு





களுக்குரிய விரதத்தை நான் மேற் கொள்ள முடியுமா என்ற ஐயம் அவர்களுக்கு இருந்ததையும் நான் அறிவேன்.

"ஆனால், அந்த ஐயப்ப சுவாமி அருளால் அவர்களெல்லாம் வியப் படையும்படியாக விரதத்தைக் கடைப்பிடித்தேன்.

"நண்பர்கள் குழுவோடு சபரி மலைக்குச் சென்றேன். மெய்யான தெய்வமும் மேலான தெய்வமு மான ஐயப்ப சுவாமியை நான் கண்டபோது ஒரு பேரொளிப் பிழம்பாகவே கண்டேன். உடல் சிலிர்த்தது; உள்ளம் சிலிர்த்தது. அப்பொழுதே, அந்தப் பெரு மான் முன்னிலையிலேயே, என் னுள் ஓர் எண்ணம் பளிச்சிட்டது.

"இதுபோலவே ஒரு கோயிலை ஐயப்ப சுவாமிக்குச் சென்னையில் கட்ட வேண்டும் என்ற எண்ணம் தான் அது. எண்ணம் தோன்றி யது என்று குறிப்பிடுவதைவிட, அந்த எண்ணத்தை அவதார நாயகர் தம் சந்நிதியிலேயே தோற்றுவித்தார் என்றே சொல்ல லாம்.

"அன்று ஐயன் தோற்றுவித்த எண்ணம்தான் இராஜா அண்ணா மலைபுரம் ஸ்ரீ ஐயப்ப சுவாமி கோயிலுக்கு வித்தாக வேரூன் றியது. இன்று, வித்தகம் நிறைந்த சத்தியம் மிகுந்த சபரி கோயில் போன்றதொரு கோயிலாக சென்னையில் உருப் பெற்றிருக் கிறது.

"ஐயப்ப சுவாமிக்கு ஆலயம் எழுப்ப வேண்டும் என்ற என் எண்ணத்தை அறிந்ததும், என் பெருமதிப்பிற்குரிய தந்தையார், செட்டி நாட்டரசர் அவர்கள் ஆல யம் கட்ட இடம் தந்து உதவினார்.

(பந்தள ராஜாவின் மகனாக வளர்ந்து அதிசயங்கள் புரிந்து, சபரியில் ஆலயம் கொண்ட ஐயனின் கோயிலுக்குச் செட்டி நாட்டு இராஜா அவர்கள் இடம் தந்தது மிகப் பொருத்தமே).

"என் முப்பாட்டனார் முத் தையா செட்டியார் அவர்கள், பாட்டனார் செட்டி நாட்டரசர் அண்ணாமலை வள்ளல் அவர் கள், என் தந்தையார் செட்டி நாட் டரசர் முத்தையவேள் அவர்கள் ஆகியோர் தொடர்ந்து செய்து வந்த புண்ணியச் செயல்கள்தாம் நானும் இந்தப் புண்ணியச் செய லில் ஈடுபடக் காரணம்" என்றே எண்ணுகிறேன்.

பெருமதிப்பிற்குரிய இராஜா அவர்கள் இடம் தந்த பின்னர், இராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீ ஐயப்ப சுவாமி திருக்கோயில் திருப்பணிக்குழு அமைக்கப் பட்டது.

அக்குழுவினரின் முடிவுப்படி, இக்கோயில் சபரியில் அமைந் துள்ள சாஸ்தாவின் கோயிலைப் போலவே, எந்தவிதச் சிறு மாறு தலுமின்றி அமைக்கப்பட் டுள்ளது.

ஐயனின் திருக்கோயிலான இராஜா அண்ணாமலைபுரம் ஆல யத்தின் ஒவ்வோர் அடி வளர்ச்சி யிலும் டாக்டர் எம்.ஏ.எம். ராம சாமி அவர்கள் தனி முத்திரை யைப் பதித்து வருவதைக் கண்டு நாம் மெய்சிலிர்த்தோம்; உள்ளம் பூரித்தோம்.

வட சபரியாகத் திகழும் சென்னை, இராஜா அண்ணா மலைபுரம் அருள்மிகு ஸ்ரீ ஐயப்ப சுவாமி திருக்கோயிலுக்கு 27.3.94 அன்று ஜீர்ணோத்தாரண அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகம்.

மகா கும்பாபிஷேகம் சர்வ சாதகம் - சபரிமலை பிரதான தந்திரி பிரம்மஸ்ரீ கந்துரு டி.கே. மஹேஸ்வர தந்திரி.

15 அடி உயர வெள்ளி ரதம் உற்சவ மூர்த்தியின் பவனிக்காக உருப்பெற்றுள்ளது, ஐயப்பனின் அற்புத மகிமையே.

தொலை தூரத்திலுள்ள சப ரிக்குச் செல்ல முடியாதவர்கள், மலை ஏற முடியாதவர்கள் - ஏன், அங்கு செல்பவர் அனைவரும் கூட இங்கு எழுந்தருளியுள்ள ஐயப்ப சுவாமியை எளிமையாக வந்து தரிசித்துப் பலன் பெற -

இவர்களோடு தாய்மார்கள், குழந்தைகள், வயோதிகர்கள் அனைவரும் வந்து தரிசித்து பலன் பெற - சிறப்படையும் தத்து வம் மிகுந்த, சக்திகள் நிறைந்த ஆலயம்தான், சென்னை இராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீ ஐயப்ப சுவாமி ஆலயம்!

ஆலய அழகை, சிறப்பை, நேர்த்தியை நாம் விளக்குவதைவிட நீங்களும் ஒருமுறை தரிசித்து ஆனந்தமடையுங்களேன்!

— நாகராஜகுமார்

# சங்கப் பலகை

## இது இருபதாம் நூற்றாண்டின் கதை

(ஆசிரியர் - முக்தா சீனிவான், கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 13, விலை ரூ. 25.00).

சுவையான 20 சிறுகதைகளைக் கொண்ட நூல். சில கதைகளில் தேச பக்தி தலை தூக்கி இருக்கிறது. ஜெயகாந்தனின் சிறப்பான முன்னுரையைப் படித்தாலே இந்த நூலைக் கட்டாயம் படிக்கும் ஆவல் ஏற்படும். வெறும் பொழுது போக்குக் கதைகளாக இல்லாமல் அறிவுறுத்தும் கதைகளாகவும் இருப்பதே இந்நூலின் சிறப்பு. எளிமையான நடை ஆசிரியருக்கு மேலும் சிறப்பைச் சேர்க்கின்றன.

## துள்ளும் உள்ளம்

(ஆசிரியர் - புலவர் கோ. நாகலிங்கம். வெளியீடு - எழில் நிலவன் பதிப்பகம், 9, ஹரிஷ் இல்லம், நாமக்கல்பேட்டை, ஒசூர் - 635 109, தருமபுரி மாவட்டம். விலை - 18.00).

குழந்தைகளுக்கான சின்னஞ் சிறு அழகிய கவிதைகள். நல்ல பல கருத்துகளையும் கூறும் நூல்.

## கெட்டிக்கார வேலன்

(ஆசிரியர் - எ. சோதி. வெளியீடு - நன்மொழிப் பதிப்பகம், 75, அரவிந்தர் வீதி, புதுச்சேரி. விலை - ரூ. 15.00)

ஆடு மேய்க்கும் சிறுவன் தன் புத்திசாலித்தனத்தால் படிப்படியாய் உயர்ந்து அமைச்சன் ஆகிறான். அப்போதும் அவனுக்குப் பல பிரச்னைகள் வருகின்றன. கடைசியில் அவற்றை வென்று அவன் தன்னை நிருபிப்பதே கதை. அரசனின் அன்புக்குப் பாத்திரமாகும் வேலன் நம்மைக் கவர்கிறான். சுவாரஸ்யமான கதை.

## அகலிகை முதலிய அழகிகள்

(ஆசிரியர் - எம்.வி. வெங்கட்ராமன், வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17. பக்கங்கள் - 220. விலை ரூ. 28).

மகாபாரதத்தின் ஏடுகளில் இருந்து திலோத்தமை முதல் மேனகை வரை பதினான்கு அழகிகளைத் தேர்ந்தெடுத்துள்ளார் ஆசிரியர். அவர்களைப் பற்றிய சுவையான கதைகளை தனக்கே உரிய பொலிவான நடையில் எழுதியிருக்கிறார். இந்நூலில் உள்ள சில கதைகளை நாம் புராணங்களில் தேடினால் கிடைக்காது. ஏனெனில் அவை ஆசிரியரின் சொந்தக் கற்பனையாம்! அழகிகளை மிக அற்புதமாய் வர்ணித்திருக்கிறார். கதை சொல்லும் திறன் அருமை.

## விநோதப் பயணங்கள்

(ஆசிரியர் - குண்டுமணி. வெளியீடு - சாந்தி நிலையம், 108 உஸ்மான் சாலை, தி. நகர், சென்னை - 17. விலை ரூ. 15.00).

கல்லிவரின் மிகப் பிரபலப் பயணக்கதையை மிகவும் எளிய நடையில் கொடுத்திருக்கிறார் ஆசிரியர். லில்லிபுட், ராட்சத மனிதர்கள் என்று விதம் விதமாய்ச் சந்திக்கும் கல்லிவரின் சுவை மிகுந்த கதைகளை நாம் சிறு வயதில் வாயில் ஈ புகுவது தெரியாமல் படித்தோம் அல்லவா? இதோ நமது அடுத்தத் தலைமுறையினரும் படித்துப் பயன் பெறும் வகையில் நல்மொழி பெயர்ப்பாய்ச் செய்திருக்கிறார் ஆசிரியர்.

—பரணி பாலன்




## சாமிநாத சர்மாவின் தமிழ்ப்பணி

(ஆசிரியர் - திருமதி டாக்டர் பெ. சிவசக்தி. வெளியீடு அன்புப் பதிப்பகம், 18, ஸ்பர் டாங்க் ரோடு, சென்னை - 31. பக்கங்கள் - 544. விலை ரூ. 86.00).

இந்த மெலிந்த மனிதர்தானா 'சுதந்திர வீரன்' என்று வியப்பில் ஆழ்த்தியவர்; 1937இல் ஜவகர்லால் நேருவைக் கொண்டு "ஜோதி" என்னும் தமது தமிழ்ப் பத்திரிகையைத் தொடங்கியர்; தமிழ்த் தென்றல் திரு.வி.க.வின் தம்பி என்று எழுத்துலகில் அழைக்கப் படுபவர்; அவர்தான் சுமார் 47 ஆண்டுகாலம் இலக்கியப் பணியாற்றி, 70க்கும் மேற்பட்ட நூல்களைப் படைத்த பல்துறை ஆற்றல் மிகு பண்பாளர் சாமிநாத சர்மா.

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்" என்ற பாரதியின் வாக்கிற்கு செயல்வடிவம் தந்து கிரேக்க, சீன, ருஷ்ய சிந்தனைகளைத் தமிழில் தந்தது அவருடைய மற்றொரு சிறப்பு.

இலக்கிய வரலாற்றில் சர்மாவின் பங்கு, இதழியல் பணி, அரசியல், இலக்கியம், வரலாற்றிலக்கியம், படைப்பிலக்கியம், மொழி பெயர்ப்பு, நடை போன்றவற்றை பல கோணங்களில் ஆய்ந்து அவரது சமுதாய, தமிழ்ப் பணிகளைச் சான்றுடன் புலப்படுத்துகிறது இவ்வாய்வு நூல்.

—பின்னலூர் மு. விவேகானந்தன்

# சங்கப் பலகை

## ஒரு தெய்வமா? பல தெய்வமா?

(ஆசிரியர் - அப்துல்லாஹ் அடியார். உணர்வு பதிப்பகம், C11/42 பூபதி நகர், கோடம்பாககம். சென்னை - 600 024. பக்கங்கள் - 64. விலை - ரூ. 7.00)

சரியான பாதைக்கு ஓர் அழைப்பு என்றும் மாற்றுமத நண்பர்களுக்கு அன்பளிப்பு செய்ய வேண்டிய புத்தகம் என்றும் அட்டையில் அறிவிப்புடன் வெளியாகியுள்ள இந்நூல் உண்மையில் மதமாற்றத்துக்கு அழைப்பு விடுக்கும் பச்சையான இஸ்லாமிய மதப் பிரசார நூல்.

திருக்குறளில் ஒரே இறைவன் பற்றிக் கூறியுள்ள பகுதிகளின் தமிழாக்கம், மற்ற மதக்காரர்களுக்கு ஒப்புமைக் காண உதவுவதாகும். பலதெய்வ வணக்கம், பெண் தெய்வ வழிபாடு, உருவ வழிபாடு, அவதாரங்கள் பற்றிய விமரிசனங்கள் இந்துமத மற்றும் உருவ வழிபாட்டு உணர்வுடையோரைப் புண்படுத்துவன. புத்தர், மகாவீரர்முதல் எத்தனையோ பேர் அசைத்துப் பார்த்து விட்ட கொள்கைகளை சமீபத்தில் இஸ்லாம் சமயத்தைத் தழுவியுள்ள அடியாரால் அசைக்க முடியாது. விமர்சனங்களைத் தாங்கும் மனநிலை இஸ்லாம் சமயத்தினருக்கு இருப்பதில்லை. அந்த வலிமை இந்து சமயத்துக்கு உண்டு. 64 பக்கங்களில் ஆசிரியர் எழுப்பியுள்ள வினாக்களுக்கு சுமார் 640 பக்கங்களாவது பதிலாக அமையவேண்டியிருக்கும். யாருடைய நம்பிக்கையையும் தகர்க்க முற்படாதே. முடியுமானால் புதிய நம்பிக்கைகளை அவர்களுக்குக் கொடு என்பது ஆன்றோர் வாக்கு. ஆசிரியர் லௌகிக காரணங்களால் மதம் மாறவில்லை. உண்மையாகவே இஸ்லாம் மதக் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டே அம்மதத்தைத் தழுவியுள்ளார் என்று இந்நூல் மூலம் நாம் முடிவு செய்யலாம். தாம் சார்ந்துள்ள மதத்தின்மீது அவருக்கு ஏற்பட்டுள்ள உறுதியான நம்பிக்கை பாராட்டுதற்குரியது. அதற்காக மற்ற மதக்காரர்களை வம்புக்கு இழுப்பது வீண் வேலை. இஸ்லாம் சமயத்துக்கு வாருங்கள் என்றே தைரியமாய்த் தலைப்பு தந்திருக்கலாம்.

பாரதி சுராஜ்

## ஆங்கிலத்தில் பேச விரும்புபவர்களுக்கு

(வெளியீடு - ஜி.ஆர். பப்ளிகேஷன்ஸ், 39, நடேசன் தெரு, தி. நகர், சென்னை - 600 017)

மாணவர்கள், வியாபாரிகள், இல்லத்தரசிகள், அலுவலகத்தில் பணிபுரிவோர், வேலை தேடுவோர் என வாழ்க்கையில் பல்வேறு துறைகளில் ஈடுபட்டுள்ள அனைவருக்கும் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும் என்ற ஆவல் இன்று நிறைந்திருக்கிறது.

ஆங்கில மொழியில் சரளமாகப் பேசுவது எப்படி, எந்தெந்த சூழ்நிலைகளில் எந்தெந்த வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டும் போன்ற விஷயங்களையும், நமது ஆங்கில பேச்சாற்றலைக் கேட்டு மற்றவர்கள் வியப்படையக் கூடிய ஒரு திறமையை நம்மிடம் வளர்க்க வேண்டும் என்ற நோக்கத்துடனும் உருவாக்கப்பட்ட நூல்.

மிக எளிய முறையில் பயிற்சி பெற்று பயனடைய 'புரொபசர் ரெக்ஸ்' என்ற கற்பனைப் பாத்திரத்தைப் படைத்திருக்கிறார்கள். நல்ல முயற்சி.

புரொபசர் ரெக்ஸ், நமக்கு நேரிடையாக அருகில் இருந்து பாடங்களைச் சொல்லிக் கொடுப்பது போன்ற உணர்வை ஏற்படுத்துகிறார்.

ஆங்கிலத்தில், பேச விருப்புபவர்களுக்கு 'ஸ்போக்கன் இங்கிலீஷ்' புத்தகமும், ஆங்கில இலக்கணத்தை சுலபமாகக் கற்றுக் கொள்ள விரும்புபவர்களுக்கு 'இங்கிலீஷ் கிராமர்' புத்தகமும் ஒரு பெரிய வரப்பிரசாதம். விலை : ஒவ்வொரு புத்தகத்திற்கும் ரூ. 40/-

— நாகு

## எண்ணங்களும் வண்ணங்களும்

(ஆசிரியர் - முனைவர் கி. இராசா. பதிப்பகம் - பார்த்திபன் பதிப்பகம், A12, எல்.ஐ.சி. காலனி, திருச்சி - 620 021. பக்கங்கள் - 92. விலை - ரூ. 20.00)

இலக்கியத் திறனாய்வாக இந்நூலில் பத்துக் கட்டுரைகளை ஆசிரியர் வடித்துள்ளார்.

அவற்றுள், சங்ககால இலக்கியத்தைப் பற்றியவை மூன்று; பக்தி இலக்கியத்தைப் பற்றியவை இரண்டு; தேசிய கீதத்தைப் பற்றியது ஒன்று; இரு புரட்சிக் கவிகளைப் பற்றியது ஒன்று; இலக்கியத்தில் கலைச் சொல்லாக்கம் பற்றியது ஒன்று; முதல் தமிழ் நாவல்கள் பற்றியது ஒன்று; சிறுகதை பற்றியது ஒன்று என்று கட்டுரைகள் அமைந்துள்ளன.

ப. இராமலிங்கம்

## இது எங்கள் பம்பாய்

(எழுதியவர் - செம்பூரான். வெளியீடு - சிவப்பிரியா பப்ளிகேஷன்ஸ், 403 ANKUR, GREENFIELD Co-op. Society, SECTOR 16-A, VASHI, NEW BOMBAY - 400 703. விலை - ரூ. 45.00)

பம்பாய் நகரத்தின் தோற்றம் வளர்ச்சி, வழிபாட்டுத் தலங்கள், விழாக்கள், நகரப் போக்குவரத்து பிரச்னைகள், கலைகளின் வளர்ச்சி, பம்பாய் வாழ் பெருந்தகையாளர்கள் முதலான பதினோரு தலைப்புகளைக் கொண்டு முதல் பகுதியும், பம்பாய்த் தமிழர்கள், அவர்கள் தமிழ் மொழிக்குச் செய்யும் தொண்டுகள், ஆன்மிகம், இசை, பரதம், நாடகம், கல்வி, சமூகம் முதலானவற்றிற்கு ஆற்றும் தொண்டுகள் ஆகியவற்றை ஒன்பது தலைப்புகளைக் கொண்டு இரண்டாவது பகுதியும் தருகின்றது. 'ஐம்பது வருடங்களுக்குப் பின்பு' என்ற தலைப்பில் காணப்படும் கருத்துகள் மிகவும் சிந்தனைக்கு உரியவை. பம்பாய் வாழ் தமிழர்களின் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் கட்டுரை அது.

—தாமரைக்கண்ணன்

# சங்கப் பலகை

## கேட்டதெல்லாம் போதும்

(ஆசிரியர் - ர.சு. நல்லபெருமாள். வெளியீடு - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ. 26.00).

திடீர்த் திருப்பங்களோ, சுவையான கிளுகிளுப்பான காட்சிகளோ இல்லாமலும்கூட ஒரு நல்ல நாவலைத் தரமுடியும் என்பதை ஆசிரியர் நிரூபித்துவிட்டார். புத்தர் பிரான் துறவு மேற்கொண்ட ஆறு ஆண்டுகள் பல இடங்களில் திரிந்த போது நிகழ்ந்த விஷயங்களைக் கற்பனையில் எழுதியிருக்கிறார் நல்லபெருமாள். ஏகப்பட்ட தத்துவங்கள். ஆயினும் தவிர்க்க முடியாது. அவரே குறிப்பிட்டிருப்பது போல் கதாநாயகர் புத்தராயிற்றே!

காடு, பிச்சாவரம் போன்ற சரணாலயங்களைப் பற்றி மிக அழகாய் வர்ணித்திருக்கிறார்கள். பறவைகளின் புகைப்படங்களை வண்ணத்தில் கொடுத்திருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும்.

புறாக்களின் கண்களை ஃப்ராஸ்ட் லென்ஸ் போட்டு மறைத்து அவற்றின் பார்வையை மங்கச் செய்தாலும் அவை சரியாய்ப் பறந்து தமது இருப்பிடத்தினை அடையும் விந்தையைக் கண்டுபிடித்து இருக்கிறார்களாம். இதுபோல் இன்னும் நிறையச் செய்திகள்.

—வேதா

## வெட்டவெளி தியானம்

(ஆசிரியர் - தவத்திரு சுவாமி ஓங்காரானந்தா. வெளியீடு - ஓங்காரம், பாண்டிச்சேரி - 3. விலை ரூ - 30.00).

## தாய்லாந்தில் தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகள்

(ஆசிரியர் - முனைவர் எஸ். நாக ராஜன். வெளியீடு - உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை 600 113. பக்கங்கள் - 104. விலை ரூ. 18.00).

அயல்நாட்டுத் தமிழர்களைப் பற்றி முதன் முதலாக (.9.7... 'ஒன்றே உலகம்' எனும் நூலை தனிநாயக அடிகள் வெளியிட்டார் இந்நூலில் தமிழ்ப் பண்பாட்டின் தாக்கம் தாய்லாந்தில் வேரூன்றி வளர்ச்சி அடைந்துள்ள வரலாற்றுப் பின்னணிகள் விளக்கப் பட்டுள்ளன.

பல்லவர் காலத்தில் இருந்து இன்றுவரை குடியேறி இருக்கும் தாய்லாந்துத் தமிழர்களைப் பற்றி விரிவாக இந்நூலில் எழுதப்பட்டுள்ளது.

## அந்தக்கால ஆராய்ச்சிகள்

(ஆசிரியர் - தங்கவயல் லோக தாசன். வெளியீடு - தங்கவயல் பதிப்பகம், 3/18, எஸ்.எம்.நகர் அன்பு காலனி, சென்னை - 35 பக்கங்கள் - 174. விலை ரூ. 22.00).

சூரியனுக்கு உகந்த மந்திர 'காயத்ரி'யையும், 'ஞாயிறு போற்றுதும்' என்று சிலம்பையும் செப்பி வேதகாலத்தில் இருந்து நாளந்தா அஜந்தா ஓவியங்கள் வரை பல தரப்பட்ட செய்திகளைக் கலந்து கட்டுரைகளைக் கொண்ட இந்நூல் தகவல் களஞ்சியமாகக் காட்சி அளிக்கிறது.










## இந்தியப் பறவைச் சரணாலயங்கள்

(ஆக்கியோர் - மணிமேகலைப் பிரசுரக் குழு. வெளியீடு - மணிமேகலைப் பிரசுரம், 4, தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 17, விலை ரூ. 12.00).

வெறும் சரணாலயங்களின் பெயர்கள் அடங்கிய பட்டியலாய் இல்லாமல், பல சுவையான, பயனுள்ள செய்திகளை உள்ளடக்கிய நூல். பருவ நிலை மாற்றங்களைச் சமாளிக்கப் பறவைகள் எவ்வாறு இடம் மாறிப் போகின்றன, எப்படி வழியறிகின்றன, போகவேண்டும் என்று எப்போது உணர்கின்றன போன்ற சுவையான கேள்விகளுக்கு விடைகள் உள்ளன. வேடந்தாங்கல், பிலிக்

சாதாரணமாய் அவ்வளவு எளிதில் விளங்கிவிடாத விஷயத்தை மிகவும் உயர்ந்த நடையில் விளக்கியிருக்கிறார் ஆசிரியர். எட்டு நிலைகளை மிகவும் சிக்கலாக விளக்கியிருக்கிறார். (பதஞ்சலி யோகம், விளையாட்டு...) காலையில் 2 மணி முதல் 4.30க்குள் உள்ள காலத்தைத் தேர்ந்தெடுத்து தியானம் செய்யச் சொல்கிறார். தலைப்புக்கு நியாயம் வழங்கும் வகையில் எப்போதுமே வெட்டவெளியில் தியானம் செய்வதில் உள்ள பலன்களை அழுத்தமாய்ச் சொல்கிறார். நிச்சயம் மன இறுக்கம் விலகும் என்று சொல்கிறார். மேலெழுந்தவாரியாய்ப் படிக்க முடியாது. ஆழ்ந்து படிக்க வேண்டும். பலமுறை படிக்க வேண்டும். —ஹரிபாலன்

## நதிக்கரைகள்

(ஆசிரியர் - ந.க. துறைவன் வெளியீடு - ராதி பதிப்பகம், 4/... சாந்தி நகர், திருப்பத்தூர் 635 601. பக்கங்கள் - 32. விலை ரூ. - 6.00).

"வன்முறைக்கு
மூன்று காந்திகள் பலி
அகிம்சை நெறி பிறந்த மண்"

இப்படி அருமையான 'ஹைக்கூ' வரை உரைவீச்சுகள் அத்தனையும் அனுபவப் பிழிவுகள்.

—பின்னலூர் மு. விவேகானந்தன்

# பாவை பக்கங்கள்

(அமுதசுரபி வழங்கும் பெண்கள் பகுதி)

# எண்ணிப் பார்க்கலாம் பெண்ணே!

அன்புச் சகோதரிகளே!

நம்மைச் சுற்றியிருக்கும் உலகம் வெகு வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கிறது. புதுப்புது விஷயங்கள் வந்து கொண்டே இருக்கின்றன. கண்ணையும் காதையும் திறந்து வைத்துக் கொண்டு இவற்றையெல்லாம் தெரிந்து கொள்வது ஒரு பெண்ணுக்கு ரொம்பவும் அவசியம்.

சில நாள்களுக்கு முன் ஒரு பெண்ணைச் சந்தித்தபோது, "எங்கே வேலை பார்க்கிறாய்?" என்று கேட்டேன். பாலிடெக்னிக்கில் காஸ்மெடாலஜி டிபார்ட்மெண்டில் இன்ஸ்ட்ரக்டராக இருப்பதாகவும், அதிலேயே டிப்ளமா படித்துவிட்டு வேலையில் சேர்ந்ததாகவும் கூறினாள்.

அப்போதுதான், தெரிந்தது - பாலிடெக்னிக்கில் சுயவேலை வாய்ப்புக்கு வழி வகுக்கும் பல படிப்புகள் இருக்கின்றனவென்று.

பெரும்பாலும் பல பெற்றோர்கள் தங்கள் காலத்தையே மனசில் இருத்திக்கொண்டு, வெளியில் இருக்கும் பல வாய்ப்புகளைப் பற்றித் தெரிந்து கொள்வதில்லை. நண்பர்கள் மூலம் தானாகத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு எல்லாக் குழந்தைகளுக்கும் இருப்பதில்லை.

இந்த மாதிரி வெளியுலக வளர்ச்சிகள் வீட்டிற்குள் தெரிய வர முதல் வாசல் பெண்தான். பேப்பர், பத்திரிகை, டிவியில் பல சேனல்கள் என்று பெருகிவிட்ட இந்தக் காலத்தில் விவரங்களைத் தெரிந்து கொள்வது ஒன்றும் கஷ்டமான வேலையில்லை. அதற்குப் பெரிய பட்டப் படிப்பும் ஆங்கில அறிவும்தான் அவசியம் என்பதும் இல்லை.

சில வழக்கங்களை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். தினமும் பேப்பர் படிக்க வேண்டும். ரேடியோவிலோ, டிவியிலோ ஏதாவது ஒரு நேரம் செய்திகளைக் கேளுங்கள். லைப்ரரியில் சேர்ந்து கூடுமானவரை பத்திரிகைகள் படியுங்கள்.

தொடர் கதைகளையும், சாதாரண கிசுகிசுக்களையும் தாண்டி சில நல்ல விஷயங்களும் பத்திரிகைகளில் படிக்க ஆரம்பியுங்கள். டிவி பார்ப்பது சினிமா சம்பந்தமான நிகழ்ச்சிகளுக்காக என்று மட்டுமல்லாமல் மற்ற நேரங்களிலும் என்ன சொல்கிறார்கள் என்று பார்க்க ஆரம்பியுங்கள். ஒட்டு மொத்தமாக எல்லாமே அறுவை, போர் என்று சொல்ல முடியாது.

டீன் ஏஜ் குழந்தைகளை எப்படிக் கையாள்வது என்று நகரத்தின் மிகப் பெரிய டாக்டர் டிவியில் பேசுகிறார். அவரிடம் அப்பாயிண்ட்மெண்ட் வாங்கிக் கொண்டு இதையெல்லாம் கேட்க 200 ரூபாய் செலவாகும். நம் வீட்டு ஹாலில் டிவியில் வந்து பேசும் போது என்னதான் சொல்கிறார்கள் என்று கவனிப்பதில் தவறில்லையே!

எந்த நாளிலும் ஒரு வீட்டுக்குத் தலைவி பெண். அவள் தன்னை எந்த அளவுக்கு வளப்படுத்திக் கொள்கிறாளோ, அந்த அளவு அந்த வீடும் சிறக்கும்.

ஆகையால் பெண்களே, கண்ணையும் காதையும் திறந்து வைத்துக் கொண்டு நிறைய விஷயங்களை கிரகித்துக் கொள்ளுங்கள். நாம் வளர, நம் குடும்பம் தானே வளரும்.

பாவை பக்கங்களுக்கு வாசகர்கள் எழுதும் கடிதங்கள் எண்ணிக்கையில் கூடிவருகின்றன. சில படைப்புகளும் வர ஆரம்பித்திருப்பது மகிழ்ச்சியை அளிக்கிறது. உங்கள் கருத்துகளையும், ஆலோசனைகளையும் மேலும் எழுதுங்கள்.

நட்புடன்,

கிரிஜா ராகவன்




## புதுமையான கோலப் போட்டி

இந்த மாதம் பரிசு பெறும் கோலத்தை வரைந்தவர் :

**திருமதி ஹேமா கோதண்டராமன், துங்க பத்ரா அணை, கர்நாடகா - 583 225,**



வாசகர்கள் இந்த இடம் பிடித்துப் பரிசு பெற இதுவரை வெளிவராத புதுமையான சிறந்த கோலத்தை கறுப்பு மையினால் எழுதி அனுப்பவும். தேர்ந்தெடுக்கப்படும் கோலத்துக்குப் பரிசு ரூ. 50/-

## பூசணிக்காய் பாயசம்

• பூசணிக்காயை அல்வா செய்வது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். பாயசமும் செய்யலாம் என்பது செய்து பார்த்து ருசித்த பின் தெரியவரும்.

பூசணிக்காய் 8 அணா அல்லது ஒரு ரூபாய்க்கு கீற்று வாங்கி தோல் சீவி துண்டம் துண்டமாக நறுக்கி குக்கரில் சாதம் பருப்பு வைக் போது ஒரு தட்டில் வைத்து வேகவிடவும்.

வெந்தபின் நன்கு ஆறியபின் கையினால் நசுக்கி நீரை வடி கட்டி, (இந்த பூசணி வடித்த நீரை குழம்பில் புளி நீருடன் கலந்து சேர்த்தால் குழம்பு வாசனையாக இருக்கும்.) சர்க்கரையை மிக்ஸியில் நன்கு அறைத்து பின் பாலுடன் கேசரி பவுடர் சேர்த்து கொதிக்க விடவும். சற்று வற்றியவுடன் கீழே இறக்கி சர்க்கரை சேர்த்து, முந்திரி பருப்பு, திராக்ஷை, ஏலம் சேர்த்து சாப்பிடவும். சூடாகவும் நன்றாக இருக்கும். பிரிட்ஜில் வைத்து "கீர்" போலவும் பரிமாறலாம்.

பூசணிக் கீற்று - 1

ஒன்றரை டம்ளர் பால்

8 ஸ்பூன் சர்க்கரை

ஏலம், முந்திரி பருப்பு, திராட்சை

கேசரிபவுடர்

## உருளைக்கிழங்கு வற்றல்

• இப்போது நல்ல வெயில் ஆரம்பித்து விட்டது.

உருளைக்கிழங்கும் கிலோ ரூபாய் 4க்கு கிடைக்கிறது. அதனால் உருளைக்கிழங்கு வற்றல் போட்டு வைத்தால் வருடம் பூராவும் சேமித்து வைக்க உதவியாக இருக்கும்.

ஒரு கிலோ உருளைக்கிழங்கு.

100 கிராம் உப்பு.

மஞ்சள் பொடி.

ஒரு சிட்டிகை சோடா உப்பு.

செய்முறை :-

உருளைக்கிழங்கை நன்கு மண் போக அலம்பி சீவியில் ரொம்பவும் மெலிதாக இல்லாமல் மிகவும் தடிமனாகவும் இல்லாமல் நடுத்தரமாகச் சீவி வைத்துக் கொள்ளவும். பின்னர் தண்ணீரில் நன்கு கழுவவும். மாவுச் சத்து போக நன்கு அலம்ப வேண்டும்.

பின் அந்த வில்லைகள் முங்கினால் போல தண்ணீர் எடுத்து வாணலியில் விட்டு உப்பு, மஞ்சள் பொடி சேர்த்து அடுப்பில் வைக்க வேண்டும். தண்ணீர் நன்கு தளதளவென்று கொதிக்கும் போது சோடா உப்பு போட்டு அடுப்பை அணைத்து விடவும். பின் உருளை வில்லைகளைப் போட்டு நன்கு ஒரு



கரண்டியால் கிளறி விட்டு மூடி விட வேண்டும். அந்த சூட்டிலேயே உருளைக்கிழங்கு வில்லை வெந்தமாதிரி ஆகிவிடும். அரை மணி நேரம் அதில் ஊறிய பின் வடிகட்டி, மாடியில் ஒரு துணியைப் போட்டு ஒவ்வொரு வில்லையாக தனித் தனியாக உலர்த்த வேண்டும். நல்ல வெயிலாக இருந்தால் சாயந்திரமே சுக்கு மாதிரி உலர்ந்துவிடும். எதற்கும் மறுநாளும் வெயிலில் உலர்த்தி பின் காற்று புகாத டப்பாவில் அடைத்து வைக்கவும். திடீரென்று விருந்தாளிகள் வந்து விட்டால் இந்த திடீர் உருளைக் கிழங்கு வற்றல் மிகவும் பாராட்டை உங்களுக்கு வாங்கித்தரும். உப்பு அதிலேயே ஊறியிருப்பதால் உப்பு வேண்டாம். காரம் வேண்டியவர்கள் மட்டும் வறுத்த உடனே மிளகாய்ப் பொடியைத் தூவி குலுக்கி விட்டு பின் உபயோகிக்கவும்.

— இந்திரா ஆராவமுதன்



## தயங்காதே...!

பெண்ணே....
உன்னை நிலவென்றார்கள்,
ஆனால் அதில்-
கொள்ளிக்கட்டை காட்டி
விழா கொண்டாடுகிறார்கள்!

உன்னை மான் என்றார்கள்;
ஆனால் அதையும்
மாமிசமாக்கி மகிழ்ந்து
மென்று தின்கிறார்கள்!

உன் குரலைக் குயில்
என்றார்கள்;
ஆனால் அதன்
குரல்வளையை நெருக்கி
'அபஸ்வரம்' பாடுகிறார்கள்!

நீ புரட்சிப்பெண்ணாய மாறு!...
இந்தச் சமுதாயம்
நீ யில்லாமலா ஆன தென
இந்த உலகுக்குக் காட்டு!

நீ வெறும் போகப் பொருளா?..
இல்லை- அடிமைப் பொருளா?....
அதை மாற்றியமைக்க-
இனிமேல் தயங்காதே!

- கருவை வேணு

# கலர் பேப்பரும் கத்தரிக்கோலும் / கமலா சேஷாத்ரி

"அம்மா போரடிக்குது" என்று அடிக்கடி படுத்தும் குழந்தைகளுக்குக் கையில் எதாவது வேலையைக் கொடுத்துவிட்டால் சுவாரசியமாக ஒரு பக்கம் உட்கார்ந்து விடும். வண்ண வண்ணக் கலர் பேப்பர்களைக் கொண்டு ஈஸியாக செய்ய சில ஜப்பான் கைவேலைகள் இதோ! குழந்தைகள்தான் என்றில்லை. அம்மாவும் செய்யலாம்.

## மெழுகுவர்த்தி ஸ்டாண்ட்



நீளவாட்டில் படத்தில் காட்டியுள்ளது போல் தேவையான கலர் பேப்பரைச் சுருட்டவும்.



5 செ.மீ. அளவில் பேப்பர் சுருளை வெட்டவும்.



வெட்டிய இதழ்களை வெளிப்புறமாகக் கீழ்நோக்கி மடிக்கவும்.



நடுபபாகத்தில் உள்ள சுருளை மெதுவாகக் கெட்டியாகப் பற்றிக் கொண்டு மேலே இழுக்கவும்.

அதை அடியில் ஒரு கட்டையிலோ அல்லது ஏதாவது ஒரு மரச்சாமானிலோ சொருகினால் மெழுகுவர்த்தி ஸ்டாண்ட் ரெடி.

## கலர் ரோஜா



கலர் பேப்பரை முன்னாடி சொன்னது போல் நீளவாட்டில் சுருட்டிக் கொண்டு நடுவில் கொஞ்சம் வெட்டவும்.



ஒரு பாதியை இலையின் வடிவில் நேர்த்தியாக வெட்டவும்.



அதைப் பார்த்து விட்டு உள்ளே இருக்கும் பேப்பரை வட்டமாக வெட்டவும்.



அந்த வட்டமான பேப்பரை பாதி சுருட்டி மலரும் இதழ்போல ஆக்கவும்.



இப்போது சுருளின் நுனியை மெதுவாக இழுக்கவும்.



அதை மெதுவாக சுழற்றி இதழ்கள் எல்லா பக்கமும் வரும்படி செய்யவும்.



பிறகு சுருளை மறுபடி மேலிருந்து கீழே அழுத்தினால் மலர்ந்த ரோஜா தயார்.

## சாருமரம்



வேண்டிய வண்ணத்தில் பேப்பரை சுருட்டிக் கொள்ளவும். அதை நடுவில் இரண்டு பாகத்தில் பாதி பாதியாக வெட்டவும்.



பேப்பர் சுருளை இப்போது மூன்றாக மடிக்கவும்.



நடுவில் இருக்கும் சுருளைக் குறுக்காக நீளமாக வெட்டவும்.



வெட்டிய மடிப்பை தட்டையாக விரிக்கவும்.



பிறகு பின்னோக்கி அதை மடித்துவிட்டு நடுப்பாகத்தை மெதுவாக இழுக்கவும்.

→



இழுக்க இழுக்க அது மேல் நாக்கி நீண்டு வரும்.



இதுதான் சாரு மரம். நவ த்திரி பார்க்கில் வைக்கலாம்.

## ஜப்பான் விசிறி



கலர் பேப்பரை சுருட்டிக் காண்டு அதை இடம் விட்டு நடுவில் இரண்டு இடத்தில் பாதி வெட்டவும்.



அதை மூன்றாக மடிக்கவும்.



பின் நடுவில் உள்ள பகுதியை



பிறகு நடுப்பகுதியைப் பிரிக்க வும்.



ஓர் ஓரததைப் பிடித்தபடி மேலிருந்து இழுக்கவும்.



சுற்றி அது விரியும்.



பாதியாக மடித்து நிறுத்தி னால் இதுதான் ஜப்பான் விசிறி.






ஊரிலிருந்து என் தங்கை வந்திருந்தாள். அவளுடைய இரண்டு வயது பெண் குழந்தை பொழுது போகாமல் தவித்தது. கீழே விளையாடிக் கொண்டிருந்த அக்கம்பக்கத்துக் குழந்தைகளுடன் கொண்டு சேர்த்து விட்டு வந்தேன். ஐந்தாவது நிமிடம் அழுது கொண்டே மேலே வந்து விட்டது.

"அவன் எனக்கு பொம்மை தரமாட்டேங்கறா. இவன் நான் சைக்கிள்ல உட்காரக் கூடாதுங்க றான்" என்று சில கம்ப்ளெயிண்ட்.

காரணம் இதுதான். பெரும்பாலான வீடுகளில் ஒரு குழந்தை தான். இரண்டு குழந்தைகள் என்பதே அபூர்வம். கூட்டுக் குடித்தனம் என்பது துர்லபம்.

இப்படித் தனியாக வளரும் குழந்தைகள் ரொம்பவும் "ஸெல்ப் ஸெண்டர்டாக" இருக்கின்றன. மேலும் ஒரே குழந்தைதானே என்று கேட்டதை எல்லாம் வாங்கிக் கொடுக்கப் போய் அந்தக் குழந்தை, "நினைத்தது நடக்க வேண்டும் கேட்டது கிடைக்க வேண்டும்" என்று பிடிவாதத்துடன் வளர்கிறது.

போதும் போதாதற்கு, அக்கம் பக்கத்தில் உள்ள குழந்தைகளுடன் பழகவிட நாம் யோசிக்கிறோம். "அங்கே போகாதே. அந்த மாமி ரொம்ப வம்பு பிடிச்சவ. அவ வீட்டுக்குப் போகாதே, கீழ் வீட்டில் நீ எதைத் தொட்டாலும் திட்டுவா, அங்கே போகாதே" – என்று பல விதமான கண்டிஷன்கள் போட்டுக் குழந்தையைத் தனிமைப்படுத்தி வளர்க்கிறோம்.

அத்தை, சித்தப்பா, பெரியப்பா, மாமி என்கிற உறவு முறைகளே மறந்து போகும் அளவுக்குக் குடும்பங்கள் சிறு சிறு தீவுகளாகிக் கொண்டிருக்கின்றன.

இந்த சமூக மாற்றங்களால் எதிர்காலத்தில் பாதிக்கப்படப் போவது நம் குழந்தைகள்தான். எப்போதும் அம்மா அப்பா முகத்தையும் அதனை விட்டால் டிவியையும் மட்டுமே பார்த்துக் கொண்டிருக்கும் குழந்தைகள் வெறும் "கௌச் பொட்டேட்டோக்களாகத்" தான் உருவாகும்.

குழந்தைகளைத் தாராளமாக எல்லோருடனும் பழக விடுங்கள். விட்டுக் கொடுத்துப் போவதற்கும், மற்றவர்களை அனுசரித்துப் போவதற்கும் அப்போதுதான் அவர்கள் தெரிந்து கொள்வார்கள். நாலு தடவை தப்பாக நடந்து கொண்டாலோ, திட்டு வாங்கினாலோ பரவாயில்லை. தானாகவே பழகத் தெரிந்து கொள்வார்கள். "கம்யூனிகேஷனையும், இண்டர் பர்சனல் ரிலேஷன்ஷிப்பையும்" பின்னாடி தடி தடி புத்தகங்களைப் படித்துத் தெரிந்து கொள்வதற்கு முன்னால், பிஞ்சுப் பருவத்தில் எல்லோருடனும் பழகிப் பார்த்துத் தெரிந்து கொள்பவை பசுமரத் தாணிபோல் மனதில் பதியும்.

– கிரிஜா ராகவன்

ஸ்ரீ ரஸ்து, சுபமஸ்து, ஸ்ரீ வெங்கடேசப்ரசன்ன :-

**ஜெகத் குரு ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் ஆசியுடன் கீழே குறிப்பிட்டு உள்ள யாத்திரைகளுடன் வியாஸ குரு பௌர்ணமியன்று 22.7.94-இல் அமரநாத தரிசனம் செய்யும்படியான யாத்திரையும் புறப்பட இருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறோம்.**

*6.5.94* முதல் *21.5.94* வரையிலான பத்ரிநாத், கேதாரநாத், ஹரிதுவாரம், ரிஷிகேசகம், டில்லி, ஆக்ரா, மதுரா முதலிய க்ஷேத்ரயாத்திரை நபர் 1-க்கு ரூபாய் *3,000* (கேதாரம் சென்று வரும் குதிரை, டோலி சார்ஜ்கள் மட்டும் தனி)

*3.6.94* முதல் *7.7.94* வரை பத்ரிநாத், கேதாரநாத், நேபாளம், காசி, கயா, பிரயாகை, கல்கத்தா, பூரி, கோனாரக் உள்ளிட்ட யாத்திரை நபர் 1 -க்கு ரூபாய் *4,500* (இந்த யாத்திரையில் பத்ரி, கேதாரம், நேபாளம் சென்று வரும் பஸ் சார்ஜ்கள், குதிரை, டோலி சார்ஜ்கள் தனி)

*3.6.94* முதல் *18.6.94* வரையில் பத்ரி கேதார் யாத்திரை நபர் *1* -க்கு ரூ. *3,000/-* (கேதாரம் சென்று வரும் குதிரை, டோலி சார்ஜ் தனி)

*13.6.94* முதல் *4.7.94* வரை டில்லி, காசி, கயா, பிரயாகை, நேபாளம் உள்ளிட்ட யாத்திரை நபர் *1*-க்கு ரூ. *4, 600/-*

*13.6.94* முதல் *27.6.94* வரை காசி, டில்லி, கயா, பிரயாகை உள்ளிட்ட த்ரிஸ்தளி யாத்திரை நபர் *1* -க்கு ரூ. *3,000/-*.

*23.6.94* முதல் *4.7.94* வரை காசியில் ஒரு நாள் நேபாள யாத்திரை சென்னை யிலிருந்து நபர் *1* -க்கு ரூ. *2,200/-*. காசியிலிருந்து நபர் *1*-க்கு *1,600/-*.

☆ ☆ ☆

# அமரநாத யாத்திரை

*1985*-க்குப் பிறகு நாம் அமரநாத யாத்திரையை மேற்கொள்ள இயலவில்லை என்பது நம் யாத்ரீக அன்பர்கள் அனைவருக்கும் தெரியும்.

அங்கு நிலவிய சூழ்நிலையே காரணம். தற்போது உள்ள சூழ்நிலையில் இந்த வருஷம் அமரநாத் யாத்திரை மேற்கொள்ள முடிவு செய்துள்ளோம்.

*14.7.94* இரவு தமிழ் நாடு எக்ஸ்பிரஸில் புறப்பட்டு *22.7.94* வியாச குரு பௌர்ணமியன்று அமரநாத மஹாதேவரை தரிசனம் செய்து ஸ்ரீ வைஷ்ணோதேவியையும் தரிசனம் செய்து *31.7.94* அன்று சென்னை வந்து சேரும் படியாக அமைத்துள்ளோம். கலந்துக் கொள்ள ஆர்வம் உள்ள அன்பர்கள் உடன் பெயர், வயது ஆண் /பெண் முதலிய விவரங்களுடன் நபர் *1*-க்கு ரூ. *1,000/-* வீதம் அட்வான்ஸ் டி.டி./செக் மூலம் அனுப்பி பதிவு செய்துக் கொள்ள வேணுமாக கோருகிறோம். நபர் *1* -க்கு ரூ. *3,200/-* (குதிரை, டோலி சார்ஜ்கள் தனி)

☆ ☆ ☆


**மேலும் விவரங்களுக்கு :**

**ஸ்ரீ மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்,**

1, யூசப்லேன் - அருணாசல ஆசாரி தெரு,
சேப்பாக்கம், சென்னை -600 005.
டெலிபோன் - 84 19 57



## 100
## சாதனையாளர்களுக்குப் பாராட்டு விழா!

'முகம்' இதழில் முகப்போவிய மாக வெளிவந்த பல்வேறு துறையைச் சார்ந்த 100 சாதனையாளர் களைப் பற்றிய வரலாற்று நூல் வெளியீட்டு விழாவும், பாராட்டு விழாவும் 12.2.94 அன்று சங்கர தாஸ் கலையரங்கத்தில் திரு. கி.ஆ.பெ. விசுவநாதம் தலைமையில் நடைபெற்றது.

பாராட்டுப் பெற்ற 100 சாதனையாளர்களில் முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.வி.யும் கலைமாமணி விக்கிரமனும் அடங்குவர்.





◆ எஸ்.ஆர்.எ.ஃப், சேர்மன் டாக்டர் பரத்குமார் புதிய பள்ளிக் கட்டடத்தைத் திறந்து வைக்கிறார்.

## வாணி

திரு. ரவிகிருஷ்ணன், திருமதி, ராஜி ரவிகிருஷ்ணனின் மகள் செல்வி வாணியின் பரத அரங் கேற்றம் நாரதகான சபாவில் வெகு சிறப்பாக நடந்தது. செல்வி வாணி, குரு எஸ்.கே. காமேஸ் வரனிடம் பயிற்சி பெற்றவர். ஒன்பதாம் வகுப்பு படிக்கும் 12 வயதான வாணி எதிர்காலத்தில் புகழ் பெற்ற நடனமணியாகத் திகழ இந்த அரங்கேற்ற நிகழ்ச்சி முன்னோடி என்றே சொல்ல வேண்டும்.

## எஸ்.ஆர்.எ.ஃப் வித்யாலயா

புகழ் பெற்ற எஸ்.ஆர்.எஃப் நிறுவனம், 1991ஆம் ஆண்டு ஜுலை மாதம் முதல் தன் கவனத்தை கல்வியின் மீது செலுத்தி பாடசாலையை ஆரம்பித்தது.

இதற்கு ஏகப்பட்ட வரவேற்பு கிடைத்தது. கல்வியால் பயன் அடைபவர்களின் எண்ணிக்கை ஒவ்வோர் ஆண்டும் உயர்ந்து கொண்டே போனது.

எனவே, தனது கல்விப் பணியை விஸ்தாரிக்க புதிய கட்டடம் ஒன்றைக் கட்டி முடித்தது. நவீன வசதிகள் கொண்ட இக் கட்டடத்தின் திறப்பு விழா மணலியில் வெகு சிறப்பாக நடந்தது.

பெரும் திரளானோர் கலந்து கொண்டு விழாவைச் சிறப்பித்தனர்.



## புதிய கேசட் வெளியீடு

• ஆந்திர தேசத்தின் புகழ் பெற்ற இசை அறிஞர் ஸ்ரீ அன்னமாச்சார்யா எழுதிய - இயற்றிய - தெலுங்கு கீர்த்தனைகளை திருப்பதி திருமலை தேவஸ்தானமும், எச்.எம்.வி. நிறுவனமும் இணைந்து கேசட் வடிவில் வெளியிட்டுள்ளன. கர்நாடக இசைப் பாடகி ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலட்சுமி அவர்களின் தேன் போன்ற குரலில் கீர்த்தனைகள் நமது






செவிகளைக் குளிர வைக்கின்றன. இந்த கேசட்டை சமீபத்தில் - சென்னையில் - ஆந்திர முதல்வர் விஜய பாஸ்கர ரெட்டி வெளியிட - திருப்பதி திருமலை தேவஸ்தான சேர்மன் செங்கல் ரெட்டி பெற்றுக் கொண்டார். திருமதி எம்.எஸ். சுப்புலட்சுமி உட்பட பல இசையுலக, கலையுலக பிரமுகர்கள் கலந்து கொண்டனர். நிகழ்ச்சி ஏற்பாடுகளை எச்.எம்.வி. நிறுவன மேலாளர் முத்துக்குமார் சிறப்பாக செய்திருந்தார்.

— கே. சங்கர்லால்

• சென்னை அம்பத்தூர் ரெட்ஹில்ஸ் சாலையிலுள்ள கங்கை நகர் ஸ்ரீபரத்வாஜ ஆச்ரமத்தில், பரமஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள் தமது பிறந்த நாளையொட்டி 108 ஏழைப் பெண்களுக்கு இலவச சேலைகளை வழங்கினார்கள். நிகழ்ச்சிக்கான ஏற்பாட்டினை ஸ்ரீபரத்வாஜ் செய்திருந்தார். •

# பாப்பா! பாட்டுப் பாடுவோம்!



'கோனார் தமிழ் உரை' நூல்களின் மூலம் தமிழ் மக்களிடம் பிரபலமாகி நிற்கும் நிறுவனம், பழனியப்பா பிரதர்ஸ். காந்தி மகான் கதை, தில்லானா மோக னாம்பாள் போன்ற பல நல்ல நூல்களை வெளியிட்டு உள்ள பழனியப்பா பிரதர்ஸ் தற்போது ஒலிப்பேழை உலகிலும் நுழை கின்றனர்.

'சிறுவர் இலக்கிய மாமணி' என்ற விருதை அண்மையில் பெற் றுள்ள குழந்தைக் கவிஞர் செல்ல கணபதியின் மழலைப் பாடல்களை 'பாப்பா! பாட்டுப் பாடுவோம்!' என்கிற தலைப்பில் ஒலிப்பேழை களாக வெளியிட்டு உள்ளனர் பழனியப்பா பிரதர்ஸ்.

தெளிவான இசையை அமைத் துள்ளனர் சங்கர் – கணேஷ்.

ஏற்கனவே புத்தக வடிவில் மூன்று தொகுதிகளாக வெளிவந் துள்ள பாடல்கள் இரண்டு கேசட்டுகளில் உயிர்பெற்றுள்ளன, இக் கேசட்டுகளின் வாயிலாக.

குழந்தைகளின் பிஞ்சு மனத் தில் நல்ல கருத்துகளைப் பதிய வைப்பதன் மூலம் எதிர்காலத்தில் நல்ல பரம்பரையை உருவாக்க முடியும் என்ற பழனியப்பா பிரதர்ஸின் அசையாத நம்பிக்கை வீண்போகாது. குறைந்த செல வில் குழந்தைகளின் பிறந்த நாள்களுக்கு பரிசாகத் தர உதவும் இந்த ஒலிப் பேழைகள்.

பழனியப்பா பிரதர்ஸின் இம்முயற்சி வெற்றி பெற மனதார வாழ்த்துவோம்.

— மாலதி நாகராஜ்.

அமெரிக்காவில் நடைபெற இருக்கும்!

# ஜெய ஜெய தேவி நாட்டிய நாடகம்

ஜெய ஜெய தேவி என்னும் நாட்டிய நாடகத்தை வட அமெரிக்காவில் நடத் தப் போகிறார்கள். நாட்டியம் மற்றும் இசைக்கு முக்கியத்துவம் கொடுத்து நடத்தப்படும் இந்நிகழ்ச்சி சுமார் மூன்று மணி நேரம் அமெரிக்க ரசிகர்களை மகிழ்விக்கப் போகிறது.

இது ஒரு புது முயற்சி. அதுமட்டு மல்ல பல சிறப்புகள் இந்த நிகழச்சியில் உண்டு. வயலின் வித்வான் லால்குடி ஜெயராமன் பாட்டு எழுதி இசை அமைத்து இந்நிகழ்ச்சியை உருவாக்கி யிருக்கிறார்.

கர்நாடக சங்கீத மேதை ஒருவர் பாட்டு எழுதி நாட்டிய நாடகத்திற்கு இசை அமைத்து உருவம் கொடுத்திருப் பது அநேகமாக இதுதான் முதல் முறையாகும்.

அம்பாளின் பல விதமான அற்புத வடிவங்களை விவரித்து நடத்தப்படும் இந்த நாட்டிய நிகழ்ச்சியில் கர்நாடக சங்கீதத்தின் 80-க்கும் மேற்பட்ட ராகங்கள் பயன்படுத்தப்பட்டிருக் கின்றன.

திருமதி ராதா நடன ஆசிரியை இந்த நாட்டிய நாடகத்தின் தன்மைக்கு ஏற்ப ஆடல் காட்சிகளை அமைத்துள் ளார். திருமதி சுஜாதா விஜயராகவன் பாலமாகவும், பலமாகவும் இருந்து நிகழ்ச்சியைத் தயாரிக்க உதவியிருக் கிறார்.

பைரவி அமைப்பு நாட்டிய நிகழ்ச் சியோடு தியாகராஜ ஆராதனையும் இந்தியாவின் பிரபல வித்வான்கள் சுமார் 45 பேர்களைக் கொண்டு அமெரிக் காவில் நடத்தப்படவிருக்கிறது, என்று விவரித்தார் திரு. வி .வி. சுந்தரம்.

சுமார் 2000 பேர் இந்த நிகழச்சியை கண்டு களிக்கப் போகிறார்கள். ஏப்ரல் 3-ம் தேதி (1994) வேய்ட் ஜென் ஆடிட் டோரியம், கிளீவ்லாண்ட் ஸ்டேட் யுனிவர் சிடி 2001 யூக்ளிட் அவென்யூ ஓஹி யோவில் (வட அமெரிக்கா) வைத்து நடைபெறப் போகிறது ஜெயஜெய தேவி நாட்டிய நாடகம்.

கீழாம்பூர்



# வாழும் போதே ஒரு வரலாறு

சைதை பாரதி கலைக் கழகம் தன் கவியரங்கக் கூட்டத் துடன் ஆசிரியர் கலைமாமணி விக்கிரமன் அவர்களின் பிறந்த நாள் விழாவையும் சிறப்பாக நடத்தியது.

கூட்டத்திற்குக் கவிஞர் மதிவண் ணன் தலைமை தாங்கினார். விழாவில் சிலம்பொலி செல்லப் பன் சிறப்புரை ஆற்றினார்: பாரதி கலைக் கழகத் தலைவர் பாரதி இரா. சுராஜ், பின்னலூர் மு. விவேகானந்தன் எழுதிய 'வாழும் போதே ஒரு வரலாறு' என்ற நூலை அறிமுகம் செய்து வைத்தார். அறிஞர் பெருமக்கள் பலர் விழாவில் கலந்து கொண்டு கவிமழையில் நனைய வைத்தனர்.

ஆசிரியர் கலைமாமணி விக்கி ரமன் அவர்களுடைய ஏற்புரை யுடன் விழா இனிது முடிந்தது.

# எழுத்தாளர் தின விழா

அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கத்தின் புதுச்சேரி மாநிலக் கிளையின் சார்பில் கலைமாமணி டாக்டர் விக்கிரமன் அவர்களின் 66 ஆவது பிறந்த நாளையொட்டி ஆண்டுதோறும் மார்ச் 19 ஆம் நாள் எழுத்தாளர் தினமாகக் கொண்டாடிட ஏற்பாடு செய்யப்பட்டது. அதன்படி எழுத்தாளர் தின தொடக்க விழா புதுச்சேரிக்கு அருகேயுள்ள பிள்ளைச்சாவடியில் அமைந்துள்ள ஆனந்த ரங்கப்பிள்ளை அரசு இடைநிலை பள்ளியில் நடைபெற்றது. புரவலர் வேல். சொ. இசைக்கலைவன் அவர்கள் தலைமை ஏற்க, வழக்கறிஞர் கி. ரங்கநாதன் முன்னிலை வகித்தார். மாண்புமிகு கல்வி அமைச்சர் திரு. அ. காந்திராஜ் அவர்கள் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு எழுத்தாளர் தின தொடக்க விழாவுரை நிகழ்த்தினார். (படம் மேலே)

விழாவில் சமூகநலத் துறை இயக்குநர் சுந்தரவடிவேலு, தலைமை ஆசிரியர் சி. கல்யாண சுந்தரம், பள்ளியின் கண்காணிப்பாளர் கருணாகரன், புலவர் தாமரைக்கண்ணன் உட்பட ஏராளமானோர் கலந்து கொண்டனர்.

அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கத் தலைவர் கலைமாமணி விக்கிரமன் அவர்கள் எழுத்தாளர் தின விழாவை அரசு விழாவாகக் கொண்டாட வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். முன்னதாக எழுத்தாளர் புதுவை நித்திலன் வரவேற்றார். விழாவை ஏற்பாடு செய்திருந்த புதுச்சேரி மாநிலக் கிளை அமைப்பாளர் பாஞ். இராமலிங்கம் நன்றி கூறினார்.

எழுத்தாளர் தின மாலை விழா புதுச்சேரி திருவள்ளுவர் அரசு மேநிலைப் பள்ளியில் நடைபெற்றது. திரு. சிவ. கண்ணப்பா விழாவிற்குத்தலைமை வகித்தார். திரு. ஆ. ராஜகோபால் முன்னிலை வகித்தார். முன்னாள் கல்வி அமைச்சர் நா. மணிமாறன் அவர்கள் திரு. க. நாராயணசாமி எழுதிய 'வீராம்பட்டினம்' எனும் நூலினை வெளியிட வழக்கறிஞர் கி. அரங்கநாதன் பெற்றுக் கொண்டார்.

கலைமாமணி டாக்டர் விக்கிரமன் அவர்கள் தேசிய நல்லாசிரியர் விருது பெறவிருக்கும் புலவர் புதுவை நாகி, திருமதி விசாலாட்சி தங்கப்பா ஆகியோருக்கும் எழுத்தாளர் முகமது ஆரிப் மியான், அந்தமான் முகவை முத்து, கடலூர் கதிர் முத்தையன் ஆகியோருக்கும் பாராட்டு நற்சான்றிதழ்களை வழங்கிச் சிறப்புரையாற்றினார். புலவர் தாமரைக் கண்ணன் நூல்களை அறிமுகம் செய்து வைத்தார். திரு. பா. பத்மநாபன், திரு. சி. கல்யாணசுந்தரம் ஆகியோர் பாராட்டிப் பேசினார்கள். முன்னதாக அரங்க மு. முருகையன் வரவேற்றார். திரு. எஸ். குமாரகிருஷ்ணன் நன்றி கூறினார். விழாவில் முன்னாள் தலைமை நீதிபதி எஸ். ராமலிங்கம், டாக்டர் ரத்தின ஜனார்த்தனன், புலவர் அறிந்தார்க்கினியனார், புலவர் திருமுருகன், அரிமதி தென்னகன், சீனு, ராமசந்திரன் உட்பட ஏராளமானோர் பங்கேற்றுச் சிறப்பித்தனர். ●



# கங்காபுரிக் காவலன்

## 10. பிரிந்தவர் கூடியபோது..



சிற்பி மாணிக்க சேகரன், மறு நாள் புதுத் தெம்புடன் கண்விழித்துப் பார்த்த போது அங்கே வீரமாதேவி இல்லை. அந்த அறை முழுவதும் நறுமண வாசனை பரவி யிருந்தது. கோலமிடப்பட்டிருந்தது. மூலை யில் குத்து விளக்கொன்று ஏற்றப்பட் டிருந்தது. அதன் அருகே சிறு விநாயகர் சிலை ஒன்று வைக்கப்பட்டிருந்தது. விநாயகர் பாதத்தருகே முல்லை மலர் தூவப்பட்டிருந்தது. அருகம்புல் மாலை யாகத் தொடுக்கப்பட்டு அணிவிக்கப்பட் டிருந்தது. சிறு சட்டியிலிருந்து குங்கிலியப் புகை நறுமணம் பரப்பிக் கொண்டிருந்தது. குங்கிலியத்தின் மணத்துடன் சேர்ந்து புது வித மணம் அங்கு எழுந்து பரவியது. அந்த நறுமணத்திற்கான பொருள் கடல் கடந்த நாட்டினின்று வந்தது என்று மாணிக்க சேகரன் அறிவான். அந்த அறைக்குள் வேறு யாரோ வந்து சென்றிருக்க வேண் டும். உள்ளே பாத்திரங்கள் எழுப்பும் ஒலி யுடன் வளையல்கள் குலுங்கும் மெல்லிய ஓசையும் எழுந்தது.

அவனுக்குப் பசித்தது. எழுந்து உலவச் செல்ல வேண்டும் என்ற தெம்பு ஏற்பட்டது. அவனால் எழுந்திருக்க முடிந்தது. தரை யில் பாதங்களை ஊன்ற முடிந்தது. சோர் வில்லாமல் புதிய சுறுசுறுப்பு உடலில் பரவி யிருந்ததை உணர்ந்தான்.

மருத்துவர் அனுமதி இல்லாமல் எழுந்து நடமாடக் கூடாது என்பதை அவன் அறி வான். அவன் அருகே இருந்து பணிவிடை செய்யும் பணியாளரைக் காணவில்லை.

ஆற்றங்கரைக்குச் சென்று அமிழ்ந்து நீராட வேண்டும் என்ற உந்துதல் எழுந்தது. பழையாறையில் இருக்கும்போது அரிசிலாற் றிலோ, காவிரியிலோ நீராடாமல் இருப் பதா? என்ன பாவம் செய்தேனோ - இவ் வாறு கட்டிப் போட்டது போல் கிடப்பதற்கு.

மாணிக்கசேகரன் விழிகளை மூடிக் கொண்டான். அவனுடைய இஷ்ட தேவ தையை மனத்தில் எண்ணிக் கொண்டு மௌனமாக இருக்க முயன்றான். இவ் வளவு நாட்கள் நினைவில்லாமல் இருந் ததும் ஒருவிதத் தியானம்தானே!

திடீரென்று, பின்புறமிருந்து மூடியிருந்த அவன் விழிகளை இளம் பூங்கரங்கள் மூடின. அல்லித் தண்டோ அல்லது அன் னத்தின் தூவியோ என்று அவன் ஒரு கணம் திகைத்தான். அந்த மென்மையான பூங் கரத்திற்கு உரியவளின் வளைக்கரங்களைத் தன் இரு கரங்களாலும் பற்றினான்.

வளையல்கள் ஓசைப்படுத்தின. மெல் லிய மணம் மிக அருகே சூழ்ந்தது. அவள் விடும் மூச்சு அவன் தோள்களைத் தழு

# விக்கிரமன்

வின, பெண்மை வந்து விழிகளைத் தழுவ வும் திடீரென அவன் மனத்தில் உற்சாகம் பொங்கியதால், "யாரது" என்று கேட்டான். உரிமையில்லாதவர்கள் அவ்வளவு தைர்ய மாக அவனைத் தொட முடியாது என்பது அவனுக்குத் தெரியாதா?

வளைக்கரத்தை மெல்ல விலக்க முயன் றான்.

"யாராக இருக்கும்! ஒருவேளை - ஒரு வேளை வீரமாதேவியாக இருக்குமோ?" அவன் நினைப்பது மாபெரும் தவறாக இருக்கலாம். அப்படிப்பட்ட எண்ணம் அவ னுக்கு வந்ததே பெருங் குற்றமல்லவா?

மீண்டும், "யாரது?" என்று குரல் கொடுத் தான். கரங்களை விலக்க முடியவில்லை. அந்த ஸ்பரிசத்தை நீக்க வேண்டாம் என்று தோன்றியது. ஆனால், அவ்வாறு துணி

வுடன் உரிமையுடன் தன்னைத் தொடக் கூடியவள் யாராயிருக்க முடியும்?

"யார் என்று சொல்லுங்கள் பார்க்கலாம்?" என்ற குரல் வரும், குரலிலிருந்து யார் என்று அறிந்து கொள்ளலாம் என்று எண்ணினான். தோளின்மீது படர்ந்த மெல்லிய மூச்சுக் காற்றைத் தவிர வேறு அரவம் இல்லை. கண்ணை மூடிட - கரங்களின் அழுத்தம் அதிகரித்தது!

யாராக இருக்கும்? இளம் பெண்ணாக இருக்க வேண்டும். இந்த நிலையில் வேறு யாராவது பார்த்தால் தவறாக நினைத்து விடப் போகிறார்களே என்ற அச்சம் வேறு -

தலையை இப்படியும் அப்படியும் அசைத்தான். அவனால் கரங்களை நகர்த்த முடியவில்லை.

"என்னால் ஊகிக்க முடியவில்லை. ஓர் ஆடவனை உரிமையுடன் தொடக் கூடியவள் - என்னை தொடக் கூடியவள் ஒருத்திதான் இருக்கிறாள். அவளாக இருந்து விட்டால் நான் மிகவும் அதிர்ஷ்டசாலி'' என்றான் மாணிக்க சேகரன்.

அடுத்த கணம் அவன் விழியை அழுத்தியிருந்த தன் கரங்களை எடுத்துவிட்டு அவனை ஆரத் தழுவிக் கொண்டாள். அவள் பேசவில்லை. விம்மினாள். அவள் விழிகளிலிருந்து நீர்த் துளிகள் அவன் கன்னத்தை ஈரமாக்கின.

"யார், யார் குமுதமா? என் குமுதமா?" என்று பரபரப்புடன் உணர்ச்சி மிகுதியால் கேட்டவாறு, மாணிக்க சேகரன் அவளை மெல்ல அணைத்துக் கொண்டான். பிரிந்த



வர் கூடியபோது பேச்சு எதற்கு? இருவர் விழிகளும் ஒன்று கலந்தன.

"குமுதம்.....குமுதம், நான் காண்பது கனவா, நனவா - நீ எப்போது வந்தாய்? எங்கிருந்து வந்தாய்? சொல் சொல் குமுதம்" என்று மாணிக்க சேகரன் பரபரத்தான். அவள் கன்னத்தை வருடினான். தோள்களை ஆசையுடன் தொட்டான். அவள் விரல்களைத் தன் விரல்களுடன் கோத்துக் கொண்டான். என்ன செய்வது என்று தெரியாமல் பரபரத்தான்.

"இந்தக் கஞ்சியைக் குடியுங்கள். பிறகு பேசுவோம். நேரம் போவது தெரியாமல் பேசுவோம். தங்களுக்குப் பால் கலந்த கஞ்சி தருமாறு எனக்குக் கட்டளை. உணர்ச்சி வயப்படாமல் தங்களைக் கவனித்துக் கொள்ளுமாறு கட்டளை. கரும்பைக் கண்ட யானையாகாமல், மாணிக்கத்தைக் காத்து நிற்கும் நாகமாயிருக்குமாறு எனக்குக் கட்டளை" என்று கூறி, கலயத்திலிருந்து சிறு குவளையில் கஞ்சியை எடுத்து ஊற்றிப் பருகுமாறு வேண்டி, குவளையை அவன் இதழ் அருகே கொண்டு சென்றாள். சிற்பியைத் தன் மீது சாய்த்துக் கொண்டாள். அவள் மேனி மெல்ல நடுங்கியது.

"தாங்கள் பிழைத்தது பெருமான் அருளாம். தங்கள் உடல் நிலை முற்றும் குணமாகும் வரை பொறுப்பு என்னுடையதாம். நான் அதிகம் பேசக் கூடாதாம். நான் எங்கிருந்து வந்தேன், இவ்வளவு நாள்கள் எங்கிருந்தேன், தங்களைக் காணாது எங்கெல்லாம் அலைந்தேன் என்பவை பற்றியெல்லாம் பேசித் தங்களுக்கு வருத்தம் ஏற்படுமாறு செய்யக் கூடாதாம். வருத்த மிகுதியால் உணர்ச்சி வயப்பட்டால் மீண்டும் தங்கள் நோய் திரும்பி விடுமாம். அப்படியெல்லாம் என்னால் தங்களைப் பாதுகாக்க முடியாவிட்டால் இந்த இடத்தை விட்டே, ஊரை விட்டே சென்று விடுமாறு கட்டளை. கொஞ்சம் கொஞ்சமாகக் கஞ்சியை அருந்துங்கள்" என்று குமுதவல்லி மெல்லப் பேசினாள். பேச வேண்டிய



வற்றை, சொல்ல வேண்டியவற்றைக் கட்டுப்பாட்டுடன் அடக்கிக் கொள்வதால் எழுந்த திணறலும், அதனால் அவளிடமிருந்து சொற்கள் உடைந்து உடைந்து வருவதும் அழுத்தமாக எழும் பெருமூச்சும் அவள் தன் உணர்ச்சியைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறாள் என்பதைப் புலப்படுத்தின.

அவன் அவளையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

"என்னை விழுங்கிவிடுவது போல் பார்க்காதீர்கள். இந்தக் கஞ்சியைக் கொஞ்சம் கொஞ்சமாக அருந்துங்கள். உடலுக்குப் புதுத் தெம்பு வரவேண்டும். தெம்பு ஏற்பட்டால்தான் என்னுடன் பேச முடியும்" என்றாள்.

"உன்னைப் பார்த்தவுடனேயே வயிறு நிறைந்து விட்ட உணர்ச்சி; புதிய உற்சாகம் பொங்கி உடல் முழுமையும் பரவுவது போன்ற உணர்ச்சி". மாணிக்க சேகரன் மெல்லச் சிரித்தான் அவளுடைய ஒரு கரத்தைப் பிடித்துக் கொண்டான். மற்றொரு கையில் கஞ்சிக் குவளை.

"கையை விடுங்கள்; ஒரு வாய்கூடப் பருகவில்லை. என் வேண்டுகோளுக்கு என்ன பயன்?" குமுதம் கோபப்படுவதுபோல் பேசினாள். முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

"எவ்வளவு நாட்களாகி விட்டன உன்னைப் பார்த்து. ஒரு யுகமாகியிருக்குமா?"

"சொல்ல மாட்டேன்; கஞ்சி ஆறுகிறது".

"என் நெஞ்சத்துணர்வுகளும் ஆறி விடுவதற்கு முன்பு நான் கேட்பதற்கெல்லாம் மறுமொழி சொல்ல வேண்டும்".

"நீங்கள் கேட்பதை, கேட்க நினைப்பதை, கேட்காததை - எல்லாவற்றிற்கும் நான் மறுமொழி கூறுவேன். நாம் இருவரும் நேரம் போவது தெரியாமல் பேச வேண்டாமா?"

"ஆமாம்" என்று தலையசைதது, அவள் கரத்தை அழுத்தினான்.

"புதிய தெம்புடன் நீங்கள் பேச வேண்டாமா?"

"ஆமாம்".

"அப்படியென்றால் நீங்கள் கஞ்சியை ஒரே மூச்சில் குடித்து விடவேண்டும்".

குமுதம் ஆசையுடன் கூறும்போது அவள் முகத்தில் தேங்கி நிற்கும் பாசத்தையும், கட்டுக்குள் அடங்கியிருக்கும் காதல் உணர்வுகளையும் புரிந்து கொண்டான். அவள் கொடுத்த கஞ்சியை வாங்கிக் குடித்தான்.

"உம்... உம்... மெல்ல... மெல்ல..அதற்காக ஒரே மூச்சில் குடிக்கக் கூடாது" குமுதம் மெல்ல அவன் மார்பைத் தடவினாள். இது நாள் வரை வாடியிருந்த மலர் மீண்டும் பூத்தது.

"குமுதம், இந்த நோய் வந்ததால் தானே உன் மெல்லிய கரங்கள் என் மார்பைத் தொடுகின்றன. உன்னை விட்டுப் பிரிந்திருந்ததால்தானே நீ என் அருகே அமர்ந்து உன் மெல்லிய மூச்சுக் காற்றில் என் உடலில் புத்துணர்ச்சியை ஏற்படுத்துகிறாய்" என்று கூறி அவளுடைய இரு கரங்களையும் பற்றித் தன் அருகே அமர்த்த முயன்றான்.

"எழுந்து சென்று கதவை மூடிவிட்டு வருகிறேன். கொஞ்சம் நடக்க வேண்டும் என்று தோன்றுகிறது" என்று எழ எத்தனித்தவனை, குமுதம் தடுக்க, "பகலில் கதவை மூடக் கூடாது. இது மருத்துவமனை" என்றாள்.

"நாம் பேசவேண்டும்".

"பேசுவோம். அதற்காகக் கதவை மூட வேண்டுமா?"

"யாராவது, வந்துவிட்டால்?"

"வரட்டுமே."

"நம் பேச்சு தடைப்படும். யுகயுகமாக நாம் பிரிந்திருந்த கதையைப் பேச வேண்டும். விராலிமலைக்கு அருகே நாம் பிரிந்ததிலிருந்து இந்தக் கணம் வரை நடந்தவற்றைப் பேச வேண்டும். நீ எப்படி இங்கு வந்தாய் என்பதை விவரிக்க வேண்டும். இவ்வளவு காலமாக உனக்கு ஏற்பட்ட இன்னல்களை, துன்பங்களை நீ எடுத்துச் சொல்ல வேண்டும். உனக்குத் தொல்லை கொடுத்தவர்களை, மறைத்து வைத்தவர்களை நீ அடையாளம் காட்ட வேண்டும். என் அருமை குமுதா, சோழநாட்டுப் பேரரசர் என்மீது அன்பு கொண்டவர். மரியாதை மிகுந்தவர். அவரது காதல் துணைவியும் அவ்வாறே என்மீது அன்பு மிகுந்தவர்.

நான் என்ன சொன்னாலும் அதை நிறை வேற்றக் கூடியவர்கள். சொல் குமுதா - சொல்" மாணிக்க சேகரன் வேகமாகப் பேசினான், பரபரப்புடன் பேசினான். நடந்தவற்றை எல்லாம் உடனே அறிந்து கொள்ள வேண்டும் என்ற துடி துடிப்புடன் பேசினான். களைப்பு மிகுந்தது. அதைக் கவனித்த குமுதம் பேசுவதைத் தடுக்கவும், நிறுத்தவும் எண்ணி, குளிர்ந்த நீரால் அவன் உதடுகளைத் துடைத்து, அவனை மெல்லப் படுக்க வைத்து, "என் அன்பே! உங்களை விட எனக்கு ஆர்வம் மிக அதிகம். உங்க ளைப் பிரிந்திருந்த கால நிகழ்ச்சிகளை அறியும் ஆவல் எனக்கிருக்காதா! கிணற்று நீரை வெள்ளம் கொண்டு போய்விடாது. நான் இங்கேயே இருக்கப் போகிறேன். உங்கள் அருகேயே இருக்கப் போகிறேன், உங்கள் உடல் நலம் மிகவும் சீராகிப்பய ணத்துக்குத் தக்கவாறு புதிய தெம்பு ஏற் படும்வரை உங்கள் அருகேயே இருக்கப் போகிறேன். சற்று இளைப்பாருங்கள்; உண்ட களைப்பு நீங்கியவுடன் பேசுவோம்" என்று அவனை அமைதிப் படுத்தினாள்.

களைப்பு மேலிட்டது. அவன் விழிகளில் உறக்கம் சேர்ந்தது. இமை மூடக் கண் ணயர்ந்தான். குமுதவல்லி அவன் அரு கேயே அமர்ந்து அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

இதே பழையாறை நகரில் இரண்டு திங் கள்களாக அடை பட்டிருந்த அவளுக்கு, மாணிக்க சேகரன் அதே நகரில் இருப்பது தெரியவில்லை. சிற்பி இருக்குமிடத்தைக் கண்டுபிடித்துத் தருவதில் அரசு அதி காரிகள் மெத்தனம் காட்டியதுதான் அவ ளுக்கு மிக வருத்தத்தை அளித்தது. கேட்ட கேள்விகளுக்கு அவர்கள் சரிவர மறுமொழி தராததுடன், மௌனம் சாதித்தது சந்தே கத்தை அளித்தது. கடைசியாக சோழ அரசி பஞ்சவன் மாதேவியைச் சந்திக்கச் சென்றபோது அதிகாரிகளின் மெத்தனத் திற்கு அரசிதான் காரணம் என்பதை அறிந் தாள்.

சோழ நாட்டின் பெருமையை உலகுக்கு உணர்த்த வேண்டிய சிற்பியை மிகவும் நேசிப்பவள் என்பதை அவர்கள் அறிந் தும், சிற்பி இருக்குமிடத்தைக் கண்டு தரு மாறு அதிகாரிகளுக்குக் கட்டளையிடுவதில் அரசி ஏன் தயக்கம் காட்டுகிறாள் என்பது அவளுக்குப் புரியவில்லை. மாளிகையில் சுகசௌக்கியமாக வாழ எல்லாவித வசதி களும் செய்யப்பட்டன. அந்தப்புரத்தில் வாழும் மகளிர்க்கு அளிக்கப்படும் உபசர ணைகளுக்கும் ஆகார வகைகளுக்கும் குறை வில்லை. பட்டுப் புடைவையும், நறுமணத் திரவியங்களும், அறுசுவை உணவுகளும் அவள் மனத்தை மயக்கவில்லை. பெற்றோ ரைப் பிரிந்து காதலனைத் தேடி அலைந்து அவனுடன் சேரத் துடிக்கும் அவளுக்கு, ஏற்பட்ட வசதியான வாழ்க்கை கசந் தது.

மெல்ல மெல்ல உண்மையை அறிந்தாள். அரசிக்கு ஏற்பட்' குடும்பப் பூசலுக்குத்



சென்னை ராயபுரத்திலிருந்து வாலாஜாபாத் செல்லும் இருப்புப்பாதையையும் இப்போதுள்ள பர்மா பஜார் உள்ள இடம் முன்பு மைதானமாக உள்ளதை இப்படத்தில் காணலாம். படம் : ரகமி

தான் பலியாவதை அறிந்தாள். இராசேந்திர சோழ தேவரின் உள்ளத்தில் குடி கொண்டிருக்கும் வீரமாதேவி எடுக்கும் பெரிய கோயிலைச் சிற்பப் பெட்டகமாக்கும் பெரும் பொறுப்பை மாணிக்க சேகரன் ஏற்றிருக்கிறார். தன் காதலியைக் காணாது தவிக்கிறார். சிற்பியின் உற்சாகத்தைக் குறைத்து, காதல் நோயால் சிற்பியைப் பித்துப் பிடித்தவர் போலாக்கி, சிற்பப் பணிக்குத் தடை விதிப்பது அரசியின் திட்டம். கலைஞர்கள் அழகுணர்வு மிக்கவர்கள். சிருங்காரத்தை ரசிப்பவர்கள். நடனக் கலையில் புலமை பெற்ற, இயற்கையாக அழகு வடிவமான வீரமா தேவியிடம் சிற்பி நெருங்கிப் பழகும் வாய்ப்பை ஏற்படுத்தி, வீரமாதேவிக்கு அவப் பெயர் ஏற்படுத்தினால், இராசேந்திர சோழர் சீற்றம் கொண்டு வெறுப்புற்று அவள் உறவைத் துண்டித்துக் கொள்ளலாம் என்ற கபடமான சூது நிறைந்த திட்டம் அரசியின் மனத்தில் உருவாகியதன் விளைவுதான், குமுதமும் மாணிக்க சேகரனும் சந்திக்க முடியாது செய்தது.

மெல்ல மெல்ல, அரசியின் இந்தத் தீய நோக்கத்தை குமுதம் அறிந்தாள். மாணிக்க சேகரனைச் சந்திக்க அல்லாமல் அரசி சூழ்ச்சி செய்வதன் காரணம் அதுவே என்பதை உணர்ந்தாள். அவளால் மாளிகைச் சுக வாழ்க்கையை ஏற்க முடியுமா?

அரசி பஞ்சவன்மாதேவி, வடக்கே இராசேந்திர சோழரின் அழைப்புக்கிணங்கப் புறப்பட்ட பிறகுதான், அந்தப்புரத்திலுள்ள வீரமாதேவியிடம் மதிப்பும் மரியாதையும் கொண்ட பணிப்பெண் ஒருத்தியின் மூலம், அரசியின் சூழ்ச்சிகளை அறிந்தாள்.

மாணிக்க சேகரன் கடும் காய்ச்சலால் பல நாள்களாகப் பழையாறையில் மருத்துவக் கூடத்தில் தங்கியிருக்கும் செய்தி அறிந்தவுடன், அந்த இடத்திற்குச் செல்ல குமுதம் துடிதுடித்தாள். ஆனால், மாளிகையை விட்டு வெளியே செல்லக் கட்டுப்பாடு இருந்தது.

ஒரு நாள் - மாணிக்க சேகரனைக் காண வீரமா தேவியும் கருவூர்ச் சித்தரும் வருவதை அறிந்தாள். கருவூர்ச் சித்தரைச் சந்திக்கச் செல்வதாகத் தெரிவித்து மாளிகையில் இருந்து வெளியேறுமாறு பணிப்பெண் யோசனை கூறினாள்.

தொலைவில் இருந்தே கருவூர்ச் சித்தரையும், வீரமா தேவியையும் கண்டாள். ஆனால் மருத்துவ மனையை நெருங்க முடியவில்லை. பழையாறையினின்று அரசி சென்ற பிறகு ஒரு நாள் நண்பகலில் குமுதம், மருத்துவக் கூடம் நோக்கி விரைந்தாள். அங்கே வீரமாதேவியைச் சந்தித்து அவள் பாதங்களைக் கெட்டியாகப் பற்றித் தனக்கு ஏற்பட்ட துன்பத்தை விவரித்தாள்.

வீரமாதேவிக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லை இல்லை. அதே போது, அரசி பஞ்சவன் மாதேவியிடம் ஏற்பட்ட கோபத்திற்கும் அளவில்லை. மாணிக்க சேகரனை இயமன் வாயிலிருந்து மீட்ட சித்தரின் மூலிகை மருந்துடன், மாணிக்க சேகரனின் மன ஏக்கத்தை குமுத விஜயம் தீர்க்கும் என்பதை உணர்ந்த, வீரமாதேவி குமுத வல்லியை முழுமையாகப் பயன்படுத்தத் தீர்மானித்தாள்.

குமுதவல்லியின் பணிவிடையால், மாணிக்க சேகரன் முற்றும் தேறி, பழைய தெம்புடன் சிற்பப் பணியில் ஈடுபடுவான் என்ற நம்பிக்கையில் மாணிக்க சேகரனை அவளிடம் ஒப்படைத்து விட்டுக் கோயில் பணியை முழு மூச்சுடன் முடிக்கக்கானகப் பகுதிக்கு விரைந்தாள்.

மாணிக்க சேகரனிடம் நடந்தவற்றை குமுதம் ஒன்று விடாமல் விவரித்தபோது மாணிக்க சேகரனுக்கு மகிழ்ச்சியும் அதே போது கவலையும் சேர்ந்தன.

அவன் கவலைக்கும், அச்சத்திற்கும் காரணம் இல்லாமலில்லை. மறு நாளே பழையாறை அரசியின் மாளிகையில் இருந்துச் சில வீரர்கள், மருத்துவ மனைக்கு வந்தனர். மீண்டும் அவளை மாளிகைக்கு அழைத்து வருமாறு அரிந்தவன் மாதேவியின் கட்டளை என்று தெரிவித்தனர்.

எந்த இடர்ப்பாடு, எதிர்ப்பு, அரச கட்டளையால்ஏற்பட்டாலும் மாணிக்க சேகரனை விட்டுப் பிரிய குமுதவல்லி விரும்பவில்லை.

(தொடரும்)

சென்னை - 2இல் உள்ள ஆர்.ஜே. பிராசஸ் ஆஃப்செட் அச்சகத்தில் அச்சிட்டவர் : ஆர். ஜனார்த்தனன், ஸ்ரீராம் டிரஸ்ட், சென்னை - 600 001 சார்பில் வெளியிட்டவர் : ஏ.வி.எஸ். ராஜா. ஆசிரியர் - கலைமாமணி விக்கிரமன், நிர்வாக அலுவலகம், 145, லிங்கச் செட்டி தெரு, த.பெ.எண் : 5043, சென்னை - 600 001. தொலைபேசி : 5228545, 510535. ஆண்டுச் சந்தா ரூ. 72